கூறுகளில் ஒன்றாக விளங்குவது. இதனை இதயத்தின் பசியென்றும், ஆன்மாவின் தாகமென்றும் பாராட்டுவாருண்டு.

**" காதலென்பது உடற்பசி உள்ளப்பசி உயிர்ப்பசி**
**பிறவிப்பசி"**[20]

என்று காதலின் பொருண்மையைக் கூறுகிறார் வ.சுப.மாணிக்கனார்.

எல்லாக் காலங்களிலும், எல்லா நாடுகளிலும் கவிஞர்களைக் கவர்ந்து வந்துள்ள பொருள் காதலென்பதில் கருத்து வேறுபாடில்லை. உலக இயக்கங்களில் குறிப்பிடத்தக்கதொரு பகுதி காதல் பற்றியதாக அமைத்திருப்பது இதன் சிறப்பைக் காட்டுகின்றது.

சங்கப்புலவர் பாடிய செய்யுட்களிற் பெரும்பான்மையானவை ஆண் பெண்ணுறவு பற்றியனவாகும். இதனால் சங்கச் சான்றோர் அதற்களித்த சிறப்பு உணரப்படும். இச்சான்றோர் ஆண் பெண்ணுறவின் சமூகக் கூறுகளையும், காதலர்தம் உளவியற் கூறுகளையும் நன்கு உணர்ந்து பாடியுள்ளனர். இதனால், அவர்களின் செய்யுட்கள் கற்பனைப் படைப்புகளேனும் உண்மை மாந்தரின் உணர்வு வெளிப்பாடுகளாகவே காட்சி தருகின்றன. இச்சிறப்பினாற்றான் வ.சுப மாணிக்கம்,

**" காதலையும் அதன் உணவையும், அதன் கல்வியையும்**
**தெளிய வேண்டின், தெளிவுக்கு வேறிடமில்லை,**
**தமிழ்ப் பேரினம் கண்ட அகத்திணையை நாடுக;**
**தொல்காப்பியம், சங்க இலக்கியம் திருக்குறள் என்ற**
**முத்தமிழ் நூல்களைக் கற்க முந்துக"**[21]

என அறிவுறுத்தினார்.

சங்ககாலச் சமுதாயத்தில் திணைவழிப்பட்ட குறவர், பரதவர், ஆயர், உழவர் ஆகியோரும், தொழில் வழிப்பட்ட தச்சர், கொல்லர்,

குயவர் முதலியோரும் வாழ்ந்தனர் என்பது முன்பு கூறப்பட்டது. காதல் இவர்கள் அனைவர்க்கும் பொதுவாகப் படைக்கப்பட்டதே எனினும், சங்கப் புலவர்கள் திணை வழிப்பட்ட சமுதாயத்தின் ஆளும் உரிமை கொண்ட பிரிவினரையே தலைமக்களாகக் கொண்டு இலக்கியம் படைத்தனர். சிறுபான்மையான செய்யுட்களில், திணைத் தலைமக்களல்லாத குடிமக்களும் காதலர்களாகக் காணப்படுகின்றனர்.

வெற்பன், சிலம்பன், புலம்பன், துறைவன், ஊரன் என்பன திணைத் தலைவர்க்குரிய பெயர்களாகும். காதல் தலைவர்களும் இப்பெயர்களாற் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களின் தகுதிக்கேற்பவே தேரூர்ந்து செல்வோராகவும், மெய்க்காவலர் புடை சூழச் செல்வோராகவும் காட்டப்படுகின்றனர்.

தலைவியரின் இல்லங்கள் செல்வச் செழிப்பு மிக்கனவாக விளக்கப்படுகின்றன. வீடுகளைக் காவலர் காத்து நிற்கின்றனர். செவிலியர் பலர் இல்லத்தில் இருந்து பணி செய்கின்றனர். இதனை,

**"ஏர்கெழு செல்வத்து எந்தை"**[22]

என்றொருத்தி பெருமைப் படப் பேசுகின்றாள்.

**"தொலையா வேலின் வண்மகிழ் எந்தை"**[23]

என்று இன்னொரு தலைவி தன் தந்தையின் பெருவீரத்தையும் தலைமைப் பாட்டையும் விளக்குகின்றாள்.

பாலைத்திணைச் செய்யுட்களில் பொருள்வயிற் பிரிவோர் பெரும் செல்வர்களாகவே காட்டப்பட்டுள்ளனர். முல்லைத் திணைச் செய்யுட்களின் தலைவர்கள் வேந்தனுக்காகப் படை நடத்திச் சென்று பாசறையில் தங்குவோராகவும், பாகன் இயக்கத் தேரூர்ந்து வருவோராகவும் காட்டப்படுகின்றனர். மருதப் பாடல்கள் சில அரசனைத் தலைவனாகக் காட்டுகின்றன. ஏனையவை ஊராளும் தலைமகனாகக்

காட்டுகின்றன. மருதத் தலைவர்களின் பெருமையைப் பாணன் பாடித்திரிவதாகவும் குறிப்புண்டு.

காதலன் காதலி என்னும் இருவரும் ஓரூரினராகவோ வெவ்வேறு ஊரினராகவோ அமையலாம் இதுவே உலகியலிற் காண்பது. ஆனால், சங்கச் சான்றோர் அருகிய நிலையிலேயே ஒரூர்க்காதலர்களைப் படைத்துக் காட்டியுள்ளனர்.

பிள்ளைப் பருவத்தில் ஒருவரோடொருவர் சண்டையிட்டுச் செவிலியர் தலையிட்டு அமைதியுண்டாக இடம் தந்தோர் கணவனும் மனைவியுமாக வாழ்வது கண்டு, அவர்களைக் காதலர்களாக ஒன்றுபடவைத்த உயர்ந்த பாலை ஊரார் வாழ்த்துவதாக ஒரு செய்யுள் கூறுகின்றது. விளையாட்டுப் பருவத்திற் பெண்கள் ஆர்வத்துடன் இழைத்த சிற்றிலைச் சிதைத்தும், வரிப்பந்து கொண்டோடியும் நோகச் செய்த சிறுவன், பருவ மடைந்ததும் அவருள் ஒருத்திக்குக் காதலனாகும் நிலையைக் கபிலர் கலித்தொகைச் செய்யுளொன்றில் காட்டியுள்ளார். இங்ஙனம் காதலர் இருவரையும் ஓரூரினராகக் காட்டும் செய்யுட்கள் அருகியே காணப்படுகின்றன.

பெரும்பான்மையான காதலர் ஒரே திணையைச் சார்ந்தவராயினும் வெவ்வேறூரினராகவே படைக்கப்பட்டுள்ளனர். ஒரு நெய்தல் தலைவன் தன் தேரைச் சேய்மையில் நிறுத்திவிட்டுத் தலைவியும் தோழியும் நிற்குமிடத்திற்குச் சென்று, 'நும்மூர் யாது' என வினவுகின்றான். அந்நிகழ்வை,

**" தான் இவண் வந்த காலை நம்மூர்க்**
**கானலம் பெருந்துறைக் கவின் பாராட்டி**
**ஆனாது புகழ்ந்திசி னோனே"**[24]

எனத் தோழியொருத்தி கூறுகின்றாள்.

**“ ஒரு நாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்**

**தம்பதி மறக்கும் பண்பின் எம்பதி**

**வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப”[25]**

எனத் தலைவனை வேண்டுகிறாள் மற்றொரு தோழி.

**கணவன் மனைவி உறவு**

ஒவ்வொரு சமூகமும் தன் பண்பாட்டு வளர்ச்சிக்கும் தேவைக்கும் ஏற்பக் கணவன் மனைவி உறவு பற்றிய கொள்கைகளை வகுத்துப் போற்றி வருகின்றது. இக்கொள்கைகளை அளவுகோலாகக் கொண்டு ஒரு சமூகத்தின் பண்பாட்டுச் சிறப்பை அளந்தறியலாம். பண்பட்ட தமிழினம் பன்னெடுங் காலத்திற்கு முன்பே பல நிறுவனங்களை உருவாக்கி, ஒவ்வொன்றையும் சார்ந்த கொள்கைகளையும் உருவாக்கிப் போற்றியுள்ளது. கணவன் மனவை உறவு பற்றித் தமிழர்கள் உருவாக்கியிருந்த கொள்கைகள் சங்க காலத்திலேயே தொன்மையானவைகளாகக் கருதப்பட்டமையைத்,

**“ தொன்றியல் மரபின் மன்றல் அயர**

**பெண் கோள் ஒழுக்கம் கண் கொள நோக்கி”[26]**

எனும் திருமணம் பற்றிய சங்கவிலக்கியக் குறிப்பால் நன்கு அறியலாம். திருமணச் சடங்குகள் இயற்றப்படுதற்கு முன்னர் ஆண் பெண்ணுறவில் நெகிழ்ச்சியான போக்கு நிலவிற்றென்பதனைப்,

**“ பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**

**ஐயர் யாத்தனர் கரணம் என்ப”[27]**

எனத் தொல்காப்பியர் சுட்டுவதன் மூலம் உணரலாம். திருமணச் சடங்கு வரையறுக்கப்பட்ட காலம் இன்னதெனக் கூறவியலாதெனினும் அது தொன்மையான காலமெனத் துணியலாம் பண்டைத் தமிழகத்தில் வழக்கிலிருந்த திருமண முறைகள், கணவன் மனைவியரிடையே அமையும் உறவின் தன்மைகள் பற்றிய குறிக்கோள்கள், நடைமுறைக்

கூறுகள், உளவியற் கூறுகள் ஆகியவை பற்றிச் சங்க இலக்கியம் பல செய்திகளைத் தன்பாற் கொண்டுள்ளது. அவற்றைத் தொகுத்தும் வகுத்தும் இங்கு காணலாம்.

தன் ஒப்புதலின்றி வயது வந்த ஆணும், பெண்ணும் நெருங்கி உறவாடுதலுக்குச் சங்கச் சமுதாயம் உடன்படவில்லை என்று தெரிகின்றது. களவுக் காலத்தில் ஊர்ப் பெண்டிர் கூறும் அலர் சமூகத்தின் எதிர்ப்பையே காட்டுகின்றது. அலர் மொழிந்த ஊரார் என்றறியப் படுகின்றது. சமூகத்தின் ஒப்புதல் ஆண் பெண்ணுறவிற்கு எத்துணை இன்றியமையாததாகக் கொள்ளப் பட்டதென்பது இதனால் உணரப்படுகின்றது.

காதற் பாடல்களின் மிகுதியைக் கண்டு, அன்று காதல் மணமே மிகுதியாக நடந்ததென்று கருதிவிடலாகாது. இதனை மெய்ப்பிக்கும் வகையில்,

> **"களவொழுக்கத்தில் காதல் நெஞ்சங்கள் விம்மி எழுகின்றன, விரைந்து அலைகின்றன, இயல்பு கடந்து எண்ணுவதும் சொல்லுவதும் செய்கின்றன. இவ்எண்ணக் கிளர்ச்சிகள் பாடலுக்கு விறுவிறுப்பைக் கொடுத்தலின், களவு சான்றோர்கள் பாடு பெற்றது"**[28]

என்று வ.சுப. மாணிக்கம் கூறுவது பொருத்தமாகும்.

மணநிலை ஒரு சமுதாயத்தை உருவாக்கும் பெருநிலையாகும். புதிய சமுதாய இனங்களில் மணநெறிகள் ஒழுங்குபடுவதில்லை. தமிழ்ச் சமுதாயம் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே பயின்று பரந்து ஓங்கித் தமிழ் மொழிபோல் ஒழுங்குபட்டுவிட்டது மணமுறைகள் நெறிப்பட்டுவிட்டன.

மக்கள் மணங்கள் வழிப்பட்டன. ஆதலில் கொடுப்பக் கொள்ளுதல் என்னும் முறை எல்லார் நெஞ்சத்தும் இயல்பாய்ப் பதிந்து கிடந்தது என வ.சு.ப மாணிக்கம் பண்டைத் தமிழகத்தில் திருமண முறை ஒழுங்குற்றமை பற்றிப் பாராட்டியுள்ளார்.

## உறவுவழி மணம் (Cross Cousin Marriage)

ஆரியரிடையே காணப்படாது திராவிடரிடையே மட்டும் காணப்பட்ட சிறப்பாகக் குறிப்பிடப்படும் ஐந்து சமூக மரபுகளுள், ஒருவன் தன் தாய்மாமன் மகளை மணத்தலும், அத்தை மகளை மணத்தலும் இடம் பெறுகின்றன. இன்றளவும் நீடித்துள்ள இம்மரபு சங்க காலத்திலும் இருந்திருப்பது இயல்பாகும். ஆனால், சங்கப் புலவர்கள் களவுத் திருமணத்தைப் பாடுதலை இலக்கிய மரபாகக் கொண்டமையின் உறவு வழித் திருமணத்தைப் பாட்டுக்குப் பொருளாகக் கொண்டிலரெனத் தெரிகின்றது. அக்காலத்தில் இத்தகு நெருங்கிய உறவினர் மணஉறவு கொள்ளும் வழக்கம் இருந்தது என்பது,

**“ யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்”**[29]

என்னும் செம்புலப் பெயல் நீராரின் வாக்கால் நன்கு உணரப்படுகின்றது.

தம் காதலின் சிறப்பைப் பாராட்டிக் கூறும் தலைவன், தானும் தன் காதலியும் முன்பின் அறியாதோரென்றும், தம் தாய்மாரும் தம்முள் உறவினராகானென்றும், அங்ஙனமே தம் தந்தையரும் தம்முள் உறவினரல்லரென்றும், இங்ஙனம் எவ்வகையிலும் உறவினரல்லரேனும் தம் அன்பு நெஞ்சங்கள் கலந்துவிட்டனவென்றும் கூறுகின்றான். இக்கூற்றால் தாய் வழியிலோ தந்தை வழியிலோ உறவுடையார் திருமணம் புரிந்து வாழும் நிலையே பண்டு இயல்பாக இருந்ததென்றும், அதனாலேயே தலைவன் இங்ஙனம் கூறுவதாகச் செய்யுள் செய்தார் புலவரென்றும் அறியமுடிகின்றது.

பெண்விலை **(Bride Price)**

மணமகன் மணமகளின் குடும்பத்தார்க்குக் குறிப்பிட்ட தொகையைக் கொடுத்துப் பெண் கொள்ளும் மரபு பல சமூகங்களிற் காணப்படுகின்றது.

பெண்ணைக் கடத்திச் சென்று மணத்தல், பெண்ணின் தமருக்குப் பணிசெய்து மணத்தல் என்னும் முறைகள் பண்டு பரவலாக இருந்தன. இம் முறைகளில் இருந்த இடர்ப்பாடுகள் கருதி, ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுத்து மணந்து கொள்ளும் வழக்கமேற்பட்டதெனக் கூறப்படுகின்றது.

சங்க காலத்தில் இங்ஙனம் பெண்ணின் தந்தைக்குப் பொருள் கொடுக்கும் மரபு பற்றிய பல சான்றுகள் உள்ளன. இப்பொருள் 'விலை' என்றும், 'பாசிழை விலை' என்றும், மற்றும் 'சிறுவளை விலை' என்றும் பலவாறு பெயர் பெற்றன. இதனை,

**" முழங்கு கடல் முழவின் முசிறி யன்ன**
**நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்"**[30]

என்ற பாடல் வரிகளும் மற்றும்,

**" செந்நெல் உண்ட பைந்தோட்டு மஞ்ஞை**
**செறிவளை மகளிர் பறந்தெழுந்து**
**துறைநணி மருதத்து இறுக்கும் ஊரொடு**
**நிறைசால் விழுப்பொருள் தருதல் ஒன்றோ"**[31]

என்னும் புறநானூற்றுப் பாடலடிகளின் வழியாக, பொருளையும் வளமான ஊர்களையும் கொடுத்து மணம் புரியும் வழக்கிருந்தமை அறியப்படுகின்றது. முல்லை நிலத்து ஆயர்களிடம் இம்மரபு மிகவும் உறுதியாக இருந்தமையைப் பின்வரும் பகுதியான,

“ விலைவேண்டார் எம்மினத்து ஆயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடை, தாம் வீழ்வார் மார்பின்
முலையிடைப் போல, புகின்”[32]

என்னும் கலித்தொகை செய்யுட் பகுதியால் அறியப்படுகிறது. ஏறு தழுவாத நிலையில் மணக்க விரும்புவோர் விலை கொடுத்தலைத் தவிர்க்க இயலாது என்பது இதனால் உணரப்படுகின்றது.

### ஏறு தழுவல்

பெண்ணின் பெற்றோரால் வளர்க்கப்பட்ட கொல்லேற்றினை அதற்கெனக் குறித்த நாளில் அடக்கி வெற்றி கொள்ளும் வீர இளைஞனுக்குப் பெண்ணை மணஞ்செய்து கொடுக்கும் வழக்கம் ஆயர்களிடம் இருந்தமை முல்லைக் கலியால் அறியப்படுகிறது. வேறு சங்க நூல்களில் இதுபற்றி யாதும் சொல்லப்படவில்லை. கொல்லேறு தழுவும் இளைஞர்களையே ஆயர்குடிப் பெண்கள் விரும்பி மணப்பரென்றும், அதற்கஞ்சுவாரை மறுமையிலும் அணைய விரும்பாரென்றும் நல்லுருத்திரனார் கூறுகின்றார். அந்நாட்களில் ஆக்களைக் கள்வரும் பகைவரும் கவர்ந்து செல்லல் பெருவழக்காக இருந்தது. எனவே, தம் செல்வமான கால்நடைகளைக் காத்துக் கொள்ளும் திறலுடையவர்களுக்கே பெண் கொடுக்க விழைந்தமை பொருத்தமானதேயாம்.

### வலிசெய்து மணத்தல்

### உடன்போக்கு

இம்மணமுறைகட்கு வேறாக ஆணும் பெண்ணும் தம் பெற்றோர் அறியாதவாறு காதலித்துத் தம் காதலைத் தாமே வெளிப்படுத்திப் பெற்றோரின் ஒப்புதலைப் பெற்றோ அவர்கள் ஒப்புதல் கிட்டாதபோது உடன்போக்கில் பட்டோ மணந்து கணவன் மனைவியராக வாழ்தலும் உண்டு.

### தலைவன் பரத்தை உறவு

தனிமனித வாழ்விலும் சமூக வாழ்விலும் பாலுணர்ச்சி மிக இன்றியமையாத இடம் வகிக்கின்றது என்பதில் மாறுபட்ட கருத்தில்லை. மனிதஇனம் நாகரிகத்தின் குழவிப் பருவத்திலிருந்த போது வரையறையற்ற ஆண் பெண்ணுறவு நிலவிற்றென்று கூறப்படுகின்றது. மனிதன் படிப்படியாக முன்னேறிய போது, தன்னுடைய பழைய மரபுகளை மாற்றிக் கொண்டான். இதனால் வாழ்க்கையிலேற்பட்ட திருத்தங்கள் பலவாகும். இத்திருத்தங்களின் அளவையும் தன்மையையும் கொண்டே நாகரிகம் மதிப்பிடப்படுகின்றது. இங்ஙனம் ஏற்பட்ட திருத்தங்களில் மனிதனுடைய பாலியல் வாழ்க்கையிலேற்பட்ட திருத்தமே தலைமையானது எனலாம். வரையறையற்ற ஆண் பெண்ணுறவினை மாற்றித் திருமணமென்னும் நிறுவனத்தை உருவாக்கிய பின்னரும் கூடப் பழைய நிலையின் எச்சம் நீடித்ததாகத் தெரிகின்றது. அவ்வெச்சமே பரத்தைமை என்னும் நிறுவனமாக உருவாகி, இன்றளவும் மனித சமூகத்தின் ஒருறுப்பாக நீடித்துள்ளது. சங்க இலக்கியங்கள், ஆண் பெண்ணுறவின் பிற கூறுகளை விளக்குவது போன்று, பரத்தைமையின் கூறுகளையும் விளக்கியுள்ளன.

### பரத்தைமை

சங்க இலக்கியத்துள் ‘பரத்தை’, ‘பரத்தன்’, ‘பரத்தைமை’ என்னும் சொற்கள் காணப்படுகின்றன. ‘பரத்தையர்’ என்னும் பன்மை வடிவமும் ‘பரத்த’ என்னும் விளி வடிவமும் காணப்படுகின்றன. தனக்கென வரையப்பட்ட பெண்ணை விடுத்துப் பல பெண்டிரிடம் உடலுறவு கொள்பவன் என்னும் பொருளிற் பரத்தன் என்றும், தனக்கென ஒருவனை வரைந்து கோடலின்றித் தான் விரும்பியோருடனும் தன்னை விரும்பியோருடனும் உடலுறவு கொள்பவள் என்னும் பொருளிற் பரத்தை என்றும், சுட்டப்பட்டனர் என்று தெரியலாகிறது. இவ்வரையறையற்ற தன்மையைக் குறிக்கப் பரத்தைமை என்னும் பண்புச்சொல் ஆடவரின்

ஒழுகலாற்றைச் சுட்டியே சங்க இலக்கியத்தில் ஆளப்பட்டுள்ளது. மாறாக பரத்தையரின் இயல்பு என்னும் பொருளில் ஆளப்படவில்லை. ஆடவரின் தீயொழுக்கம் பற்றிப் பெண்கள் குறைகூறும் நிலையில் மருதப்பாடல்கள் படைக்கப்பட்டமையின் இந்நிலையமைந்ததெனத் தெரிகின்றது.

பரத்தை, பரத்தைமை என்னும் சொற்களுக்குரிய வரையறைகள் சங்க இலக்கியத்தில் இல்லை எனினும் அவர்களுடைய பண்புகள் பலவற்றையும் உள்ளடக்கி ஒரு வரைவிலக்கணத்தைக் கூற இயலும்.

> **“ பரத்தையராவார் யாவரெனின்’ அவர், ஆடலும் பாடலும்**
> **வல்லாராகி, அழகும் இளமையும் காட்டி, இன்பமும்**
> **பொருளும் வெ.ஃ.கி, யாவர் மாட்டும் தங்காதார்”**[33]

என்பது இளம்பூரணர் தரும் வரைவிலக்கணமாகும்.

சங்கச் செய்யுட்களில், ‘விலை நலப்பெண்டிர்’, ‘விலைக்கணிகை’, ‘கொண்டிமகளிர்’ என இடம்பெறும் குறிப்புக்கள் பரத்தையர்க்கும் பொருட்குமுள்ள ஒற்றுமையைக் குறிப்பிடவே சுட்டப்படுகிறது. பழம் தேடிச் செல்லும் பறவைகள் போல பொருள் தேடிச் செல்லும் பரத்தையர்கள் நிறைய உண்டு என்பதை பின்வரும் பரிமேலழகர் கூற்று உறுதி செய்கிறது. ‘தம் நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது. அதற்கு ஆவார் ஆகாதாரென்றும் வரையறையின்மையின்’ வரைவின் மகளிர் எனப் பட்டனர் எனப் பரிமேலழகர் விளக்குகின்றார்.

பணத்திற்காகவோ அதற்கீடான வேறு பொருட்காகவோ வரையறையின்றிப் புணர்ச்சியிலீடுபடுவது பரத்தைமை என்றும் சிறிது வரையறையுடனோ அது சிறிதுமின்றியோ அடுத்தடுத்துப் பல ஆடவரைப் புணர்பவள் பரத்தை என்றும், வரையறையின்மை, பொருள், விலங்குத்

தன்மை கொண்ட புணர்ச்சி ஆகியவை பரத்தைமையின் கூறுகள் என்றும் அறிஞர்கள் குறிப்பிடுவர்.

### மருதநில வளமும் பரத்தமையும்

சங்க இலக்கியம், தலைவர்களின் பரத்தைமை ஒழுக்கத்தினை மருதத்திணையிற் கூறியுள்ளது. இப்பாடல்கள் தோன்றிய காலத்தில், வளமார்ந்த மருத நிலங்களில் வாழ்ந்த பெருமக்களிடம் இவ்வொழுக்கம் பெரிதும் காணப்பட்டமையே இதற்குக் காரணம் என்று கூறுதல் தவறன்று.

உழவுத் தொழிலின் தோற்றத்தோடு நாகரிகம் பிறந்தது என்பர். இந்நாகரிகத்திற்கும் பரத்தைமைக்கும் உள்ள உறவு, ஒளிக்கும் நிழலுக்கும் உள்ள உறவு போல் பிரிக்க இயலாததென்றும், ஒளியின் மிகுதிக்கேற்ப நிழலின் கருமை மிகுவதுபோல் நாகரிகத்தின் மிகுதிக்கேற்பப் பரத்தைமையும் பரவலாகிறதென்றும் கூறப்படுகின்றது.

பெரிய நகரங்கள் வளமிக்க மருத நிலங்களிலேயே உருவாயின. அவை காவிரி, வையை, பெரியாறு என்னும் பெரிய ஆறுகளின் கரைகளில் உருவாயின என்பதனை விளக்கத் தேவையில்லை. இத்தகைய நகரங்களிலேயே பரத்தைமை பெரிதும் வளர்ந்திருந்தது என்பதனைப் பண்டைத் தமிழர்கள் கண்டனர். மேலும், இது சிற்றூர்களுக்கு மட்டுமன்றி நகரங்களுக்கே உரியது என்பதனை நன்கு உணர்ந்திருந்தனர் எனத் தெரிகின்றது.

மருத நிலத்திற்கேற்பட்ட கலை வளர்ச்சியும் அடிக்கடி அங்கு நிகழ்ந்த திருவிழாக்களும் பரத்தைமைக்கும் உறுதுணை புரிந்தன எனத் தெரிகின்றது.

செல்வரை நம்பியே பரத்தையர் வாழ்ந்தனர். அவர்களை நாடிச் செல்வர்கள் நகரங்களுக்கு வந்தனர் என்பது மதுரைகாஞ்சியால் நன்கு விளங்குகின்றது. மருத நிலமே செல்வத்திற்கு இடமாக விளங்கியமையால் பரத்தைமை அங்கு வேர்விட்டு வளர்ந்தமையில் வியப்பில்லை.

பண்டைத் தமிழ்ச் சான்றோர் வாழ்வின் நல்ல கூறுகளை மட்டும் காட்டி, இருண்ட பகுதிகளை மூடி மறைத்தாரல்லர்; அவற்றையும் ஒளிவு மறைவின்றிக் காட்டத் தயங்கவில்லை. நாகரிக நாடுகள் பலவற்றிலும், பரத்தைமை இருந்துள்ளது இன்றும் நிலவுகின்றது. எனவே, பண்டைத் தமிழகத்தில் அது நிலவியமை பற்றி நாணமுறத் தேவையில்லை.

பண்டைக் கிரேக்கத்தில் மனைவிமார்கள் குழந்தைப்பேற்றுக்கே சிறப்பாக உரியோராக மதிக்கப்பட்டனர். பெண்ணின்ப நுகர்ச்சிக்குப் பல தரப்பட்ட பரத்தையர் இருந்தனரென டெமாத்தனீசு குறிப்பிடுகின்றார்.

உரோம் நாட்டில் பரத்தைமை பெருகியிருந்தமையும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் மட்டும் 32000 பேர் பதிவு செய்யப்பட்டு பரத்தைமைத் தொழில் நடத்தியுள்ளனர் என்பதும் அறிய முடிகின்றது.

வட இந்தியாவிலும் அது நன்கு வேர்விட்டிருந்தது. பரத்தையரிடமிருந்து அரசு வரி வாங்கிற்று; மேற்பார்வையாளர்களையும் அமர்த்தியிருந்தது.

உரோம் நாட்டில், கீழ்நிலைப் பரத்தை முதல் சமூகத்தில் பெருமதிப்புடையார் ஈறாக நான்கு வகைப் பரத்தையர் இருந்தனர். வடநாட்டில் இருந்த எட்டுவகையான பரத்தையர் பற்றிக் காமசூத்திரம் குறிப்பிட்டுள்ளது என்ற அறிஞர்களின் கருத்து குறிப்பிடத்தக்கது.

**தனிமனிதனும் சமூகமும்**

மனிதன் இயல்பாகவே சமூகத்தில் வாழும் ஆர்வமுள்ளவன், இதனாலேயே அவன் சமூக விலங்கெனப்படுகின்றான். தனி மனிதனுடைய சிந்தனையும் பழக்க வழக்கங்களும் சமூகத்தாலேயே அளிக்கப்படுகின்றன. இன்னின்னவை சமூக நிலத்திற்கு உகந்தனவென்றும் தீங்காவனவென்றும் சமூகம் தன்பட்டறிவாலுணர்ந்து கொள்ளத்தக்கன தள்ளத் தக்கனவற்றைப் பாகுபாடு செய்கின்றது. இவை பற்றிய சிந்தனைகளின் தொகுப்பே அறம் அல்லது ஒழுக்கவிதி எனப்படுகின்றது. தனிமனிதன் சமூகத்தின் விதிகட்குட்பட்டு அதன் வளர்ச்சிக்கும் வாழ்விற்கும் பாடுபட வேண்டுமெனச் சான்றோர் எதிர் பார்க்கின்றனர். பல நிலைகளிலும் பண்பட்டிருந்தச் சங்ககாலச் சமுதாயம் தனிமனிதர்கள் பின்பற்றி நடக்க வேண்டிய பல உயர் நெறிகளையும், அவை தொடர்பான நம்பிக்கைகளையும், பழக்க வழக்கங்களையும் உருவாக்கிப் போற்றியுள்ளது. அவை அனைத்தையும் தொகுத்து நிரல்படுத்தி விளக்கமுற்படாது. அவர்கள் போற்றிய சிறப்பான அறக்கோட்பாடுகளையும் சமூக நடைமுறைகளையும் எடுத்துக்காட்டி, அவை தனி மனிதனைச் சமூகத்தோடு எங்ஙனம் உறவுபடுத்தின என்பதைப் புலப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

தனிமனிதர்கள் ஒருங்கு கூடிச் சில நெறிகளின் அடிப்படையில் வாழ்வது சமூகம். எனவே, சமூகத்தின் உறுப்புகளாக அமையும், தனி மனிதர்களின் பண்பைப் பொறுத்தே சமூகத்தின் பண்பும் அமைய முடியும், இப்பேருண்மையைச் சங்கப் புலவர் ஔவையார்,

> **“ நாடா கொன்றோ காடா கொன்றோ**
> **அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
> **எவ்வழி நல்லவர் ஆடவர்**
> **அவ்வழி நல்லை வாழிய நிலனே”**[34]

என உணர்த்துகின்றார். ஒரு நாடு, அதன்கண் வாழும் மக்களின் தன்மையைக் கொண்டே மதிக்கப்படும் என்பது இப்பாடல் வரிகளால் நன்கு விளக்கப்படுகின்றது.

இங்ஙனமே, தனி மனிதனின் வாழ்வு அவன் வாழும் சமூகத்தைப் பொறுத்தே இன்பமானதாகவோ துன்பமானதாகவோ அமையக்கூடியது என்ற உண்மையையும் சங்ககால மக்கள் உணர்ந்திருந்தனர். தனிமனிதன் தன்னைச் சூழ்ந்து வாழும்பிற உறுப்பினர்களின் ஒத்துழைப்பின்றி மகிழ்ச்சியாக வாழ முடியாதென்பதனைப் பிசிராந்தையார் உணர்த்துகின்றார். தம்முடைய கவலையற்ற இன்ப வாழ்விற்குத் தம் மனைவியின் மாட்சியும், மக்களின் அறிவுடைமையும், ஏவலரின் பொறுப்புணர்ச்சியும், காவலனின் நல்லாட்சியும், தம்மூர்க்கண் வாழும் சான்றோரின் ஆன்றவிந்தடங்கிய பண்புமே காரணங்கள் என அவர் உணர்த்தியுள்ளார்.

சங்கவிலக்கியம் பல உயர்நெறிகளை வற்புறுத்தினாலும் அவற்றுள் முதன்மை பெறுவது பிறர்க்கென வாழும் பெரும் பண்பேயாகும். தமக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெற்றியுடையார் வாழ்வதாலேயே உலகம் நிலைபெற்றுள்ளது என்கிறார் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி.

தாமும் வாழ்ந்து தம்மைச் சார்ந்த சமூகத்தையும் வாழ்விக்கும் உயர் நெறிகளைப் போற்றுவார் வலிய முயற்சியாளராய் விளங்க வேண்டுமென்று புலவர்கள் வற்புறுத்தியுள்ளனர். பல இடையூறுகளையும் பொறுத்துக்கொண்டு, தமிழகத்தின் எல்லையைக் கடந்தும் பொருளீட்டச் செல்லும் தலைமக்கள், இத்தகு உயர் நோக்கத்தால் இயக்கப்படுவோராகவே படைக்கப் பட்டுள்ளனர் என்பதை,

“ அறந்தலைப் பிரியா தொழுகலும் சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலும் நாளும்
வருந்தா வுள்ளமொ டிருந்தோர்க்கில்”[35]

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

**விருந்தோம்பல்**

பண்டைத் தமிழர் போற்றிய சமூக அறங்களுள் விருந்தோம்பல் அறம் தனிச் சிறப்புடையதாகும். ஒருவன் இல்வாழ்க்கை வாழ்வது விருந்தோம்புதற் பொருட்டே என்று கூறும் வள்ளுவர், இவ்வறத்தை ஒரு சிறப்புமிக்க கேள்வியெனச் சிறப்பித்துள்ளார். உணவு விடுதிகளோ, காசுப் புழக்கமோ இல்லாத அக்காலத்தில் இடம் விட்டு இடம் செல்வார், வழியிலுள்ளாரையே நம்பியிருக்க வேண்டிய சூழ்நிலை இருந்தமையின் இவ்வறம் பெரிதும் போற்றப்பட்டதெனத் தெரிகின்றது. இடைக்கால உரையாசிரியரான பரிமேலழகர் விருந்தினரைப் ‘பண்டு அறிவுண்மையின் குறித்து வந்தாரும் அஃதின்மையின் குறியாது வந்தாரும்’ என இரு வகையினராகக் கூறியுள்ளார்.

அகவிலக்கியத் தலைமக்கள், விருந்துபேனும் விருப்புடையவராகப் படைக்கப்பட்டுள்ளனர். ‘விருந்து விதுப்புறூஉம் பெருந்தோட் குறுமகள்’ என்றும், ‘அல்லிலாயினும் விருந்துவரினுவக்கும் முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறுமகள்’ என்றும் ஆடவர் தம் மனைவிமார்களின் விருந்தோம்பும் பண்பைப் பற்றிப் பெருமை கொள்வோராகக் காணப்படுகின்றனர். தன்னுடைய மனை விருந்து ஒருவறியாத சிறப்புடையதெனப் பெருமைப்படும் ஆடவனையும் காணமுடிகின்றது. தன் கணவன் விருந்தினரைப் பேணுவதற்கு வேண்டிய செல்வத்தை எளிதிற் பெற்றுத் திரும்ப வேண்டுமெனப் பெண்ணொருத்தி விரும்புகின்றாள்.

விருந்தினரை அன்புடன் எதிர்கொண்டு, மெல்லிய சொற்களைக் கூறி, வழியிலுள்ள ஏதங்களையும் பொழுது சாய்ந்தமையும் எடுத்துச் சொல்லித் தம்மில்லத்தில் தங்கிச் செல்லுமாறு வேண்டுவது தமிழர் மரபென்றும் அங்ஙனம் வரும் விருந்தினர் தம்மை அயலவராகக் கருதாது உறவினராகவே கருதியொழுக வேண்டும் என்றும் ஒரு பாடல் வற்புறுத்துகின்றது. விருந்தினரை உண்பித்த பின் எஞ்சியதையே தாமுண்ண வேண்டும் என்பது அக்காலப் பண்பாகும்.

**" விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை**
**நின்னோ டுண்டலும் புறைவதென்றாங்கு"**[36]

என்ற குறிஞ்சிப்பாடல் கூறுகிறது.

விருந்தினரைப் பேணுதலைத் தம் பெருங்கடனாகக் கொண்டோர் தம் எதிர்கால வாழ்க்கை பற்றிக் கூடக் கருதாது விதையை அட்டும் உணவூட்டுவர் என்று புறப்பாட்டொன்று அறிவிக்கின்றது.

விருந்தினர் வரக்கண்டு ஊடல் தீர்ந்து ஒருமனத்தோடு அவர்களை உண்பிக்கும் கணவன் மனைவியரையும் விருந்தினரைப் பேணும் பொறுப்பு மிகுதியால் கணவனொடு ஊடுதற்குரிய காரணமிருந்தும் அதற்கு நேரமில்லாத தலைவியையும் காணமுடிகின்றது.

விருந்தினரைப் பேணமுடியாத அளவிற்கு வறுமையுறுவது நனியின்னாததாக மதிக்கப்பட்டது. அத்தகு வாழ்க்கையைத் திருந்தாத வாழ்க்கையாக கருதினர். விருந்தினரைப் பேணவியலாத அளவிற்கு வறுமையுற்றவர்கள், விருந்துகண்டபோது ஒளிந்து கொண்டனர் என்று தெரிகின்றது. இத்தகு அவல மிக்க வாழ்க்கையை,

**" விருந்து கண்டொளிக்கும் திருந்தா வாழ்க்கைப்**
**பொறிப்புணர் உடம்பிற் றோன்றவென்**
**அறிவு கெட நின்ற நல்கூர்மையே"**[37]

என விளக்குவார் ஒரு சான்றோர்.

மென்புலங்களில் வாழ்ந்தோர் அயலேயுள்ள வன்புலத்து மக்களை விருந்தாக ஏற்றுப் போற்றியமையையும், பொருள் கருதிச் சென்ற தலை மக்களை ஆங்காங்கே வாழ்ந்த மக்கள் எதிரேற்றுப் போற்றியமையையும், உடன்போக்கிலீடுபட்ட காதலர்களை வழியிலுள்ளார் பேணிய நிலைமையையும் புலவர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.

இதுகாறும் கூறியவற்றால், சமூகத்தின் ஒருறுப்பாக அமையும் மனிதனொருவன், வறியவர், நண்பர், உறவினர், விருந்தினர் ஆகியோர்க்குத் தன்னாலான உதவிகளைச் செய்து பயனுள்ள வாழ்க்கை வாழவேண்டுமென்பது பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தின் குறிக்கோளென்பது விளங்குகின்றது. இங்ஙனம் பயனுள்ள வாழ்க்கை வாழாது மூத்தோரைப் 'பயனில் மூப்பிற்பல் சான்றோர்' எனப் பழித்துரைத்தனர். அல்லது செய்யாமையும் நல்லது செய்தலோடொத்தலின் 'நல்லது செய்தலாற்றீராயினும் அல்லது செய்த லோம்புமின்' என வற்புறுத்தினர். உலகையே தன்குடும்பமாகவும் உலகோர் அனைவரையும் தன் உற்றார் உறவினராகவும் கருதி அவர்கட்கு உதவி வாழும் பெருவாழ்வு நெறியே தமிழர் பண்பாட்டின் மணி முடியாகக் காணப்படுகின்றது.

**மனித மாண்புகள்**

ஐவகை நிலங்களைக் களமாக்கி, அவ்வந் நிலங்களுக்குரிய மனிதத்தின் வாழ்வைப் பதிவாக்கிக் காட்டியுள்ளதன் வெற்றியே சங்க இலக்கியங்கள்!

‘இரங்கல்’ உணர்வை மையப்படுத்திய நெய்தல் திணைப் பாடல்களில் - கடலும் கடல் சார்ந்த பகுதியாகவும் திகழ்கின்ற நெய்தல் மக்களிடையே வெளிப்படும் ‘மனித மாண்புகள்’ குறித்த பின்னல் வெளிச்சங்களின் அணிவகுப்பே இவ்வாய்வு.

**நெய்தற்களம்**

கடல், கடற்கரை என்னும் இரண்டிலும் வாழும் மக்களின் தொடர்பாக அமைந்தது நெய்தல்திணை. கடலையும் வென்று, கடல் வளத்தையும் கொண்டு பயன்படுத்திய முயற்சித்திறன் மிக்கவரான மக்கள் இவர்கள். கடலில் கலஞ்செலுத்தும் தமிழரின் பழம்பெருஞ் சிறப்பினையும், அக்கடலாற் பெருகின்ற உப்பும் மீனும் கொண்டு தம் வாழ்வை வகுத்துள்ள இயல்பினையும், ஆங்கே எழுகின்ற காதல் நிலைகளையும் - வாழ்வியல் தன்மைகளையும் - சிறப்பாக ‘மனித மாண்புகள்’ குறித்தும் ஆய்வதே இவ்வியல் நோக்கமாகும்.

**இரங்கல் உணர்வின் நெய்தல்**

பண்டைத் தமிழர் வாழ்வின் ஐந்திணைகளுள் நெய்தல் திணைக்குரிய உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். தலைவனைப் பிரிந்த காதலிக்குக் கடலும் கானலும் காணுந்தோறும் இரக்கம் மிகுமாதலால் கடலையும் கடல் சார்ந்த இடத்தையும் நெய்தல் என்றனர். இங்குள்ள மக்கள் பரதவர் எனப்பட்டனர்.

**மனித மனத்துள் ஊடுருவிடும் உணர்வுநிலை**

தலைவன் தலைவிக்கு இடையே நிலவிடும் நுட்பமான உணர்வுகள் நெய்தல் திணையில் பதிவாகின்றன. மாலைக்காலம் வந்தும், தலைவன் வராமையால் வருந்திடும் தலைவி, தோழியிடம் இரங்கி உரைக்கின்றாள்.

குறுந்தொகையின் ஔவையார் பாடல், தலைவனைப் பிரிந்து வாடும் தலைவியின் வாட்டத்தைத் தோழியிடம் உரைப்பதன் வழி வெளிப்படுத்துகின்றது. (குறுந்தொகை.102) “தலைவனை நினைத்தால் என் உள்ளம் வேகும்; நினைக்காமல் இருப்பின் அத்துயர் என்னால் தாங்கக் கூடியதன்று. காம நோயோ வானத்தைத் தோய்வது போன்ற பெருக்கத்தை உடையது. தம் சொற்படி தலைவர் வாராமையால் அவர் சான்றோர் அல்ல” என்று புலந்து கூறுகின்றனர்.

தலைவி உள்ளத்து இரங்கல் உணர்வு, தலைவன் தலைவியெனும் இருபாலர் உறவுக்கிடையில் காணக்கிடக்கும் நுட்பங்களையெல்லாம் உணர்த்தி நிற்கின்றது. மனித மனத்தின் ஆழத்தை ஊடுருவிப்பார்த்து, அதன்வழி மனித மதிப்புகள் அளந்தறியப்படுகின்ற முயற்சி, இந்த நெய்தற் பாடல் தலைவியின் வெளிப்பாட்டில் அமைந்துள்ளது.

தம் சொற்படி தலைவர் வாராமையால் அவர் ‘சான்றோர் அல்லர்’ என்று கூறி வருந்துகின்ற தலைவியின் உள்ளம், இம்முடிவை எட்டுவதற்குப் பல்வேறு படிநிலைகளை எண்ணிப் பார்க்கின்றது. தலைவர் தன்னிடத்திலுள்ள துன்பத்தை அறியாமையால் அன்பிலர் என்றும், ஊரவர் அலர் தூற்றும் போதும் தனித்து வாழ்தலின் நாணற்றவர் என்றும், உலகியலை மறந்தமையின் ஒப்புரவின்மையர் என்றும், மெல்லியளாகிய தன் துன்பத்தைத் தீர்க்க வாராமையின் கண்ணோட்டமற்றவர் என்றும், தாம் குறித்த காலத்தில் வாராமையால் வாய்மையற்றவர் என்றும் அதனால் தலைவர் ‘சான்றோர் அல்லர்’ என்றும் தலைவி முடிவு கொள்கிறாள். குறுந்தொகை நெய்தல் தலைவியின் இந்த அளவீடு,

**“ அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ**
**டைந்துசால் பூன்றிய தூண்”**[38]

என்று வகுத்துக் கூறிடும் வள்ளுவத்தோடு ஒப்புநோக்கத்தக்கது. (குறுந்தொகைச் சொற்பொழிவுகள், பக்.32-33)

**புது வரவினருக்குப் பாதுகாப்பு நலன்**

குறுந்தொகையின் நன்னாகையார் பாடல் (118), மாலைக்காலம் வந்தும் தலைவன் வாராமையால் வருந்திடும் தலைவி, அன்பில்லாத மாலைப்பொழுது வந்துவிட்டது; பலரும் புகுவதற்குரிய வாயிலை அடைக்க எண்ணி வினவுகின்றவர் ‘வருவீர் உள்ளீரோ’ என்று கூறவும் தலைவர் வாரார் ஆயினர் எனத் தோழியிடம் வருந்திக் கூறுகிறாள்.

இரவுக் காலத்தில் கதவடைக்கும் பொழுது போற்றத்தக்கார் எவரேனும் உள்ளாராயின் அவரைக் கூவியுள்ளழைத்துக் கொண்டே கதவடைத்தல் வழக்கம் என்பது தலைவியின் கூற்றால் வெளிப்படுகிறது. இதன்வழி விருந்தாக வருகின்ற புதியவர்களுக்குத் தக்க பாதுகாப்பு நலன்களை வழங்குகின்ற ‘விருந்தோம்பல்’ என்னும் மனித மாண்பு பதிவு செய்யப்படுகிறது. (குறு.சொற்.பக் 34-35)

**காதலனைக் காத்திடும் பெண்மையின் பொறை**

இன்பத்திலும் துன்பத்திலும் தலைவனையே தலைவி விரும்பி நிற்கின்றாள். தலைவனால் தான் பெருந்துயர் உற்ற காலத்தும் அவனுக்குப் பழியும் துன்பமும் வராதிருக்க முயலுதலும் தலைவியின் இயல்பாகும். நற்றிணைக் காட்டும் நெய்தல் தலைவி தலைவன் பிரிந்தவிடத்து அவளைக் கருதித்தான் வருந்தினால் அக்காதல் நோய் புறத்தார்க்குப் புலனாகிவிடும்; அது கண்டு அயலார் அலர் கூறுவர். அதனால் தலைவனுக்குப் பழியுண்டாகும்; அங்ஙனம் தலைவன் நாணும்படி அவனுக்குப் பழியுண்டாகாதிருத்தற் பொருட்டுத் தன் நோய் புறத்தார்க்குப் புலனாகாது மறைத்தல் வேண்டுமென விரும்புகிறாள்.

காதல் வாழ்வில் துன்பத்திற்கு ஆட்படுகின்ற நிலையிலும் அன்புக் காதலனைத் தம் பொறைக் குணத்தால் போற்றுகின்ற பெண்மை மாண்பு இதில் வெளிப்படுகின்றது.

**மறுமையிலும் தொடரும் தலைவியின் மாறா அன்பு**

பரத்தையிற் பிரிந்து மீண்டும் வந்த தலைமகனிடம் ஆற்றாமை நீங்கித் தலைவி கூறுதல், அவள் தலைவன் மாட்டு எந்நிலையிலும் கொண்டிருக்கின்ற மாறா அன்பை வெளிப்படுத்துகின்றது.

**“ இம்மை மாறி மறுமை யாயினும்**
**நீயா கியர்என் கணவனை**
**யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே”**[39]

அம்மூவனாரின் பாடல்வழி, உறுதி முழக்கமிடுகின்ற குறுந்தொகைத் தலைவியைக் காணமுடிகிறது**.** பிறவிகள் தோறும் தொடர்ந்திட விழையும் மானுட அன்பின் மேன்மை இதன்வழி போற்றுதலுக்குரியதாகின்றது.

**சமுதாய ஒப்பந்தத்தைப் போற்றிடும் மானுடம்**

தலைவன் தலைவி இடையேயான களவொழுக்கம் நீடித்தது. இவ்வொழுக்கத்தை அறிந்தால் இந்த ஊர்ப் பெண்களெல்லாம் அலர் தூற்றுவார்களேயெனத் தலைமகள் அஞ்சினாள். அந்நிலையில் தோழி வந்து, ‘தலைமகன் மணம் கொள்ளத் துணிந்தான்’ என்று கூறினாள். அதுகேட்ட தலைமகள், ‘விளையாட்டு மகளிர் தம் காதலரோடு இரவைக் கூத்தாடும் கடற்துறைத் தலைவன் மணந்து தன்னளி செய்வானாயின் இவ்வூரில் வாழ்தல் இனிது. இன்றேல் இங்குத் தனித்து வாழ்தல் இன்னாது’ என்பாள். ‘துறைகெழு கொண்கள் நல்கின் உறைவினி தம்மஇவ் வழுங்க லூரே’ (ஐங்குறுநூறு.151) என ஐங்குறுநூற்றுத் தலைவி தோழிக்குக் கூறி நிற்கின்றாள்.

இதன்வழி, அகவாழ்வானாலும், புறவாழ்வானாலும் மனிதம், 'சமுதாய ஒப்பந்தத்திற்கு இயைந்தே இயங்கவல்ல தன்மையது என்பதை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய சங்கத் தமிழ்த் தலைவியின் வாழ்வு காட்டி ஒளிர்வதை அறியமுடிகின்றது.

### மானுட வாழ்வுக்கு வளங்காட்டும் அறத்தொடு நிற்றல்

தலைவன் தலைவிக்கு இடையே மலர்கின்ற காதல், சமுதாயத்தின் அடிப்படை அலகாகத் திகழ்ந்திடும் இல்லறமாக – குடும்பமாக உருப்பெற்றிடல் வேண்டும் என்னும், உடன் வாழும் மனித மனங்களின் வாழ்தலுக்கும் அரவணைக்புக்கும் அடையாளமாகவே தோழி பாங்கன் உள்ளிட்ட படிநிலையோரின் 'அறத்தொடு நிற்றல்' அமைந்து, மானுட வாழ்வுக்கு வளங்கூட்டியுள்ளது எனலாம். ('ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்', பக். 84-85)

### தம்மின் தம்மக்கள் அறிவுடைமை

நெய்தல் நிலத்துப் பரதவர் தங்களுடைய மக்களை இரவுப் பொழுதில் உடன் கூட்டிச் சென்று, மீன் பிடிக்கப் பழக்குதலை அகநானூற்று நெய்தல் திணைப் பாடல் சுட்டுகிறது. 'தம்மின் தம்மக்கள் அறிவுடைமை' என்னும் வள்ளுவத்தின் மானுட மேம்பாட்டுக் கோட்பாடு, நெய்தல் நில வாழ்வாகப் பதிவாகியிருக்கின்றது.

### மனித உறவின் பன்னாட்டு மையம்

பட்டினப்பாலையில், சோழவள நாட்டின் நெய்தல் நிலத்துத் தலைநகரமான காவிரிப்பூம்பட்டினத்தின் எழிலார் வளப்பம் சிறப்புறக் காட்டப்படுகின்றது. மேம்பட்ட நகர நாகரிகத்தின் பண்பாட்டின் மையமாக இந்நெய்தல் நில மக்களின் வாழ்வு திகழ்வதை அறிய முடிகிறது. பண்டமாற்று முறையில் வணிகம் தழைத்திருந்தது; உள்நாட்டு

வணிகத்தோடு, கடல் கடந்த நாடுகளுடனான வணிகமும் தொழிலும் சிறந்தோங்கி வளர்ந்திருந்தன. வணிகத்தை நடுநிலைப் பண்போடு 'கொள்வது மிகாமலும் கொடுப்பது குறையாமலும்' மேற்கொண்ட பாங்கு, உலக அளவில் தமிழ்ச் சமுதாயம் நல்லதோர் எடுத்துக்காட்டாக விளங்கிட வழிவகுத்தது. சங்க காலத்திலேயே தமிழகம் பன்னாட்டவரும் கலந்து வாழ்கின்ற தொடர்பு கொண்டு வளம் பெருக்குகின்ற மனித உறவு மேம்பாட்டின் உன்னத மையமாக விளங்கி நின்றது சிறப்புக்குரியது. (பட்டினப்பாலை)

**மனிதநேயத்தின் ஊற்றுக்கண் - விருந்தோம்பல்**

ஆற்றுப்படை இலக்கியங்களில் இடம் பெற்றிடும் நெய்தல் நிலத்துப் பரதவர்கள், அவ்வழியே வருகை தந்திடும் கூத்தருக்கும் பாணருக்கும் விறலியருக்கும் மீன் உணவைப் பதமாகச் சமைத்து, அன்போடு வழங்கி, இரவு நேரங்களில் தங்க இடம் தந்து அரவணைத்திடும் விருந்தோம்பல் பண்பு, மனித நேயத்தின் ஊற்றுக்கண்ணாகப் போற்றுதற்குரியதாகும். (சிறுபாணாற்றுப்படை)

'இரந்தோர்க்கும் கலம் நிறைய ஈதல்' என்னும் ஈகைப் பண்பு நெய்தல் நிலத்து மக்களின் இயல்பாக இலங்குவதை அகநானூறு பெருமையுடன் குறிப்பிடுகின்றது.

**மனித மாண்புகளின் பிழிவு**

தலைவியைப் பிரிந்து சென்றான் தலைவன் ஒருவன். அதனால் 'அவள் பெருந்துயருற்று வாடுகிறாள்' என்று அறிந்ததும் கொதிப்படைகின்றான். கலித்தொகையின் நெய்தல் நிலத்தோழி ஒருத்தி; அவனிடம் நேரிலேயே செல்கின்றாள். கவலையுற்று இருக்கும் அவனிடம் அறத்தை எடுத்து உரைத்து, நீயும் அறிந்தவனானால் உடனே உன்

தேரைப் பூட்டுவாயாக – தலைவியிடத்து விரைந்து செல்வாயாக என வற்புறுத்துகின்றாள்.

தலைவியின் வாழ்வில் தலைவனால் நேர்ந்துள்ள வாட்டத்தைப் போக்கி, நிலைத்த இன்பத்தைக் கூட்ட விரும்புகின்ற தோழி, தலைவனுக்கு எடுத்துக் கூறிடும் அறிவுரைகள் நெய்தல் தலைவனுக்கு மட்டும் உரைத்திடுவதாக இல்லாமல் ஒட்டுமொத்த மனிதகுல மேம்பாட்டுக்காக எக்காலத்தும் பொருந்தக்கூடிய அறிவுரைப் பெட்டகமாக – மனித மாண்புகளின் பிழிவாக விளங்கி ஆற்றுப்படுக்கிறது …!

**'ஆற்றுதல்' என்று சொல்லப்படுவது, வறுமையுற்று அலமந்தவர்களுக்கு ஒன்றை உதவுதல்**
**போற்றுதல் என்பது கூடி உறவு கொண்டவரைப் பிரியாதிருத்தல்.**
**'பண்பு' எனப்படுவது, உலக நிலைமையறிந்து நடத்துதல்.**
**'அன்பு' எனப்படுவது, தன் சுற்றத்தினைக் கோபியா திருத்தல்.**
**'அறிவு' எனப்படுவது அறிவற்ற பேதையர்களின் சொல்லைப் பொறுத்துக் கொள்ளுதல்.**
**'செறிவு' என்று கூறப்படுவது, கூறியதொன்றைத் தாம் என்றும் மறந்து நடவாதிருத்தல்.**
**'நிறை' என்பது மறைவான செயல்களைப் பிறர் அறியாது காத்தல்.**
**'முறை' எனப்படுவது தீங்கு செய்தார் தமராயினும் கண்ணோட்டமின்றி அவர் உயிரையும் வாங்கிவிடுதல்.**
**'பொறை' எனப்படுவது தன்னைப் போற்றாதாரிடமும் பகைகொள்ளாது பொறுமையோடு இருத்தல் என்பதாகும்.**

இதனை கலித்தொகையில் நெய்தல்கலி பாடிய நல்லந்துவனார்,

**“‘ஆற்றல்’ என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்;**
**‘போற்றல்’ என்பது புணர்ந்தாரைப் பிரியாமை;**
**‘பண்பு’ எனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்;**
**‘அன்பு’ எனப்படுவது தன்கிளை செறாஅமை;**
**‘அறிவு’ எனப்படுவது பேதையர் சொல் நோன்றல்;**
**‘செறிவு’ எனப்படுவது கூறியது மறாஅமை;**
**‘நிறைவு’ எனப்படுவது மறைபிறர் அறியாமை;**
**‘முறை’ எனப்படுவது கண்ணோடாது உயிர்வௌவல்;**
**‘பொறை’ எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்.”**[40]

என வரையறுத்துச் சுருக்கி மொழிகின்றார்.

சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல் வழியிலான மனித மாண்பு, ஆவணமாக மானுட மேம்பாட்டிற்காக இங்குக் கருத்துக் கொடையாக்கப்பட்டுள்ளது. மரபு வழிவழி வந்திடும் இத்தகு மனித மாண்புகளே, புத்துலக மலர்ச்சிக்கும் - வளர்ச்சிக்கும் ஆக்கம் சேர்பனவாகும்.

**மன்னா் புலவா் நட்புறவு:**

“உறவுகள் என்ற சொல்லுக்கு இலக்கணமே ஒத்த உணர்வுகளிடையே ஏற்படும் தொடர்புகளேயாகும்”. இவ்வாறு சங்ககால மன்னர்களுக்கும் புலவர்களுக்கும் ஒத்த உணர்வு அமைந்திருந்தது. மன்னர்கள் தமிழ்ப்பற்று மிக்கவர்களாக இருந்தனர். இத்தமிழ்ப் பற்றே புலவர்களிடம் பெருமதிப்புக் கொள்ளச் செய்தது. தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைக் காண புலவர் மோசீகிரனார் சென்றார். வழிநடைக் களைப்பின் காரணமாக அங்கிருந்த முரசுக் கட்டிலில் உறங்கினார். முரசு அரசர்களால் வழிபடுவதற்குரியது. முரசுக் கட்டிலில்

அயர்ந்த நித்திரையிலிருப்பது தமிழ் புலவர் மோசீகிரனார் என்பது அறிந்து, அவரை வாளுக்கு இறையாக்காது அவர் உறங்கும் பொருட்டு கவரி கொண்டு வீசிநின்றான். புலவர் விழித்தெழுந்து மன்னன் செயலைக் கண்டும் அவரின் தமிழ்ப் பற்றினை அறிந்தும், "மாசற விசித்த ……. யீங்கிது செயலே" என்ற செய்யுளை இயற்றினார்.

"புலவரை வாளுக்கு இறையாக்காது, அரசன் கவரி வீசியது தன் நண்பர் என்பது பற்றி அன்று; அவர் தமிழறிந்த புலவர் என்பது பற்றியே. புலவர் அரசனைப் பாராட்டியது தம் நண்பன் என்னும் உரிமை பற்றி அன்று; அவனது தமிழ் விரும்பும் தண்ணிய நெஞ்சம் பற்றியே ஆகும். இருவருக்கும் இடையே நெஞ்சம் பிணிக்கும் தொடர்பை ஆக்கியது. "நல்தமிழ்" என்ற ஒன்றேயாகும். இருவரும் அந்த நற்றமிழைப் போற்றிய காரணம் ஏதோ மூடநம்பிக்கை அன்று. ஈன்று புறந்தந்த அன்னையைப் போற்றும் அறிவுடை மக்களைப் போல், புலவரும் அரசரும் அறிவை புறந்தந்து வாழ்வைப்பீடுற உயர்த்திய தமிழன்னையைப் போற்றினர்"

என மு.வரதராசனார் குறிப்பிடுகிறார். இரும்பொறையையும் மோசிகீரனாரையும் ஒத்த தமிழ் உணர்வே ஒன்று சேர்த்தது எனக் கருத முடிகிறது.

**அதியமானும் ஔவையும்:**

வேட்டைக்குச் சென்ற அதியமானுக்கு எவருக்கும் கிடைத்தற்கு அரிய நெல்லிக்கனி கிடைத்தது. அந்நெல்லிக்கனியை தான் உண்ணாது தன்பால் வந்திருந்த ஔவைக்குத் தந்தான் அதனை அவர் உண்ட பின்னர், உண்டவர் நெடிது நாள் வாழ்வர் என்று தெரிந்தது. ஔவையார், பெருவியப்புற்றுத் தான் நீண்ட நாள் வாழ நினைக்காமல், எனக்கு கொடுத்து என்னை வாழ்வித்த இந்நெடுந்தகையின் செயல்

போற்றுதற்குரியது என நினைத்து அவனை, (புறம் - 91) வாழ்த்தியுள்ளார். அதியமான் கிடைத்த கனியை தான் உண்டால் அது தனக்கு மட்டுமே பயன் அளிக்கக் கூடும். ஆனால், ஔவை உண்டால் தமிழ் நீண்ட நாள் வாழும் என்று எண்ணி நெல்லிக்கனியை ஔவைக்குக் கொடுத்தான். இதனால் அக்கால சமுதாயத்தில் மன்னர்கள் தன் புகழ்பாடும் புலவர்களுக்கு பரிசு கொடுத்ததோடு, அவர்களால் தமிழ் வளர வேண்டும் என புலவர்களை நீண்ட காலம் வாழ வைத்த நிலையையும் காணமுடிகிறது.

புலவரும் மன்னரும் வட்டாடுதல்:

புலவர் தாமப்பல் கண்ணனாரும் சோழன் மாவளத்தானும் வட்டாடி மகிழ்ந்தனர். அப்போது வட்டுகளில் ஒன்று புலவர் வேண்டுமென்றே மறைத்தார் என நினைத்து, வட்டு ஒன்றை அவர் மீது எறிந்தான். தவறு செய்யாத புலவர் மாவளத்தானைச்சினந்து, அவனது குடிபிறப்பில் அய்யுறுவதாகக் கூற, அவன் நாணிநின்றான் இந்நிலையைக் கண்ட புலவர், தான் சினத்தில் கூறிய சொல்லின் கடுமையை நினைந்து வருந்தினார். பின்னர் நாணி நின்ற மாவளத்தானின் பொறுமையைப் போற்றினார். இதனைப் புறநானூறு (பாடல் -43) குறிப்பிடுகிறது.

இப்பாடல் மூலம் புலவர் மன்னரோடு அமர்ந்து வட்டாடும் அளவிற்கு நட்புக் கொண்டதையும், புலவர் மன்னரிடம் சினம் கொள்ளும் அளவிற்கு உரிமை பெற்றதையும் காண முடிகிறது. புலவர் மன்னனைப் பழித்த போது, அதைக் கேட்டு சினம் கொள்ளாது அமைதி காத்த செயல், மன்னன் புலவரிடம் கொண்டிருந்த பெருமதிப்பை உணர்த்துகிறது.

**கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார்:**

"அரசருக்கும் புலவருக்கும் இடையே இருந்த நெருங்கிய தொடர்பு, தமிழ்நாட்டு அரசரின் சிறந்த பண்புகளில் ஒன்று. அதனை வடநாட்டு அரசரிடம் காணுதல் அரிது" என சு.வித்தியானந்தன் கூறுவது குறிப்பிடத்தக்கது.

கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் கொண்ட நட்பு போற்றுதற்குரியது. கோப்பெருஞ்சோழனைக் கண்டு பழகாமலேயே அவனோடு நட்பு பூண்டவர் பிசிராந்தையார். தம் மக்களின் செய்கைக்கு நாணி வடக்கிருக்கச் சென்ற சோழன் தனக்கருகில் பிசிராந்தையாருக்கு, இடம் ஒதுக்குமாறு கூறினான். இதனைக் கேட்டவர்கள் தங்களை நேரில் காணாத பிசிராந்தையார் எப்படி வருவார் என வினவினர்.

**" செல்வக் காலை நிற்பினும்**

**அல்லற் காலை நில்லான் மன்னே"**[41]

என சோழன் கூறினான். சோழனின் கூற்று பொய்க்காதவாறு பிசிராந்தையாரும் வருகை தந்து அவனுடன் வடக்கிருந்து உயிர் துறந்தது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். வேந்தனொடு தானும் உயிர் விடும் அளவிற்கு புலவர்கள் நட்புக் கொண்டிருந்ததை அறிய முடிகின்றது. இவ்விருவரின் நட்பினை பொத்தியார் "நினைக்குங்காலை மருட்கை உடைத்தே" என வியந்து போற்றுகிறார்.

**கோப்பெருஞ்சோழன் பொத்தியார்:**

கோப்பெருஞ்சோழனுடன் நட்பு கொண்டு பழகியவர் பொத்தியாரும் ஒருவர். சோழன் வடக்கிருந்த போது தாமும் வடக்கிருக்கச் சென்றார். அப்போது பொத்தியாரைத் தடுத்து புதல்வரைப் பெற்ற பின் வடக்கிருக்கலாம் என்று கூறித்தடுத்தார். பொத்தியார் பின்பு, புதல்வரைப் பெற்றப்பின் கோப்பெருஞ்சோழனின் நடுகல் அருகில் வடக்கிருந்தார்.

இதிலிருந்து சோழன் மீது பொத்தியார் கொண்ட அன்பு புலப்படுகிறது. இவ்விருவரின் நட்பினை பிசிராந்தையார், “பொத்தில் நண்பிற் பொத்தி” என கோப்பெருஞ்சோழனை நினைக்கும் போதெல்லாம் பொத்தியாரையும் உடன் நினைத்து பாராட்டுவதை குறிப்பிடுகிறார்.

மன்னர் கொடுக்கும் பொன்னுக்காகவும், பொருளுக்காகவும் அவரிடம் நட்பு கொள்ளாமல் உள் மனதில் எழும் உண்மையான அன்பினாலேயே வேந்தரிடமும் மன்னரிடமும் நட்பு கொண்டனர் என்பதை அறியமுடிகின்றது.

பாரி – கபிலர்:

புறநானூறு பாரி, கபிலர் இருவரும் உயிர்த் துணைவராக பழகியதைக் குறிப்பிடுகிறது. “பாரி இறந்த பிறகு அவரது நண்பரான கபிலர் அவன் மகளிரைத் திருமணம் செய்விக்க பல அரசர்களிடமும் வேண்ட எந்த ஒரு அரசரும் அவர்களை மணம் புரிய முன்வரவில்லை. ஆகவே திருக்கோவிலூரில் உள்ள பார்ப்பார் ஒருவரிடம் அடைக்கலப்படுத்திவிட்டு, தென்பெண்ணை ஆற்றின் அருகே பாரியை நினைத்து வடக்கிருந்தார்” என அறியமுடிகிறது. இதனால் கபிலர் பாரியிடம் கொண்ட அன்பின் ஆழத்தையும் நட்பின் ஆழத்தையும் உணர முடிகிறது.

இப்பிறப்பில் யானும் பாரியும் நட்புக் கொண்டு மகிழ்ந்ததைப் போல மறுப்பிறப்பிலும் நட்புக் கொண்டு வாழ என் நல்வினை கூட்டுவதாக” என்னும் வரிகள் (புறம் 236) பாரி மீது கபிலர் கொண்ட நட்பினை புலப்படுத்துகிறது.

**புறநானூற்றில் மன்னரின் ஒற்றுமை:**

சங்ககால சமுதாயத்தில் போரிட்டு பகை கொண்டிருந்த மன்னரிடையே ஒற்றுமை ஏற்பட்டதைப் புலவர்கள் பாடியுள்ளனர்.

வேந்தரும் மூவரும் அன்பால் ஒன்று கூடிய நிலையில் ஒன்றிய வாழ்வின் வெற்றி நலத்தை எடுத்துரைப்பர். வேந்தர்கள் காத்து வரும் நாடு அனைத்து வளங்களையும் பெற்றிருந்தாலும், அவர் இறக்கும் பொழுது அந்நாடு உடன் செல்வதில்லை. அந்நாட்டுடன் தொடர்பில்லாதவரிடம் ஆட்சி உரிமை சென்றடையும். இவ்வாட்சி உரிமை அழிவுடையது. இறந்த பிறகு இறுதி வரை வருவது நல்வினை ஒன்றே. ஆகவே, அரசியலை அறநெறியில் செலுத்தி தன்னை நாடி வரும் இரவலர்க்கு பொருளீட்டி வாழ்நாள் முழுதும் இன்பமுடன் வாழ வேண்டும். உங்களுக்கு கூறத்தக்கது இதுவே ஆகும். நீங்கள் மூவரும் ஒன்றுகூடி உலகாண்டால் உலகில் இன்பம் உண்டாகும் என ஔவையார் மூவேந்தரும் ஒன்று கூடிய நிலையை (புறம் 367) குறிப்பிடுகிறார்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் நட்பு கொண்டிருந்ததைக் காவிரிபூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் மகிழ்ந்து பாடியுள்ளார். நீங்கள் இருவரும் உறுதுணையாக அன்பு கொண்டு இன்று போல் வாழ்க. உங்கள் ஒற்றுமை நிலைத்திருக்குமானால், இந்நிலவுலகம் உங்கள் கைவசப்படுவது உறுதி என்று (புறம் - 58) ஒற்றுமையின் வலிமையை குறிப்பிடுகின்றார்.

**“ பீடு கெழு திருவின் பெரும் பெயர் நோன்தாள்**
**முரசு முழங்கு தானை மூவரும் கூடி**
**அரசவை இருந்த ..................”**[42]

என்ற வரிகள் மூலம் மூவேந்தருள்ளும் ஒற்றுமை ஏற்பட்டதை அறிய முடிகின்றது. புலவர்கள் மன்னர்கள் பகைக் கொள்ளாது ஒற்றுமையுடன் வாழ்வதையே விரும்பினர் என்பதை அவரது பாடல்கள் விளக்குகிறது.

**புறநானூற்றில் தூது:**

அதியமான் நெடுமான் அஞ்சி தன்னுடன் போர் செய்ய புறப்பட்ட தொண்டைமானிடம் ஔவையைத் தூதனுப்பினார். தன்னிடம் படை பலம் இருப்பதாக அவ்வேந்தன் செருக்குற்றிருந்தான். இதை அறிந்த அதியமான் போரின் கொடுமையையும் அவன் வலிமை கெட்டு அழிவதையும், அதனால் நாட்டுக்கும், நாட்டு மக்களுக்கும் ஏற்படும் இன்னல்களைத் தெரிந்து கொள்ள ஔவையாரை அவன்பால் தூதுவிட்டான். இதனால் அக்கால சமுதாயத்தில் புலவர்கள் தூது சென்றதை அதியமான் ஔவையாரை தூதனுப்பியதன் மூலம் அறியமுடிகிறது. இவ்வாறு தூது செல்பவரின் இன்றியமையாமையை வள்ளுவர்,

> **“ அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு**
> **இன்றி யமையாத மூன்று”**[43]

என்றும்,

> **“ தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி**
> **நன்றி பயப்பதாம் தூது”**[44]

என்றும் தூது செல்பவரின் தன்மைகளைக் குறிப்பிடுகின்றார். ஔவையார் அவன்பால் சென்றதும் தன் படைக்கலக் கொட்டிலுக்கு அழைத்துச் சென்று படைக்கலங்களைக் காட்டினான். அதனைப் பார்த்த ஔவையார், அதியமானின் படைக்கலங்களைப் பழிப்பது போலப் பழித்தும் நயமாக எடுத்துரைத்து இருவருக்கும் போர் நிகழா வண்ணம் செய்துள்ளார் என்பதை (புறம் - 95) பாடல் வழி அறியமுடிகிறது.

**புறநானூற்றில் போர் அகற்றிய புலவர்:**

அக்கால சமூகத்தில் புலவர்கள் மன்னர்களின் ஒற்றுமையை போற்றினர். அவர்களுக்கிடையே போர் ஏற்பட்டால் தூது சென்று போர் ஏற்படாமல் தடுத்தனர். இதனால் புலவர்கள் போர் ஏற்படுவதை விரும்பாது தடுத்ததைப் புறநானூறு விளக்குகிறது.

சோழன் நலங்கிள்ளியும், சோழன் நெடுங்கிள்ளியும் தாயத்தார்கள் நலங்கிள்ளி காவிரிப்பூம்பட்டினத்தையும், நெடுங்கிள்ளி உறையூறையும் அரசாண்டனர். இவர்களில் சோழன் நலங்கிள்ளி சோழ நாட்டின் தொன்மை வாய்ந்த தலைநகரமாகிய உறையூரைத் தான் கைப்பற்றி அரசாள விரும்பினான். இதற்கு நெடுங்கிள்ளி உடன்படவில்லை. இதனால் நலங்கிள்ளி போரினால் கைப்பற்ற உறையூறை முற்றுகையிட்டான். நெடுங்கிள்ளி எதிர்த்து போரிடாமல் அரண் அமைத்துக் கொண்டு வெளியில் வராதிருந்தான். இதனால் உறையூர் மக்கள் பெரும் துன்பத்திற்கு ஆளாயினர். இச்செய்தியை அறிந்த கோவூர்கிழார், சோழர் குடியில் பிறந்த இருவரும் பகைக் கொண்டு போரிடுதல் உங்கள் குடிக்கு பெருமை அன்று. ஆகவே போரைக் கைவிடுக என்று (புறம் - 45) அறிவுறுத்தியுள்ளார்.

இரு வேந்தர்கள் பகைக் கொண்டு போரிடுதல் மரபு. ஆனால் தந்தையும் மகனும் போரிடும் நிலை அரிது. இந்நிலை கோப்பெருஞ்சோழனுக்கு ஏற்பட்டது. கோப்பெருஞ்சோழனுக்கு எதிராக அவன் பெற்ற மக்களே எதிர்த்து நின்ற நிலையை காண முடிகிறது. இதனை “தமிழ்நாட்டு மூவேந்தர்களின் குடும்பங்களில் தலைகாட்டாத குறை எவ்வாறோ இச்சோழனின் குடும்பத்தில் புகுந்தது” என மு.வரதராசனார் குறிப்பிட்டுள்ளார்.

கோப்பெருஞ்சோழன் தன் மக்களுடன் போரிடாமல் தடுத்து நிறுத்தக் கருதினார் புல்லாற்றூர் எயிற்றியனார். சோழனுக்கு பின்வருமாறு அறிவுரை கூறி போரைத் தடுத்து பழி நேரா வண்ணம் காத்தார். உன்னோடு போர் புரிய வந்தவர் பாண்டியரோ, சேரரோ அல்லர். உனக்குப் பின்னர் இவ்வரச உரிமையை யாருக்கு வழங்குவாய் நீ தோற்றாலும் நின் புகழுக்கு பெரும் பழி ஏற்படும். ஆகவே போரைக் கைவிடுவதே நன்று என்றார்.

**“ எண்ணில் காட்சி யிளையோர் தோற்பின்,**
**நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே**
**அமர்வெஞ் செல்வ! நீயவர்க் குலையின்**
**இகழுந ருவப்பப் பழியெஞ் சுவையே,**
**அதனால், ஒழிகதிலத்தை நின் மறனே”**[45]

என கோப்பெருஞ்சோழனின் மறத்தன்மையைக் கெடுத்து அறத்தில் நாட்டம் ஏற்படச் செய்தது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு புலவர்கள் போரினால் சமுதாயத்திற்கு ஏற்படும் தீங்கை நினைத்தும், மன்னர்களின் குடிக்கும், புகழுக்கும் பழி ஏற்படுத்தும் போரை தடுத்து நிறுத்தியதைப் புலவர்களின் பாடல்கள் விளக்குகின்றன.

**புலவர்களின் அறிவுரை:**

புலவர்கள் மன்னர்களிடம் நட்பு கொண்டு அவர்கள் தவறு செய்தவிடத்து கண்டித்தும், நற் செயல்களைப் பாராட்டியும் அவர்களை நல்லாற்றுப்படுத்தும் வகையில் அறிவுரை புகட்டினர். அன்பும் அருளும் கொண்டு நாட்டைக் காக்கும் மன்னன், அக்குடிகளிடம் எவ்வாறு வரி வாங்க வேண்டும் என்பதையும் குறிப்பிடுகிறார்.

**“காய்நெல் ..................... ணுலகமுங் கெடுமே”**[46]

என்று குடிமக்களை வருத்தி வரி வாங்குதல் அறம் அல்ல என்று அறிவுடை நம்பிக்கு பிசிராந்தையார் அறிவுரை கூறுகின்றார்.

பண்டைக் காலத் தமிழ்ப் புலவர்கள் விருப்பு வெறுப்பின்றி எல்லா மக்களையும் ஒப்பக் கருதி அறிவுரை வழங்கிவருதலையே கடமையாகக் கொண்டிருந்தனர். அரசரின் குறைகளையும் துணிவாக எடுத்துக் கூறி, அவர்களை நல்வழிப்படுத்தினர் என்பதை மேற்கண்ட புறநானூற்றுப் பாடல் மூலம் அறியமுடிகிறது.

**சங்க இலக்கியங்களின் உறவுநிலை**

**மன்னரும் கலைஞரும்**

சங்க காலத்தில் போரும் வீரமும் சிறப்பிடம் பெற்றிருந்ததைச் சங்கப் புற இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. அக்கால சமூகத்தில் மன்னர்களின் புகழ் பாடுபவர்களாக புலவர்கள் மட்டுமல்லாது கலைஞர்களும் திகழ்ந்தனர் என்பதை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அக்கலைஞர்கள் தங்களின் வாழ்க்கைச் சூழலை மன்னர்களிடம் எடுத்துரைக்கும் அளவிற்கு உரிமைப் பெற்றிருந்தனர். வாழ்க்கை நிலையினை எடுத்துரைத்த கலைஞர்களுக்கு சங்க கால மன்னர்கள் பொன்னும், பொருளும் கொடுத்து அவர்களது வாழ்க்கையை வளப்படுத்தினர். கலைஞர்கள் பாசறைக்குச் சென்று மன்னர்களின் போர்த்திறம் பாடி பரிசில் பெற்றனர்.

இந்நிலையில் பாணர், பொருநர், கூத்தர், விறலியர் போன்ற கலைஞர்கள் மன்னர்களோடு கொண்ட தொடர்பினை ஆராய்வது இன்றியமையாததாகும்.

**பதிற்றுப்பத்தில் மன்னரும் கலைஞர்களும்:**

பாணர், பொருநர், கூத்தர், விறலியராகிய பிறருக்கும் இவரின் வேறாகிய பரிசிலர் யாவராயினும், தாம் பரிசுக்குரிய தன்மையை பெறாதவராயினும் எல்லார்க்கும் கொடுப்பதைக் கடமையாகக் கொண்டவன் பல்யானை செல்கெழுகுட்டுவன் என்பதை,

“ எமர்க்கும் பிறர்க்கும் யாவராயினும்
பரிசின் மாக்கள் வல்லா ராயினும்
கொடைக்கட னமர்ந்த கோபா நெஞ்சினன்”[47]

என்ற பதிற்றுப்பத்து வரிகள் வழி அறியமுடிகின்றது. கலைஞர்களின் நிலைமையறிந்து பரிசில் வழங்கப்பட்டது என்பதை பாணர், விறலியர், பொருநர், கூத்தர் எனப் பலரும் பல்வேறு வகையில் பரிசில் பெற உரியவராதலின், அவரவர் வரிசையறிந்து கொடுத்தலை விரும்பினவன் என்றற்கு, “பரிசின் மாக்கள் யாவாராயினும்” என்னும் ஔவை துரைசாமிபிள்ளை கூற்றால் அறிலாம்.

கலைஞர் நால்வரும் தம் இசையால் பெற்ற செல்வத்தை, வறுமையுற்று வரும் கலைஞர்களுக்குக் கூறி, மன்னனையும், வள்ளல்களையும் பார்த்து தாம் பெற்றவை எல்லாம் பெறுமாறு கூறி பாடுவதை,

“ கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறா அர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்”[48]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இக்கலைஞர்கள் ஒவ்வொருவரும் தம் வறுமையையும், அதனை நீக்க வேண்டியும், மன்னர்களைப் புகழ்ந்தும், போர்க்களக் காட்சியை பாடியும், ஆடியும் தனித்தனியே சென்றனர் என்பதைக் காணமுடிகிறது.

**பாணர்களின் வறுமை நீக்குதல்:**

பாணர்கள் பசியோடு கிழிந்த ஆடைகளை உடுத்தித் தங்களின் வறுமையை எடுத்துக் கூறினர். மன்னன் அவர்களது பசி நீக்கியும், புத்தாடைக் கொடுத்தும் இசைத் தமிழை வளர்த்தனர் என்பதை

**“ நூலாக் கலிங்கம் வாலரைக் கொளிஇ**

**வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்**

**வசையின் மகளிர் வயங்கிழை யணிய”[49]**

என்ற மேற்கண்ட பதிற்றுப்பத்து பாடலால் அறியமுடிகின்றது.

அழகிய பட்டாடைகளை உடுத்திக் கொண்டு, கடை குழன்ற கூந்தலையும் வளைந்த மூங்கில் போன்ற தோள்களையுடைய குற்றமில்லாத மகளிர் அணிகளை அணிந்தனர் என்பதன் மூலமாக சேர மன்னர்கள் பாணர்களின் வறுமையை அகற்றியதை அறியமுடிகின்றது.

**போர்க்களம் பாடிய பொருநன்:**

ஏவல் இளையர் இனிய களிப்பால் குன்றாத மெல்லிய சொற்களை விரும்பிச் சொல்லி நெஞ்சு நிறைந்த உவகையினை உடையவராய், நார்முடிச் சேரலின் பெரிய போர்க்களத்தைப் பாடினர் என்பதை,

**“ ……………………………………. இளையர்**

**இன்களி வழாஅ மென்சொலமர்ந்து**

**நெஞ்சுமலி யுவகையர் வியன்களம் வாழ்த்த”[50]**

என்ற வரிகள் சேரனின் போர்க்களத்தைப் பாடியதை குறிப்பிடுகிறது. இவ்வாறுப் பாடிச் செல்லும் பொருநனுக்கு ‘கள்’ கொடுக்கப்பட்டதை

**“ தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்**

**ஓம்பா ஈகையின் வண் மகிழ்சுரந்து”[51]**

என்னும் பாடல் உணர்த்துகிறது.

தீவிய சுவை நிறைந்த நீலமணி போலும் கள்ளினை, தனக்கெனச் சிறிதும் கருதாது ஈயும் பண்புடையவன் ஆதலால் மிக்க மகிழ்ச்சியினை வீரர்க்கும் போர்க்களம் பாடும் பொருநருக்கும் அளித்ததை விளக்குகிறது. இவ்வாறு பெருநர்க்கு கள் கொடுக்கப்பட்டதை பொருநராற்றுப்படை,

“ ………………… பொலங் கலம் நிறைய பல்கால்

வாக்குபு தரத் தர ……………………………”[52]

என்னும் பாடல் வெளிப்படுத்துகிறது.

பொன்னாலான வட்டில் நிறைய கள்ளை பல முறை மன்னன் கொடுத்தான் என்பதை குறிப்பிடுகிறது. இதன் மூலமாக பொருநர் போர்க்களம் பாடிச் சென்று மன்னர்களின் புகழ் பாடினர் என்பதையும், இன்ப மூட்டும் கள்ளினைக் கொடுத்து மகிழ்வித்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

விறலி பரிசு பெறுதல்:

விறலியர்கள் மன்னர்களின் புகழைப் பாடியும், ஆடியும் போர்த்திறத்தைப் புகழ்ந்துரைத்தும் பரிசு பெற்றதைப் பதிற்றுப்பத்துக் குறிப்பிடுகிறது. ‘மலைமேலிருந்து வீழும் அருவி போல மாடங்களின் மேலிடத்திலிருந்து காற்றால் அசையும் கொடிகள் நிறைந்த தெருவில், எரிக்கப்படும் நெய் வழியுமாறு பெய்து நிரம்பியதால், அகல் விளக்கினது பருத்தி திரியானது பேரொளி காட்டி பெரிய நல்ல நெற்றியையுடைய விறலியர் கூத்தாடும் பழமையான மாளிகைகளையுடைய ஊர்களில் செங்குட்டுவனைப் புகழ்ந்து பாடும் புகழுரைகள் நீங்காதிருந்தன’ என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.

ஆடுகின்ற சிறையையுடைய கின்னரப் பறவையை இசையால் வென்ற யாழ் நரம்பின் இசையுடன் ஒன்றாய் சொல்லும் இனியமிடற்றால் பாடுதலையுடைய விறலியர் பல பிடியானைகளைப் பெறுக என்று கூறுவதன் மூலம் சேர மன்னர்கள் யானைகளை பரிசளித்ததை அறியமுடிகிறது.

இவ்விறலியர்கள் ஆடலிலும், பாடலிலும் சிறந்து விளங்கினர். இதன் வழி சேர மன்னர்கள் ஆடல், பாடல் இரண்டிலும் விருப்பமுடையவர் என்பதை அவர்களுக்கு வழங்கிய பரிசுப் பொருட்கள் மூலம் உணரலாம்.

**கூத்தரும் மன்னரும்:**

கூத்தர்களில் வயிரியர், கண்ணுளர் என்ற இருவகையினர் வாழ்ந்தனர். இருவகை கூத்தின் இலக்கணம் அறிந்து என்று இருவகை கூத்தை சிலம்பு குறிப்பிடுகிறது. இதனை அகக்கூத்து, புறக்கூத்து என்று அறிஞர்கள் விளக்கம் தருகின்றனர்.

இவர்களுக்கு குதிரைகளையும், களிறுகளையும், தேர்களையும் தனக்கென வைத்துக் கொள்ளாது நெடுஞ்சேரலாதன் வழங்கினான் என்பதனை,

**“ விரியுளை மாவுங் களிறுந் தேரும்**

**வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசி”**[53]

என்ற வரிகள் விளங்குகின்றன. கூத்தரது பெரிய சுற்றம் மகிழும் படியாக, குதிரைகளை செங்குட்டுவன் வழங்கினான் என்பதை பதிற்றுப்பத்து கூறுகிறது. மன்னர்களிடம் பரிசுப் பெற்ற கூத்தர்கள் மகிழ்ந்து சென்றனர். அக்கால மன்னர் தம்மை மகிழ்விக்கப் பல்வேறு வகைப்பட்ட திறனுடைய பெண்களை அரசவையில் வைத்திருந்தார்கள். இவர்கள் பாட்டாலும் கூத்தாலும் மன்னனை மகிழ்வித்தார்கள்.

இதனால் மன்னர்கள் ஆடலும் பாடலும் ஒருங்கே அமைந்த மகளிரை, தன்னை மகிழ்விக்கும் பெண்ணாக அரசவையில் வைத்திருந்ததை அறியமுடிகிறது. பதிற்றுப்பத்தில் சேர மன்னர்கள் பாணர், பொருநர், விறலியர், கூத்தர் இவர்களை ஆதரித்தனர்

என்பதையும், கலைஞர்கள் மீது பற்று கொண்டிருந்தனர் என்பதையும் அறியலாம்.

**புறநானூற்றில் மன்னரும் கலைஞரும்:**

புறநானூற்றில் கலைஞர்கள் மூவேந்தர்களையும், வள்ளல்களையும் நாடிக் சென்றனர். அக்கலைஞர்களுடைய வறுமையை அகற்றி பரிசில் கொடுத்தனர். "பொருநர், கூத்தர் முதலிய பரிசிலர்க்கு அவர் வேண்டுவன நல்கிச் சிறப்பித்தலை, பரிசிலரோம்பல் என்றார்" என்று ஔவை துரைசாமிப் பிள்ளை அவர்கள் குறிப்பிடுகிறார். கலைஞர்களை வேளிர்களும், மன்னர்களும் வளர்த்தனர்.

செழிப்பு மிக்க நாட்டினை உடைய சங்க கால மன்னர்களும், வள்ளல்களும் தமிழ் வளர்த்த சிறப்பு மிக மிக மகிழ்வு தரத்தக்கது. தமிழ் மொழியை, இலக்கணத்தை, செய்யுளை புலவன் வளர்த்தான். இசையை, அதன் இலக்கணத்தை, அதன் உறுப்புகளான பலப்பாடல்களைப் பாணர் பாடினி வளர்த்தனர். ஆடல், பாடல் நளிநயங்களைக் கூத்தர்கள் வளர்த்தனர். இவர்களை மன்னர்களும், வள்ளல்களும் வளர்த்தனர். இக்கலைஞர்கள் ஒவ்வொருவரும் தன் சூழலை வேந்தரிடம் எடுத்து மொழிதலையும், வேந்தர் தரும் பரிசில் பொருள்களைப் பெற்றதையும் புறநானூறு எடுத்துரைக்கிறது.

**புறநானூற்றில் மன்னரும் பாணரும்:**

**" கையது கடனிறை யாழே மெய்யது**
**புரவல ரின்மையிற் பசியே யரையது**
**வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்**
**ஓம்பி யுடுத்த வுயவற் பாண**
**பூட்கை யில்லோன் யாக்கை போல"**[54]

என்னும் பாடல் வெளிப்படுத்துகிறது.

பாணன் பழமரம் தேடித் திரியும் பறவைப் போல, பசிமிகுந்து, பொலிவிழுந்து காணப்படுவதைப் பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது. இப்பாணர்களின் பசித் துன்பத்திற்கு பகையாய் இருந்தவன் கோப்பெருஞ்சோழன் என்பதை,

**“ ………………………………………… பாணர்**

**பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்**

**கோழியோனே கோப்பெருஞ் சோழன்”**[55]

என்று புறநானூற்றுப் பாடல் விளக்கமளிக்கிறது. இவ்வாறு துன்பம் நீக்கும் மன்னனையும், வள்ளலையும் நாடிச் செல்க என்று கூறுவது ஆற்றுப்படையாக அமைகிறது.

**புறநானூற்றில் கூத்தர்:**

மன்னர்களிடமும், வள்ளல்களிடமும் செல்வம் பெற்று வரும் கூத்தர். எதிர் வரும் கூத்தரை அம்மன்னர்களிடம் செல்லுமாறு ஆற்றுப்படுத்துவது கூத்தர் ஆற்றுப்படையாகும்.

கூத்தர்கள் ஆடியும், பாடியும் மன்னர்களிடம் பொருள் பெற்றனர். சிவந்த நீர்மையுடைய பசிய பொன்னை கூத்தர்க்கு பாண்டியன் வழங்கினான் என்பதையும், ஆடுநர்க் கீந்த பேரன்பினனே என கோப்பெருஞ்சோழன் கூத்தருக்குக் கொடுக்கும் பேரன்பு உடையவன் என்பதையும் அறிய முடிகின்றது. ‘கூத்தரால் நாடகத் தமிழ் வளர்ந்தது’ இக்கூத்தர்களுக்கு பொன்னைப் பரிசாகக் கொடுக்கும் பேரன்புடையவர்களாக அக்கால மன்னர்கள் திகழ்ந்தனர்.

**சான்றெண் விளக்கம்**

1. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும், ப.13
2. தொல்.பொருள், நூ.எ.5
3. மேலது., நூ.எ.22
4. நற்றிணை பா.எ.64 பா.வரி 4
5. மேலது., பா.எ. 5
6. அகம். பா.எ.102, பா.வரி 6
7. புறம். பா.எ.139, பா.வரி 8
8. அகம்.பா.எ.31, பா.வரி 7
9. பட்டினப்பாலை பா.வரி 32
10. மேலது., பா.வரி 28
11. பெரும்பாணாற்றுப்படை பா.வரி 253
12. பட்டினப்பாலை பா.வ.ள்.14-15
13. அகம். பா.எ.145 பா.வரி.17
14. மேலது., பா.எ.176 பா.வரி.20
15. மேலது., பா.எ.167 பா.வரி.4
16. மேலது., பா.எ.181 பா.வரி.21
17. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள் அ. தட்சிணாமூர்த்தி ப.16
18. தொல்.பொருள், நூ.எ.219
19. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள்,ப.69
20. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், முன்னுரை
21. மேலது.
22. அகம். பா.எ.282 பா.வ.ள்.11-12
23. மேலது., பா.எ.308 பா.வரி.8
24. மேலது., பா.எ.210 பா.வ.ள். 8-10

25. மேலது., பா.எ.200 பா.வ.ள்.5-7
26. மேலது., பா.எ.112 பா.வ.ள்.16-18
27. தொல்.பொருள், நூ.எ.143
28. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.138
29. குறுந்தொகை, பா.40 பா.வ.ள்.1-2
30. புறம்.பா.எ.343 பா.வ.ள். 10-11
31. மேலது., பா.எ.344 பா.வ.ள். 1-4
32. கலித்தொகை பா.எ.103 பா.வ.ள். 71-73
33. தொல்.பொருள் நூ.எ.149
34. புறம்.பா.எ.187 பா.வ.ள். 1-4
35. அகம்.பா.எ.173 பா.வ.ள். 1-3
36. குறிஞ்சிப்பாட்டு பா.வ.ள். 206-207
37. புறம்., பா.எ.266 பா.வ.ள். 11-13
38. குறள் எ.983
39. குறுந்தொகை பா.எ.49 பா.வ.ள். 3-5
40. கலித்தொகை பா.எ.132 பா.வ.ள்.6-14
41. புறம்.பா.எ.215 பா.வ.ள். 8-9
42. பொருநராற்றுப்படை பா.வ.ள். .53-55
43. குறள் எ.682
44. குறள் எ.685
45. புறம் பா.எ.213, பா.வ.ள். 15-19
46. புறம் பா.எ.184 பா.வ.ள். 1-11
47. பதிற்றுப்பத்து பா.எ.25 பா.வ.ள். 8-9
48. தொல்.பொருள்.புறத்திணை நூ.எ.30
49. பதிற்றுப்பத்து பா.எ.12 பா.வ.ள். 21-23
50. பதிற்றுப்பத்து பா.எ.40 பா.வ.ள். 24-26

51. பதிற்றுப்பத்து பா.எ.42 பா.வ.ள். 12-13

52. பொருநராற்றுப்படை பா.வ.ள். 41-42

53. பதிற்றுப்பத்து பா.எ.20 பா.வ.ள். 15-16

54. புறம் பா.எ.69 பா.வ.ள். 8-10

55. மேலது., பா.எ.212, பா.வ.ள். 6-8

## இயல் - 3

# சங்க இலக்கியங்களில் தொழில்கள்

பண்டையத் தமிழகத்தில் வழக்கிலிருந்த தொழில்கள் குறித்து அறியும் முன்னர், தொழில் என்பதற்கு ஒரு வரையறையைக் காண்போம். உழைப்பு என்பது பெயர்ச்சொல்லாக ஒரு செயல் (அ) தொழிலைக் குறிக்கும். உழைத்தல் என்பது வினைச் சொல்லாக ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும். உழைப்பவர் இனம் என்பது பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்.

பொருளியல் பேரறிஞராகிய மார்சல் உழைப்பிற்குப் பின்வரும் இலக்கணம் கூறுகின்றார்.

> **“உழைப்பு என்பது மூளையையோ, உடலையோ முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால் அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது. இவ்விலக்கணத்தின்படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கும். கல்வி அறிவில்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும், கைத்தொழில், நீதிபதிகள், எழுத்தாளர்கள், வேளாண்மைத் தொழிலாளர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிர்வாகிகள் ஆகியோரின் பணி முயற்சிகளும் மார்சலின் உழைப்பு இலக்கணத்தினுள் அடங்குகின்றன.”**[1]

என்று கூறுகின்றார்.

**நிலம் சார்ந்த தொழில்கள்**

சங்ககாலத்தில் தொழில்கள் அனைத்தும் ஐவகை நிலத்தை அடிப்படையாகக் கொண்டுதான் நடைபெற்றுள்ளது. இதனை நிலஞ்சார் தொழில்கள் என்று கூறலாம்.

குறிஞ்சி நிலத்து மக்கள் மலைச்சரிவுப் பகுதிகளையும் மலைமீது சமநிலமாயுள்ள பகுதிகளையும் விளைநிலமாக்குதல், மலைநெல், தினை முதலியவகைகளை விதைத்தல், தினைப் புலங்களைக் காத்தல், தேனெடுத்தல், கிழங்கு வகைகளைப் பயிராக்குதல், வேட்டையாடுதல் முதலிய தொழில்களில் ஈடுபட்டிருந்தார்கள்.

பாலைநில மக்கள் பிற நிலங்களிலுள்ள ஆனிரைகளைக் கவர்தல், வழிப்பறி செய்தல் ஆகிய தொழில்களைச் செய்தார்கள். முல்லை நில மக்கள் சாமை விதைத்தல், வரகு விதைத்தல், கால்நடைகளை மேய்த்தல், பால், தயிர் , மோர், வெண்ணெய், நெய் இவற்றை விற்றல் முதலிய தொழில்களில் ஈடுபட்டார்கள்.

மருதநில மக்கள், வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடா விடுதல். முதலிய பயிர்த்தொழில் தொடர்பான தொழில்களில் ஈடுபட்டிருந்தார்கள்.

நெய்தல் நில மக்கள் ஓடம், மிதவை, படகு முதலியவற்றை அமைத்தல், மீன் பிடித்தல், உப்பை விளைத்தல், மீன் விற்றல், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்துதல் அவற்றை விற்றல் முதலிய தொழில்களில் ஈடுபட்டிருந்தார்கள்.

இந்த ஐந்து நில மக்களும் தங்களுக்குரிய வீடுகளை அமைக்கும் தொழிலையும் செய்து வந்தார்கள். மண்சுவர் எழுப்புதல், வைக்கோல் முதலியவற்றைக் கொண்டு கூரையமைத்தல், மண்ணைக் கொண்டு செங்கல் செய்து உலர்த்துதல், உலர்ந்தவற்றைச் சூளையிட்டுச் சுடுதல் முதலிய தொழில்களையும் அறிந்திருந்தார்கள். ஒவ்வொரு நிலத்திலும் அவ்வந்நில மக்களுடைய சூழ்நிலைக்கு ஏற்பத் தொழில்கள் அமைந்திருந்தன எனலாம்.

பயிர் தொழில்

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு, ஒவ்வொருவரது பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் அவரவரது கருமமே கட்டளைக் கல்லாய் அமையும். ஒருவர் சிறந்த பண்பைப் பெற அடிப்படையாய் இருக்க வேண்டியது வறுமையின்மை. உணவு இன்றேல் பண்பாடும் இல்லை, பழம் பெருமையும் இல்லை. ஆதலின் உணவுப் பொருளின் இன்றியமையாமையை உணர்ந்து அவற்றைப் பெருக்கினர். உணவுத் தொழில் தலைமைத் தொழிலாக, உயிர்த் தொழிலாகப் போற்றப்பட்டது.

தொடக்ககால நாகரிகத்தை விளக்கும் வெட்சி, கரந்தைப் பாடல்களில் உழவு பற்றிய குறிப்பு இல்லை. உழிஞைப் பாடல்களிலேயே உழவும், உழவு பேணப்படும் முறையும் விளக்கமாக எடுத்துரைக்கப்படுகின்றன.

மக்கள் தங்கள் வலிமையைக் காட்டி வாழ்ந்த வீரநிலைக்காலத்தின் தொடக்கநிலையில் வீரர், வீரம் அல்லாதோர் என்ற இரு பிரிவுகள் இருந்தமை காண்கிறோம். வீரர்களை உயர்ந்தவர்களாக கருதும் மனநிலை அங்கு இருந்தது. உழவு போன்ற இன்றியமையாத தொழிலும் கூடப் போர்க்களம் புகத் தகுதி இல்லாதவர்களுக்கே தொடக்க நிலையில் அளிக்கப்பட்டது என்பதை

**" வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது**

**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"[2]**

என்ற அடிகளால் தொடக்ககாலச் சமுதாயத்தின் மனநிலையைத் தொல்காப்பியம் விளக்கி நிற்கிறது.

**நாற்று நடுதல்**

பலமுறை நன்றாக உழப்பட்டு களை நீக்கி, உரமிட்டு, நீர் பாய்ச்சப் பெற்ற வயல்களில் நாற்றுகளை நன்றாக அழுந்த நடுவர் என்பதை, முடிநாறுமுத்திய நெடுநீர் செறுவில் என்று நெற்பயிர் நன்கு பருத்து முதிர்வதற்கு நல்ல காற்று இன்றியமையாததாகலின் நான்கு திசைக் காற்றும் ஊடறுத்து வீசப் பெற்றமையால் நன்கு விளைந்தன எனக் காற்றின் இயக்கத்தைக் காரணமாக்கி,

**" பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளி போழ்பு**

**வாலிதின் விளைந்தன ஐவன வெண்ணெல்"[3]**

நாற்று நடும்போதே நான்கு பக்கமும் ஊடறுத்துச் செல்லுமாறு இடைவெளி விட்டு நட்டனர். அவ்விடைவெளியினால் பயிர்கள் கிளைத்துச் செழித்துப் பால்கட்டி வளர்ந்தன. நெல்லின் அரிசி முதிர்வதற்கு முன்னர் பால் உருவத்தே இருத்தல் இயல்பு. இப்பால் மிகுதியாக இருந்தால் நெல் மணிகள் பருத்திருக்கும். இக்காலத்திலும் உழவுத் தொழிலாளர்களுக்கு அறிவுரை கூறும்போது பயிர்களின் ஊடே காற்று நன்கு புகுந்து இயங்கும்படி செய்யுமாறு அறிவுறுத்தலைக் காணலாம்.

**அறுவடை**

நெல்லை அறுவடை செய்து அவற்றைப் பாம்புகள் கிடக்கின்ற மருத மரங்களின் நிழலின் அகன்ற இடங்கள் நிறையும்படி போராகக் குவித்து வைப்பர். பின்னர் நெல்லினின்றும் குற்றமறும்படி

வைக்கோலையும் கூளத்தையும் நீக்கி உலர வைப்பர். உலர்ந்த பின்னர் மேல் காற்றிலே தூற்றி நெல்லைக் குவிப்பர். அந்நெற்குவியல் வடதிசையிலுள்ள மேரு மலையினும் சிறப்புற்றுத் தோன்றும். இத்தகு தலையாய தொழில் செய்த உழவர்கள் வளங்கெழுமிய மருதநிலஞ் சூழ்ந்த அசையாத குடியிருப்புகளில் வாழ்ந்தனர். நெற்பொலி திகழ்வதால் உழவர்களைப் பொருநர் முதலிய கலை வல்லோர் பாடுதலும் அவர்களுக்கு நெல்லை வழங்குதலும் மரபு என்ற கருத்தினைக் குறிப்பிட்டு, மேலும் இவ்வுழவர் இனத்தைச் சிறப்பித்துக் கூறும் வகையில்

**" தொல்பசி அறியா துளங்கா இருக்கை**
**மல்ல பேரூர் மடியின் மடியா**
**வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி"[4]**

என வரும் அடிகளில் தொன்றுதொட்டு வறுமையால் வந்தபசி அறியாத நிலையா குடியிருப்பினை உடைய வளப்பமுடைய பெரிய ஊர்களில் வாழ்பவர் என்றும், தம் தொழிலில் சோம்பியிராதவர் உழவர்கள் என்ற கருத்தையும் இதன் மூலம் அறியலாம்.

## நெசவுத் தொழில்

மக்கள் சமுதாயத்திற்கு உணவினை அடுத்து இன்றியமையாது வேண்டப்படுவது ஆடையாகும். விலங்குகளைப் போலன்றி உடலை மறைத்தற்குரிய உடையினை அணிந்து மானத்துடன் வாழும் முறை மக்கள் வாழ்க்கையின் சிறப்பியல்பாகும். நாகரிகம் வளராத மிகப் பழங்காலத்தே மக்கள் இலை, தழை ஆடைகளையும் உடையாக அணிந்தனர். பின்பு நாகரிகம் வளர வளர பலவித வண்ண ஆடைகளைத் தயாரிக்கக் கற்றுக் கொண்டனர்.

**"இது வீட்டுத் தொழில்களில் முக்கியமானது. பண்டைத் தொழில்களுள் ஒன்று விவசாயத்துக்கு அடுத்து மக்கள்**

**நாகரிகம் அடையத் தொடங்கியதும் கையாண்ட முதல் கைத்தொழில் என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது.''[5]**

நெசவுத் தொழில் என்பது அக்காலத்தில் சிறப்புற்று விளங்கியது. பட்டு உடைகளின் கரையில் திரள முடிந்த முடிகள் அழகு பெற அமைக்கப்பபட்டன என்பதை,

**"கொட்டைக் கரைய பட்டுடை நல்கி''[6]**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

**தச்சுத் தொழில்**

சங்க காலத்தில் தச்சுத் தொழில் ஒரு தனிப்பெருங் கலைத் தொழிலாக வளர்ந்து சிறந்து விளங்கியுள்ளது. இத்தொழிலின் வளத்தை பற்றி நெடுநல்வாடை சிறப்பாகக் குறிப்பிடுகிறது. இத்தொழிலின் மேன்மையைச் சிறுபாணாற்றுப்படையிலும் பெரும்பாணாற்றுப்படையிலும் காணலாம்.

அக்காலத் தச்சர்கள் செய்த தேர் ஒன்றைச் சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது. தேர் எவ்வகையான குற்றமும் இன்றி உருண்டோடும் தன்மையது உபயோகத்திற்கேற்றது. கூரிய வாளினால் செதுக்கப்பட்ட குறட்டினையுடையது. சில்லுகளில் பொருத்தப்பட்ட ஆர்கள் கூதிர் காலத்தே வானில் தோன்றும் மதியின் கிரணங்கள் போல் தோன்றும் பல வகைகள் செல்வர்க்குப் பூசப் பெற்றுப் பலவகைச் சித்திரங்களை உடையனவாக இருந்தன. இதில் தமிழரின் பண்பாட்டுக் கூறுகள் காணப்படுகின்றன என்பதை,

**" தச்சச் சிறாஅர் நச்சுப் புனைந்த**
**ஊரா நற்றே குருட்டிய புதல்வர்''[7]**

என்ற அடிகளால் சிறுபிள்ளைகள் இழுத்து விளையாடுவதற்காக அக்காலத் தச்சர்கள் சிறுதேர் செய்தனர் என்பதைத் தச்சர் குடியிற்

பிறந்த சிறுவரும் சிறு தேர் செய்தனர் என்பதும் இத்தேர் செய்து வினையாடும் பழக்கம் இக்காலத்திலும் உள்ளது. ஒவ்வொரு ஆண்டும் ஆடிமாதம் 18 – ஆம் நாளான ஆடிப்பெருக்கன்று சிறுவர்கள் பல்வேறு வடிவங்களில் தேர்கள் செய்து வருவது இக்காலத்திலும் நடைமுறையில் உள்ளது.

### மட்கலத் தொழில்

புதிய கற்காலத்தில் பயிர்த்தொழில் செய்யவும், விலங்குகளைப் பழக்கவும், நெசவு முதலிய தொழில்களைக் கற்கவும் நேர்ந்தது. மக்கள் உணவுப் பொருட்களைச் சேமித்து வைக்க மட்பாண்டங்களைச் செய்து கொண்டனர். இவர்களுக்கு முன் வாழ்ந்த மக்கள் விலங்குகளின் தோலினாலாகிய பைகள் தாவரக் கனிகளின் ஓடுகள் போன்றவற்றைப் பயன்படுத்தினர். அதிக அளவில் மண் பாத்திரங்கள் செய்யச் சக்கரங்கள் பயன்படுத்தப்பட்டன என்பதை,

**“ வனைகலம் திகிரியின் குமிழி சுழலும்**
**துணை செவில் தலைவாய் ஓவிறந்து விரிக்கும்”[8]**

என்ற அடிகளால் அறியலாம். குயவன் வனைகின்ற மட்கலத்தில் சக்கரம் போலக் குமிழி சுழன்று தோன்றும் விரைந்த செலவினையுடையவாய் ஒழிவின்றி ஓடும் ஆறு என்பது பொருளாம். நீரின்கண் சுழலுக்கு உவமையாகக் குயவன் மட்கலஞ் செய்யும் உருளையின் சுழற்சி கூறப்படுகிறது.

### கொல்லுத் தொழில்

பண்டைத் தமிழரிடையே இரும்புத் தொழில் செய்யும் கொல்லன் இருந்தான் அவன் தொழில் செய்யும் உலைக்கூடம் இருந்தது. அவன் வைகறையில் வேலை செய்யத் தொடங்கினால் அவன் இரும்படித்த ஓசை கேட்டு மாடத்து உறங்கிய புறவின் சேவல் அஞ்சி

உறக்கத்திலிருந்து விழித்தது என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது என்பதை,

**“ பொன்மொழித் திரிதரும் போக்கருங் கங்கைப்**
**பெருநீர் போகும் இரியல் மாக்கள்**
**ஒருமரப் பாணியில் தூங்கி யாங்குத்**
**தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச்”[9]**

என்ற அடிகளால் அறியலாம்.

ஒரு வகையில் கொல்லுத் தொழிலைத் தச்சுத் தொழிலின் ஒரு பகுதியாகக் கருதலாம். சங்ககாலப் பொருளியல் வாழ்வியல் கொல்லரும், தச்சரும் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தனர் என்பதை அறியலாம். கொல்லர்கள் தோலாலான துருத்தியைக் காலால் மிதித்துத் தீயுண்டாக்கினர், குறட்டினைப் பயன்படுத்தினர் என்பதை,

**“ ................................... மென்றோல்**
**மிதியுலைக் கொல்லன் முறிகொடிற்றன்ன”[10]**

என்ற அடிகளால் அறிலாம்.

உலோகத் தொழில்

பண்டைத் தமிழர் பலவகை உலோகங்களைப் பயன்படுத்தித் தங்களுக்குத் தேவையான பொருட்களைச் செய்வதில் சிறப்புற்றிருந்தனர். இரும்பு, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு தொழில் செய்யும் கொல்லர்கள் இருந்தது போலவே வெண்கலம் செம்பு முதலிய உலோகங்களை உருக்கும் திறம் பெற்று அவற்றால் மக்கள் பயன்படுத்துவதற்குரிய பலவகையான பொருட்களையும் செய்ய வல்லவா் தொழிலாளர்கள். ஊர்தோறும் தங்களுக்குரிய தொழில் வகைகளைப் பெருக்கியிருந்தனர். வெண்கலத்தை உருக்கி கலங்கள் முதலியன செய்பவர் கஞ்சகாரர் என்றும், செம்பினால் கலம் செய்வார் செம்பு

கொட்டிகள் என்றும் அழைக்கப்பட்டனர். செம்பு, வெள்ளி, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு கலன்கள் செய்யப்பட்டதற்கான சில சான்றுகளைக் காணலாம்.

மதுரை கடைத்தெருவில் செம்பு நிறுத்து வாங்கப்பட்டது என்பதை பெரும்பாணாற்றுப்படையில் காணலாம்.

செல்வந்தர் இல்லங்களில் அன்றாடத் தேவைக்குப் பொன்னாலும் வெள்ளியாலும், பாத்திரங்களைப் பயன்படுத்தினர். வயிரக்கற்கள் இழைத்த கலன்களும் வழக்கில் இருந்தன. கரிகாலன் அரண்மனையில் இருந்த பணிப்பெண்டிர் அரசனுக்கும் அவனுடைய விருந்தினர்க்கும் பொற்கலத்தில் கள்ளை ஊற்றிக் கொடுத்தனர் என்பதை

**“ இழையணி வனப்பி னின்னகை மகளிர்**
**போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்”**[11]

என்ற அடிகளால் வெள்ளியாலான கலம் உண்கலமாகவும் பயன்பட்டது. சிறிய வெள்ளிக்கலன்கள் பெரியவர்கள் உணவு உண்ணப் பயன்பட்டன. இளந்திரையன் அரண்மனையில் இவ்வெள்ளிக் கலன்கள் இருந்தன என்பதை,

**“ மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி**
**மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து**
**ஆனா விருப்பிற் றானின் றூட்டி**
**மங்குல், வானத்துத் திங்க ளேய்க்கும்”**[12]

என்ற அடிகளால் அறியலாம். இவ்வாறு சங்ககால மக்கள் உலோகத் தொழிலில் சிறப்புற்று விளங்கினர்.

### தோல் தயாரிக்கும் தொழில்

பண்டையத் தமிழர்கள் தங்களுடைய கால்களுக்குத் தேவைப்படும் காலணிகளைத் தாங்களேத் தயாரித்து அணிந்தனர் என்பதை,

**"புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ"**[13]

என்ற அடிகளில் இடையர்கள், காடு, மேடுகளில் திரிய வேண்டியிருப்பதால் எப்பொழுதும் தொடுதோல் உடையராய் இருப்பர் என்பதை நாம் அறிலாம்.

வன்மை ஒலியைத் தருவதற்கேற்ற வகையில் போர் முரசங்களுக்குத் தோல்களைப் போர்த்தினர். அதைப் போலவே மென்மையான ஒலியைத் தரவல்ல பல தோற்கருவிகளும் செய்யப்பட்டன. இதற்கு மான்தோலைப் பயன்படுத்தினர். முழவு, பதலை, சிறுமுழா, இணைப்பாறை, தடாரி, துடி, தண்ணுமை போன்ற தோற்கருவிகளும் செய்யப்பட்டன என்பதை,

**"மான்தோல் சிறுபறை கறங்கக் கல்லென"**[14]

என்ற அடிகளால் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த பண்டைய தமிழர் தோலின் பயனறிந்து, வாழ்க்கைக்கு தேவையான பயன்படு பொருளைத் தோலைப் பயன்படுத்திய முறைகளை அறிய சங்கப் பாடல்கள் பெரிதும் துணை செய்வன. சங்கப் புலவர்கள் பலவிடங்களில் தோலை உவமையாகப் பயன்படுத்தியுள்ள பாடல்களின் வாயிலாகத் தோலின் நிறம், தன்மை, பயன் ஆகியவற்றை அறியமுடிகிறது. அவர்கள் தோலுக்கு வழங்கிய வேறு பெயர்களை இங்குக் காணலாம். சுதள், பச்சை, உரிவை, உரி, சருமம், போன்ற பெயர்களையும் அறியமுடிகின்றது. விலங்குகளின் தோலைக் கொண்டு அவற்றின் திண்மை உறுதிக்கேற்ற வகையில் பயன்படு பொருளாக ஆக்கினர்.

**அணிகலத் தொழில்**

அழகுக்கு அழகு செய்வன அணிகள். அணிதலால் அணியாம் இப்பழக்கம் தொன்றுதொட்டுப் பழக்கத்திலிருப்பது, தொடக்க காலத்தில் இயற்கையோடு இணைந்து வாழ்ந்த மக்கள் தழையாடையை அணிந்தது போல வண்ண மலர்கள், கொடி, இலை ஆகியவற்றால் தம்மை அணி செய்து கொண்டனர்.

சங்ககால அரசரது முடி அரசமா தேவியின் முடி, பலவகைக் கழுத்தணிகள், கையணிகள், மேகலை, பலவகை மோதிரங்கள் முதலிய அணிவகைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பொன் மட்டும் கொண்டு செய்யப்பட்ட நகைகளும், பொன்னில் கல்பதித்துச் செய்யப்பட்ட நகைகளும் என இரு வகை நகைகள் குறிக்கப்பட்டுள்ளன. முதல் வகையைச் செய்பவர் உருக்குத் தட்டார் எனவும், பின்னதைச் செய்பவர் இரத்தினப் பணித்தட்டார் எனவும் குறிக்கப்பட்டனர். இவர்கள் பொன்னால் பல்வேறு அணிகலன்களைச் செய்தனர். பண்டைய காலத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும் முடியணிந்திருந்தார்கள். திருமுருகாற்றுப்படை முருகப் பெருமான் முடியை அணிந்திருந்தான் என்று கூறுகிறது.

முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருப்பரங்குன்றத்துச் சோலையில் விளையாடிக் கொண்டிருந்த சூரர மகளிர் சீதேவி என்னும் தலைக் கோலத்துடனே வலம்புரி வடிவாகச் செய்த தலைக் கோலத்தையும் தலையில் வைத்து நெற்றியின்கண் சுறாவினது அங்காந்த வாயாகப் பண்ணின தலைக்கோலம் தங்கப் பண்ணினர் என்பதை,

> **“ தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்**
> **திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்**
> **மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்தத்”**[15]

என்ற அடிகளால் அறியலாம்.

**போர்த்தொழில்**

பண்டையத் தமிழ்ச் சமுதாயத்தில் வீரமும் காதலும் இரு கண்களாகப் போற்றப்பட்டன. மக்களின் புறவாழ்வில் மேற்கொள்ளப்பட்ட தொழில்கள் அவர்கள் அகவாழ்வு சிறக்கப் பயன்பட்டன. மக்களின் தலைவனாகத் திகழ்ந்த மன்னனின் தொழில் தனது நாட்டையும், மக்களையும் அறநெறியோடு வழுவாது பாதுகாத்தலாகும். சில நேரங்களில் தன் நாட்டு மக்களைப் பிறநாட்டு மன்னன் தாக்குதலின்று காப்பாற்ற வேண்டிய சூழல் ஏற்படும். அந்நிலையில் போர்த்தொழிலில் மன்னன் ஈடுபட வேண்டி நேரிடும் பண்டைக் காலத்தில் மன்னர்கள் தம்மின் மிக்கார் எவருமில்லை என்ற பெருமித உணர்வோடு தம் அரண்மனை முற்றத்தில் மகளிர் விளையாடும் பந்தையும் பாவையையும் போரை விரும்பிக் கட்டின. நெடிய கொடியின் அருகே கட்டித் தொங்கவிடுவர் பந்தும் பாவையும் தொங்கவிடுதலின் கருத்து பகைவரைப் பெண்டிர் போலக் கருதுதலாகும். ஆண்மையுடையார் இருப்பின் இவற்றை அறுமின் என்று குறிப்பை உணர்த்துவனவாகும். இக்கருத்தை திருமுருகாற்றுப்படையில்,

**“ செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி**
**வரிப்புனை பந்தொடு பாவை தூங்க**
**பொருநர்த் தேய்த்த போரரு வாயில்”**[16]

என்ற அடிகளால் அறியலாம்.

பண்டையத் தமிழர்கள் வீரத்தில் சிறந்தவர்களாக விளங்கியுள்ளனர். நாட்டை ஆண்ட மன்னர்களும் வீரம் மிக்கவர்களாக இருந்து நாட்டைச் சிறப்புற ஆட்சி செய்துள்ளனர்.

**மீன் பிடிக்கும் தொழில்**

பண்டையத் தமிழ் மக்கள் மீன் பிடிப்பதை ஒரு தொழிலாக வைத்திருந்தனர். குட்டம், வயல், இலஞ்சி, பொய்கை முதலியவற்றில் பகழியையும், வில்லையும் ஒத்த கயலும், இறால் மீனும் பிறழுகின்ற கரிய பெரிய குளத்திலே தம் மக்களுடன் உலாவி மீனைப் பிடித்தனர் என்பதை,

**“ செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்**
**மையிருங் குட்டத்து மகவொடு வழங்கி**
**கோடை நீடினும் குறைபடல் அறியாத்**
**தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும்**
**கொடுமுடி வலைஞர் குடிவயிர் சேர்ப்பின்”**[17]

என்ற அடிகளால் அறியலாம்.

கடற்கரைப் பகுதியில் பெரிய வலைகளை வீசி மீன்பிடிக்கும் தொழில் சிறப்பாக நடைபெற்றது. எயிற்பட்டினத்தில் கடல் கொணர்ந்து ஒதுக்கிய அகில் மர விறகால் தீயினை எரித்து பெருந்தோளையும், மதிமுகத்தையும், வேல் நோக்கையும் உடைய நுளைமகள் காய்ச்சி அரித்த தேறலைப் பரதவர் உண்ணக் கொடுப்பர் என்பதை,

**“வறற்குழற் சூட்டின், வயின் வயின் பெறுகுவீர்”**[18]

என்ற அடிகளால் சங்ககால மக்கள் தங்கள் உணவு வகையில் மீனையும் சேர்த்துள்ளனர் என்பதை அறியலாம்.

**வாணிபம்**

நாட்டின் உணவு வளத்திற்கு உழவர் காரணமாய் இருத்தல் போலவே பொருளாதார வளத்திற்கு வணிகர் சிறந்தகாரணமாவர். நாட்டில் ஓரிடத்தில் உண்டாகும் விளைபொருள்களை, அவை அருகில் இருக்கும் பிற இடங்களுக்கு அனுப்புவதும், கொண்டு சென்று விற்பதும், அவற்றைத் தத்தம் ஊர்களில் விற்றலும் வணிகர் தொழிலாம். இத்தொழில் முறையால் நாட்டின் செல்வ வளம் கொழிக்கும்.

இதுபற்றியே சமுதாயத்தில் வணிகர் சிறப்பிடம் பெற்றனர். எனவே திருவள்ளுவர் இவர்களைத் தாழ்விலாச் செல்வர் என்றும் சாத்தனார் என்னும் மன்னர் பின்னோர் என்றும் கூறுவர்.

மிகப் பண்டைக்காலம் தொட்டு தமிழகம் பிற நாடுகளோடு பரந்த வாணிபம் செய்து வந்துள்ளது. வெளிநாட்டுச் சந்தைகளில் எப்போதும் விரும்பி வாங்கப்பட்ட பல அரிய பொருள்கள் தமிழகத்தே கிடைத்தமையே அவ்வாணிபத்தின் முக்கிய காரணமாகும். கொற்கை பாண்டிய நாட்டின் துறைமுகப்பட்டினம் என்றும், கொற்கையின் பாண்டிய நாட்டின் பழம்பெருஞ் செல்வம் முத்து என்பதை பல இலக்கியங்களின் வாயிலாக அறியலாம். பாண்டிய நாட்டின் முத்து பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாகியுள்ளது. கொற்கையில் உப்பு வணிகர் வண்டியில் உப்பை ஏற்றிக் கொண்டு வாணிபத்தின் பொருட்டுச் சென்றனர். தங்களின் மனைவி மக்களுடன் செல்வது வழக்கமாக இருந்தது.

வலிமை வாய்ந்த எருமைக் கடாவைப் பூட்டிய வண்டியில் உப்பை ஏற்றிச் சென்றனர். அவ்வண்டியின் சக்கரச் சுவட்டின் வழியே குழந்தைகளைப் போன்று குரங்குகளும் தொடர்ந்தன.

எயிற்பட்டினத்திற்கு அகில் முதலிய மணப்பொருள்கள் வந்தன என்பதை,

**"வீங்குதிரை கொணர்ந்து விரைமர விறகின்"**[19]

என்ற வரியால் அறியலாம். தொண்டை நாட்டுப் பட்டினம் என்ற துறைமுகத்தில் வடநாட்டுப் பொருள்களும் மேலை நாட்டுக் குதிரைகளும் பிறவும் இறக்குமதியாயின. அங்கு வாழ்ந்த பரதவர் செல்வ வளம் பெற்றுத் திகழ்ந்தனர். வணிகர் பெரிய வளமலைகளில் வாழ்ந்தனர். அவர்தம் மகளிர் மெல்லிய துகிலையும், பசிய வடங்கள் கோத்த மணிகளையும் பிற அணிகளையும் அணிந்து செல்வச் செழிப்போடு

காணப்பட்டனர். அவர்தம் கால்களில் பொற்சிலம்புகள் ஒலித்தன. அவர்கள் பொன்னாற் செய்த கழற்சிக் காய்களைக் கொண்டு மணலில் விளையாடினார்கள். அத்துறைமுக நகரில் மிகவுயர்ந்த கலங்கரை விளக்கும் இருந்தது என்பதை,

**“ ………………………. பாற்கேழ்**
**வால்உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்**
**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**
**…………………………….**
**முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்**
**பட்டின மருங்கின் அசையின்”**[20]

என்ற அடிகளால் அறியலாம்.

### வள்ளுவர் வாழ்த்தும் உழவும் தொழிலும்

சிந்திக்கத் தெரியாத காலத்தில் மனிதன் விலங்கைப்போல் வாழ்ந்தான். காடுகளிலும் மலைகளிலும் சுற்றித் திரிந்தான்; பசித்த போது அங்குக் கிடைத்த காய்களையும் கனிகளையும் கந்த மூலங்களையும் தின்று பசியைத் தணித்துக் கொண்டான். விலங்குகளோடு போரிட்டு அவற்றைக் கொன்று தின்றான். தாகமெடுத்தபோது ஆறுகளிலும் ஓடைகளிலும் ஓடியநீரைக் குடித்துத் தன் நீர் வேட்கையைத் தணித்துக் கொண்டான்.

மழைக்கும் பனிக்கும் வெயிலுக்கும் மலைக்குகைகளும் மரப்பொந்துகளும் மலைக்காடுகளும் அவனுக்குச் சரணாலயமாக அமைந்தன.

மானத்தைக்காக்க உடலில் ஆடை அணிய வேண்டுமென்று அவனுக்குத் தெரியவில்லை. அவன் விலங்குகளைப் போல் ஆடையின்றி அலைந்தான். சில பொழுது தான் கொன்ற விலங்குகளின் தோலைப்

போர்வையாகப் பயன்படுத்திக் கொண்டான். அதுகாறும் அவன் எதைப்பற்றியும் சிந்திக்கவில்லை. மானம், அவமானம் நல்லது கெட்டது போன்ற செயல்கள் அவனுக்கு என்னவென்றே அறியவில்லை. அது அவன் சிந்திக்காத காலம். இயற்கை ஒன்றையே பார்த்து அனுபவிக்கத் தெரிந்த காலம். சூரியன் மாலையில் மறைந்த பிறகு, சூழ்ந்த இருளைக் கண்டு பெரிதும் பயங்கொண்டு அவன் வாழ்ந்தகாலம்.

சிந்திக்கத் தொடங்கிய பிறகே அவன் தெளிவு பெற்றான். இறைவன் படைப்பிலே, மற்ற உயிரினங்களைவிடத் தான் உயர்ந்தவன் என்பதை உணர்ந்தான். அதுவரை தானும் விலங்குகளைப்போல் வாழ்ந்து வந்ததை நினைத்து வெட்கப்பட்டான்.

மண்ணிலே வளருகின்ற தாவரங்கள், காய்களையும் கனிகளையும் வழங்குவதைக் கவனித்த போது, தனக்கும், ஏன் மற்ற உயிரினங்களுக்கும் உணவை வழங்குவது நிலமே என்பதை அறிந்தான். தானாக வளரும் மரங்களிலும், செடி கொடிகளிலும் காய்த்த பழங்களையும் காய்களையும் உண்பதைவிட அக்காடுகளை அழித்து விளைநிலமாக்கி அதிலே தான் விரும்பிய தானியங்களையும் காய்கறிகளையும் கனிவகைகளையும் பயிரிட்டால் தான் விரும்பிய உணவுகளை, தான் விரும்பிய நேரத்தில் உண்டு மகிழலாம் என்று அவன் நினைத்தான். புல்லும் பூண்டும் செடியும் கொடியும் மண்டிக் கிடந்த காட்டை அழித்து அந்த நிலப்பரப்பிலே தானியங்களை விதைத்தான். செடிகளை நட்டான். இப்படித்தான் உழவுத்தொழிலுக்கு அன்று வித்திடப்பட்டது.

பச்சையாகத் தானியங்களையும் காய்கனிகளையும் கிழங்குகளையும் தின்பதைவிட, நெருப்பிலே வாட்டியும் அவித்தும் சுட்டும்

சாப்பிட்டால், என்ன என்று அவன் நினைத்த போதுதான் சமையற் கலைக்கும் பிள்ளையார் சுழிபோடப்பட்டது.

மழையிலும் பனியிலும் வெயிலிலும் வாடாதிருக்க ஒரு புகலிடம் தனக்குச் சொந்தமாக இருக்க வேண்டுமென்று நினைத்த போதுதான் குடிசைகளையும், வீடுகளையும் கட்ட வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு ஏற்பட்டது. அதுதான் வீடு கட்டும் தொழிலுக்கு அவன் முதன் முதலில் போட்ட அத்திவாரம் ஆகும்.

உழவுத் தொழில் செய்வதற்கும் குடிசைகளை ஆரம்பிப்பதற்கும் கருவிகள் தேவை என்பதை அறிந்தபோது தான் கருவிகள் தயாரிக்கும் தொழிலில் மனிதன் ஈடுபடத் தொடங்கினான். அன்றுதான் தச்சுத் தொழிலும் மெல்ல மெல்ல வளரத் தொடங்கிற்று.

காட்டிலும் மேட்டிலும் காட்டுமிராண்டிகளாக விலங்குகளைப் போல் சுற்றித் திரிந்த மனிதன் சிந்திக்கத் தொடங்கியதும் இவ்வாறு உழவுத் தொழிலும் மற்றத்தொழில்களும் வளரத் தொடங்கின. தன் வாழ்வுக்கும் முன்னேற்றத்துக்கும் உழவும் தொழிலும் உயிர் நாடிகளாக விளங்குவன என்னும் உண்மையை மனித இனம் நன்கு புரிந்து கொண்டது. இ∴து உழவும் தொழிலும் பெற்ற பரிணாம வளர்ச்சியின் வரலாறாகும்.

உழவுத்தொழிலின் சிறப்பையும் மற்றத் தொழில்களின் மாண்பையும் உணர்ந்து கொண்ட பிறகுதான் மனித இனம் பாரதியார் பாடியதைப்போல் “உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை” செய்யவும் ஆடாமல் அசையாமல், ஆடையில் அழுக்குப்படாமல் வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை” செய்யவும் தொடங்கி விட்டது. இன்றைக்கும் உலக நாடுகள் அனைத்தும் உழவும் தொழிலும் தங்களுடைய பொருளாதார வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும்

ஆணிவேராய் அச்சாணியாய் இருப்பதையுணர்ந்து அவற்றிற்கு உரிய இடத்தை வழங்கி உயர்வு பெறத்துடிக்கின்றன.

பண்பாட்டிலும் நாகரிகத்திலும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்த மிகவுயர்ந்த நிலையிலிருந்து வரும் தமிழகம் தொன்று தொட்டு உழவையும் மற்றத்தொழில்களையும் வளர்ப்பதிலே முன்னோடியாகத் திகழ்ந்து வந்திருக்கிறது. நாடாண்ட மன்னர்களையன்றி நாட்டு நலத்திலே அக்கறை கொண்ட நற்றமிழ்ப் புலவர்களும் நல்லறிஞர்களும் உழவின் உயர்வையும் மற்றத் தொழில்களின் சிறப்பையும் அவ்வப் பொழுது பாடல்களின் மூலமாகவும், கதைகளின் வாயிலாக மக்களுக்கு எடுத்துச்சொல்லி வந்திருக்கிறார்கள். அவர்களுள் தேன்குறள் தந்து வான்புகழ்பெற்ற வள்ளுவர் தலைசிறந்து விளங்குகிறார்.

உணவின்றி எவ்வுயிரும் உயிர் வாழ்தல் இயலாது. உணவு இல்லாவிட்டால் பசியாலும் பட்டினியாலும் மக்கள் வாடுவர். உலகில் எத்தொழிலும் நடைபெறாது கலைகள் வளரா. அமைதி அழியும் பாசமும் பற்றும் அருகிப்போகும். உறவும் நட்பும் கருகிப்போகும் ஆதலால் உயிர்களை வாழவைக்கும் உணவே உயர்ந்ததாய் இன்றிய மையாததாய் விளங்குகிறது.

அந்த உணவு மனிதருக்குக் கிடைக்க உதவுவது உழவுத் தொழிலேயாகும். ஆதலால் இந்த உலகமே அந்த உழவுத்தொழிலை நம்பித்தான் வாழ்கிறது. அக்காரணத்தால், இவ்வுலகில் எத்தனையோ தொழில்கள் இயங்கிவந்தாலும் தலையாய – ஏன், என்றென்றும் நிலையாய – தொழிலாய் விளங்குவது உழவுத் தொழிலேயாகும். ஏர்த் தொழிலாம் உழவுத் தொழிலைச் செய்வதிலே சிலதுன்பங்கள் இருக்கலாம். இருப்பினும் மற்றத்தொழில்கள் அனைத்தும் அந்த உழவுத்தொழிலின் பின்னேதான் நிற்கின்றன. இந்த உண்மையை

“ சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை”[21]

என்னும் குறள் வாயிலாகத் தெளிவுற உணர்த்துகின்றார் தெய்வப் புலவர் திருவள்ளுவர்.

ஆடம்ஸ்மித் என்பவர் உலகப்புகழ்பெற்ற பொருளாதார மேதை அவர் “செய்யும் தொழில்கள் எல்லாவற்றுள்ளும் தலையாய தொழில் உழவுத் தொழில்” என்கிறார். இக்கருத்தை ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இந்தியாவில் உள்ள தமிழ்நாட்டில் விளங்கிய திருவள்ளுவர் கூறிவிட்டார் என்றால் அவருடைய வருமுன் உரைக்கும் ஞானத்தை என்னவென்பது?

இவ்வுலகின் செல்வம் உழவின் அடிப்படையில் அமைந்துள்ளது என்று இயற்கை வாதிகள் இயம்புகின்றார். அது முற்றிலும் உண்மையேயாகும். ஒரு நாட்டின் வருவாய் வளர்ச்சி வாழ்வு ஆகிய அனைத்தும் உழவுத் தொழிலை அடிப்படையாய் ஆதாரமாய்க் கொண்டுள்ளன. இந்தியாவைப் பொறுத்தவரை எழுபது விழுக்காடு விவசாயத்தாலும் விவசாயம் சார்ந்த தொழில்களாலும் கிடைக்கின்றன. இது பொருளாதார வல்லுநர்கள் தரும் புள்ளிவிவரங்கள் ஆகும். அதாவது நாட்டின் வருவாயில் பாதியை உழவுத் தொழில் ஈட்டித்தருகிறது. வீட்டின் குடும்பபாரத்தைக் குடும்பத்தலைவன் தாங்குவதுபோல், நாட்டின் பாரத்தை உழவர் பெருமக்கள் தாங்குகிறார்கள். இந்த உண்மையை உலகுக்கு உணர்த்த விழையும் செந்நாப்போதார்

“ உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து”[22]

என்கிறார்.

உழவர்கள் உயர்ந்தவர்கள். ஏனென்றால் அவர்கள் உழவுத் தொழில் செய்யாமல் மற்றத்தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு உணவை வழங்கும் பெரும் பொறுப்புடையவர் ஆவர். ஒரு தேர் ஓடுவதற்கு அதன் அச்சாணி அவசியமாக இருப்பதுபோல் மனித வாழ்க்கை எனும் தேர் தடைபடாமல் ஓடுவதற்கு ஆதாரமாக இருப்பவர்கள் உழவர் பெருமக்களாவர். அதன் காரணமாகவே அவர்களை அச்சாணி என்று விளிக்கிறார். பெரிய தேரைத் தாங்குவது அச்சாணி. பெரும்பகுதி மக்களுக்கு உணவை வழங்கி அவர்களைத் தாங்குபவர்கள் உழவர்களே யாவர் என்கிறார். ஆம்! இந்த ஏர்முனை தான் இந்தப்பார் முழுவதையும் தாங்கி நிற்கும் வலிமை பெற்று விளங்குகின்றது. “அச்சாணி இல்லாத தேர்முச்சாணும் ஓடாது. என்பது பழமொழி. சமுதாயத்தின் அச்சாணியாக விளங்கும் உழவர் பெருமக்கள் உழவைக் கைவிட்டால் வாழ்க்கைத் தேர் ஒரு சாண்கூட ஓடாது. இது முற்றிலும் உண்மையாகும்.

மன்னன் முன்னால் செல்வான். அவனைச் சார்ந்த அமைச்சர்களும் மற்றவர்களும் அவன் பின்னால் செல்வர். ஆசிரியர் முன்னால் செல்வார். அவருடைய மாணாக்கர்கள் அவருக்குப் பின்னால் அவரைத் தொடர்ந்து செல்வர். ஆம்! உயர்ந்தோர் முன் செல்வர் மற்றவர்கள் அவரைத் தொடர்ந்து பின்னால் செல்வர். இஃது உலகநியதி. உலகில் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டு வாழ்பவர்களுள் மேன்மையுடையவராய் விளங்குபவர்கள் உழவர் பெருமக்களேயாவர். ஆதலின் அவர்கள் முன்னே செல்கின்றனர். மற்றவர்கள் உழவர்களுக்குப் பின்னால், மன்னனைத் தொடர்ந்து செல்லும் அதிகாரிகளைப் போல குருவைப் பின்தொடர்ந்து செல்லும் சீடர்கள் போலத் தொழுது பின் செல்கின்றனர். இந்த அரிய கருத்தை,

" உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்;மற் றெல்லாம்

தொழுதுண்டு பின்செல் பவர்".[23]

என்கிறது வான்புகழ் வள்ளுவம்.

தொழில்களைத் தொடங்குவதற்கு முன்னர், எத்தொழில் செய்வதற்கு உரியது என்பதை நன்கு ஆய்ந்து தெளிதல் வேண்டும். கள்ளக் கடத்தல் தொழில் கண்ணியமான தொழிலா? கள்ளச் சாராயம் காய்ச்சுவதும் மக்கள் நலத்தில் அக்கறை கொண்டோர் செய்யும் தொழிலா? அத்தொழில்களை நாட்டு நலத்திலும் மக்கள் வாழ்விலும் அக்கறையுடையோரால், தன்மானத்தையும், நன்மதிப்பையும் உயிராய்க் கருதி வாழும் உயர்ந்தோரால் நடத்தப்படக்கூடிய நல்ல தொழில்களா? இல்லவே இல்லை. ஆதலின் நல்ல தொழில்களாக? நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் நன்மை பயக்கும் தொழில்களாகாது. தன்மானத்தையும் சுயகௌரவத்தையும் போற்றிக் காக்கும் தொழில்களாகத் தேர்ந்தெடுத்து, அச்செயல்களில் ஈடுபடுவதே சாலச் சிறந்ததாகும். மேலும் சான்றோர் போற்றும் செயலும் ஆகும்.

தொழிலை நடத்துவதற்கேற்ற காலம், தொழிலை நடத்துவதற்கு ஏற்ற திறமை வாய்ந்த மனிதர் செய்யத்தகுந்த தொழில் ஆகியவற்றை அறிந்து செயல்படுதல் வேண்டும். இதனை

" செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு

எய்த உணர்ந்து செயல்."[24]

என்னும் குறளால் இனிதே உணர்த்துகின்றார் தெய்வப்புலவர் திருவள்ளுவர்.

எத்தொழிலையும் வெற்றிகரமாக நடத்தி இலாபம் பெற்றிட வேண்டுமெனில், அத்தொழிலைப் பற்றிய நுட்பங்களைத் தெளிவாக

அறிந்து வைத்திருக்க வேண்டும். திருவள்ளுவர் காலத்தில் மிகப் பெரிய தொழிலாகக் கருதப்பட்ட தொழில் உழவுத்தொழிலாக மட்டுந்தான் இருந்திருக்க முடியும். ஆதலால் இத்தொழிலைப் பற்றிய நுட்பங்கள் பலவற்றை அவர் நன்கு அறிந்து வைத்திருக்கிறார். நாட்டின் நலனைக் கருதியும் உழவுத் தொழில் புரிவோர் நல்ல மகசூலைப் பெறுவதற்காகவும் ஒருசில இரகசியங்களை அதாவது நுட்பங்களை மட்டும் எடுத்துச் சொல்கின்றார்.

**"அகல உழுவதிலும் ஆழ உழுவதே சிறந்தது".**

என்பது பழமொழி. அதனுடைய உட்பொருளைத் தெளிவாக உணர்த்தும் வகையான் ஒரு குறளை யாத்து வழங்கியிருக்கிறார் வையம் போற்றும் ஐயன் திருவள்ளுவர்.

**" தொடிப்புழுதி கஃசா உணக்கில் பிடித்தெருவும்**
**வேண்டாது சாலப் படும்".**[25]

விளைச்சலைப் பெருக்கிட இன்றைக்கு நாம் பல்வேறு இரசாயன உரங்களை நிலத்தில் இட்டு வருகின்றோம். விளைச்சலைப் பெருக்கி, மன உளைச்சலை சுருக்கி, மகிழ்ச்சி அடைந்து வருகின்றோம். ஆனால் திருவள்ளுவரோ, அன்றைக்கே ஒரு பிடி உரம் வயலில் இடாமல், விளைச்சலை எப்படிப் பெருக்குவது என்னும் சித்துவேலையை மேலே குறிப்பிட்டுள்ள குறளில் கூறியிருக்கிறார். பயிரிடப்பட வேண்டிய நிலத்தை உழுது ஒரு பலம் புழுதி, கால் பலமாகும் படி நன்றாகக் காயவிட்டால் பின் அவ்வயலில் ஒரு பிடி உரம் இடவேண்டியதில்லை. அந்நிலத்தில் பயிர் செழித்து வளரும். விளைச்சலும் கூடுதலாகும். இதுதான் விளைச்சலைப் பெருக்க வள்ளுவர் கூறும் நுட்பமான அறிவுரையாகும்.

பொறுப்பற்ற ஆடவர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் தீயவர்களுடன் கூடிக் குடியிலும் சூதாட்டத்திலும் தீவிரமாக ஈடுபட்டு பல நாட்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்று தங்கள் மனைவிமார்களைப் பார்க்காமல், குடும்பத் தலைவர்களுக்குரிய கடமைகளைச் செய்யாமல்

இருப்பார்கள். அவர்களுக்குத் திடீரென்று ஒருநாள் தங்கள் வீட்டு நினைவு வந்துவிடும். அவர்கள் தங்கள் வீடுகளுக்குச் செல்வார்கள். அப்போது அவர்கள் மனைவிமார்கள் என்ன செய்வார்கள்? பல நாள்கள் தங்களை மறந்து எங்கோ தங்கி விட்டு திடீரென்று தங்கள் நினைவு வந்து, விருந்தாளிகளைப் போல் வீட்டிற்கு வருகை தந்திருக்கும் பொறுப்பற்ற அந்தக் குடும்பத் தலைவனிடம் வெறுப்படைந்து ஊடல் கொள்வர். அதைப் போலத் தான் நிலத்திற்குச் சொந்தக்காரனும் நாள்தோறும் சென்று தன் நிலத்தைப் பார்க்காமல் இருந்தால் நிலமடந்தையும் அவனிடம் வெறுப்படைந்து பிணங்குவாள். அதை

**" செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும்".**[26]

என்கிறார் எல்லாம் அறிந்த இன்தமிழ் வள்ளுவர்.

எத்தகைய அருமையான உவமை! எத்துணை மாபெரும் அறிவுரை! உழவுத் தொழிலிலும் மறத்தொழிலிலும் ஈடுபட்டிருப்போர் திருவள்ளுவர் கூறும் தெள்ளிய அறிவுரைகளை உள்ளத்திற் கொண்டு தத்தம் தொழில்களைச் செய்து வந்தால் அத்தொழில்களில் அவர்கள் தலைசிறந்து விளங்குவர் என்பதில் சிறிதளவும் ஐயம் இல்லை.

**சங்ககாலத் திணைச் சமுதாயம்**

சங்ககாலம் உணவு தேடும் வாழ்க்கை முறைகள் மாறிய உணவு உற்பத்தி முறையில் மிகுந்த கவனம் செலுத்தப்பட்ட காலம். இதனால் உருவான நிலைத்த குடியிருப்புகளை, வாழ்வியல் நெறிகளைச் சங்கத் திணைச் சமுதாய வாழ்வு முறைகள் காட்டுகின்றன. நால்வேறு திணைச் சமுதாயங்களிலும் நால்வேறு வகையான உற்பத்தி முறைகளும் உற்பத்தி உறவு முறைகளும் நிலவியுள்ளன. குறிப்பிட்ட பொருளாதார அச்சை மையமாய்க் கொண்டு ஒவ்வொரு திணைச் சமுதாயமும் செயல்பட்டுள்ளது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற

நால்வகைத் திணைகளில் மருதத்தை மையமாகக் கொண்டு உருவான வேளாண் சமுதாய வாழ்க்கை நெறிகள் சங்ககாலம் நில உடைமைச் சமுதாயமாக மாறியதையும் அரசின் உருவாக்கத்தில் மருதநிலம் முக்கியத்துவம் பெற்றதையும் காட்டுகின்றன.

**திணைச் சமுதாயமும் வாழ்க்கை வேறுபாடுகளும்**

குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல் என்ற நால்வகைத் திணைச் சமுதாயங்களும் நால்வகையான இயற்கைச் சூழல்களை மையமாகக் கொண்டு அமைந்தவை. குறிஞ்சியின் மலை, மலை சார்ந்த இடங்கள், மலைவளத்தையும் புன்செய் வேளாண்மையையும் வேட்டைத் தொழிலையும் அடிப்படையாகக் கொண்டமைந்துள்ளன. தினையும் ஐவனவெண்ணெல்லும் புல்லரிசியும் மூங்கிலரிசியும் அவரையும் கிழங்கும் தேனும் வேட்டைப் பொருட்களும் இச்சமுதாயத்தின் அடிப்படை உணவுகள் உழவரால் உழுது விதைக்கப்படாதனவாய,

**“ உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே**
**ஒன்றே சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே**
**இரண்டே தீஞ்சுளைப் பலவின் பழமூஞ்க் கும்மே**
**மூன்றே கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே**
**நான்கே அணிநிற வோரி பாய்தலின் மீது அழிந்து**
**திணி நெடுங் குன்றம் தேன் சொரியும்மே”**[27]

எனும் இயற்கை வளத்தை உடையது குறிஞ்சி.

முல்லைநில வாழ்வு கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டது பால், மோர், தயிர், தினை, வரகு, கொள் அவரை என்பன இந்நில உணவுப்பொருட்கள். முல்லை முழுக்க முழுக்கக் கால்நடைப் பொருளாதாரத்தை மட்டுமே அல்லாமல் புன்செய் நில வேளாண்மையையும் அடிப்படையாகக் கொண்டிருந்ததை,

**" கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே**
**சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொ**
**டிந்தான் கல்லது உணாவு மில்லை".[28]**

எனும் பாடல் காட்டுகிறது.

இந்த இருவேறு வாழ்வு முறைகளிலிருந்து மருதமும் நெய்தலும் வேறுபட்டப் பொருளாதார மேம்பாடு உடையனவாய் இருந்துள்ளன. உணவு உற்பத்திக்கான அடிப்படை ஆதாரமாய் மருதநிலம் விளங்கியுள்ளது. இதை ஆற்றுப்படைப் பாடல்களும் புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியவையும் காட்டுகின்றன. பெரும்பாணாற்றுப்படையில் நாற்றுநடுதல், நெல்விளைத்தல், கடாவிடுதல் கரும்பாலை, அந்தணர் உறைவிடங்கள் ஆகியன பேசப்பட்டுள்ளன.

**" குடகாற் றெறிந்த குப்பை வடபாற்**
**செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றுந்**
**தண்பணை தழீஇய தளரா விருக்கை"[29]**

என வயல் வளமும்,

**" ஏணி யெய்தா நீணெடு மார்பின்**
**முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்**
**குமரி மூத்த கூடோங்கு நல்லில்"[30]**

என வேளாளர் இல்ல வளமும்,

**" கோடை நீடினுங் குறைபட லறியாத்**
**தோடாழ் குளத்த கோடுகாத் திருக்குங்**
**கொடுமுடி வலைஞர் குடி"[31]**

எனக் குளத்தின் வளமும் பாடப்பட்டுள்ளது.

இவ்வாறு நால்வேறு நிலங்களும் நால்வகை வாழ்க்கை முறைகளை உடையனவாய்க் காட்டப்பட்டுள்ளன. இந்த வேறுபட்ட

வாழ்வியல் முறைகள், வேறுபட்டபொருளாதாரச் சார்பை அடிப்படையாய்க் கொண்டவை என்பது வெளிப்படை. இந்த வேறுபட்ட வாழ்வைக் காட்டும் திணைச் சமுதாயங்களைச் சமச்சீரற்ற வளர்ச்சிப் போக்குகளாய்க் காட்டுகிறார் கா.சிவத்தம்பி.

உற்பத்தி சக்திகளின் மீது மனிதன் ஆதிக்கம் பெறுவது தான் மனிதகுல முன்னேற்றத்தின் ஊற்றுக் கண்களாகும். இயற்கை நிலைமைகள், வரலாற்றுக் கட்டங்கள், இவற்றில் அமைந்துள்ள வேறுபாடுகள், பல்வேறு மக்களின் வளர்ச்சியிலும் பல்வேறு வர்க்கங்கள், சமூக நிறுவனங்கள், பண்பாட்டுத் துறைகள் ஆகியவற்றின் வளர்ச்சி வேகத்திலும் வேறுபாடுகளை ஏற்படுத்துகின்றன. இதனால் வரலாறு முன்னேறுகிறபொழுது சமுதாயத்தின் ஓர் பகுதி அல்லது மற்றோர் பகுதியில் வேகமாகவோ மெதுவாகவோ வளர்ச்சி காணப்படும்” எனும் மார்க்ஸ் எங்கெல்ஸ் கருத்தை எடுத்துக் காட்டி அதைச் சங்கத் திணைப் பாகுபாட்டுடன் பொருத்தி ஆராய்ந்துள்ளார் கா.சிவத்தம்பி இன்றைய சமுதாயச் சூழலிலும் இந்த சமச்சீரற்ற வளர்ச்சிப் போக்கே நிலவுவதை நாம் அறியலாம். நீர் நில வளமும் உற்பத்தி சக்தி, உற்பத்தி முறைகள் என்பனவற்றுக்கு ஏற்ப வாழ்க்கைத் தரமும் வேறுபட்டிருப்பதை அறியலாம்.

### சங்ககால வேளாண் பொருளாதாரம்

சங்ககாலம் இயற்கையோடு இயைந்த வாழ்வையும் இயற்கையைப் பொருளாதாரப் பெருக்கத்திற்கு ஏற்ப மாற்றியமைத்த முயற்சிகளையும் அடிப்படையாய்க் கொண்டமைந்த காலம். இயற்கை விளைபொருட்களாய்க் கிடைத்த பலா, வள்ளிக் கிழங்கு, தேன், மூங்கில் நெல் போன்றவற்றைப் பயன்படுத்திக் கொண்டவர்கள் வேளாண்மையின் மூலம் தினை, வரகு, கொள், அவரை, நெல், கரும்பு, பயிறுகள் போன்றவற்றை உற்பத்தி செய்யவும் கற்றுக் கொண்டனர். இந்த

இரண்டுக்குமே நிலம் அடிப்படையானது. இந்நிலம் நன்செய், புன்செய் எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. இந்நிலையில் புன்செய் வேளாண்மையும், நன்செய் வேளாண்மையும் திணைச் சமுதாயங்களின் இருவேறு செயற்பாடுகளாய் இருந்துள்ளன. குறிஞ்சி, முல்லை, ஆகிய இரு திணைகளிலும் புன்செய் வேளாண்மையே அடிப்படை ஏனைய மருதத்திலும் நெய்தலிலும் நன்செய் வேளாண்மை சிறப்பிடம் பெற்றுள்ளது.

நிலப்பாகுபாடு

வேளாண்மைக்குரிய நிலம் சங்க இலக்கியங்களில் வன்புலம், மென்புலம் என்று இரண்டாய்ப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. வன்புலம் எனும் சொல் முல்லை, மேட்டுநிலம், வலியநிலம், குறிஞ்சிநிலம் எனும் பொருளில் வன்பால் எனவும் இது குறிப்பிடப்பட்டுள்ளது. புன்புலம் எனும் சொல்லும் சங்க இலக்கியத்தில் ஆளப்பட்டுள்ளது. இது முல்லை நிலத்தையும் குறிஞ்சி நிலத்தையும் குறிக்க ஆளப்பட்டுள்ளது. புன்செய் எனும் சொல்லும் ஓரிடத்தில் வந்துள்ளது. இவ்வாறு நீர்வசதி அற்ற நிலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதற்கு மறுதலையாய் நீர் வசதியுள்ள நிலம் மென்புலம், மென்பால் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மென்பால் மருதநிலத்தையும் நெய்தல் நிலத்தையும் குறிப்பிடுகின்றது. மென்புலம், நெய்தல் நிலம், மருத நிலம் ஆகியவற்றுடன் முல்லை நிலத்தையும் குறிப்பிட ஆளப்பட்டுள்ளது. மருதநிலத்தைச் சார்ந்து அமைந்த முல்லை நிலத்தில் நடந்த வேளாண்மை

**“ குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்**
**நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்**
**பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்”**[32]

எனப் பேசப்பட்டுள்ளது. உணவு வளம் உடைய உழவர்களாகவே இவர்கள் காட்டப்பட்டுள்ளனர். எனவே இதுவும் சில இடங்களில் மென்புலம் எனப்பட்டுள்ளது. மருத நில வயல்கள் தண்ணடை எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**“ ………………………………… வாளை**

**நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளும்**

**தண்ணடை …………………………..”[33]**

எனத் தண்ணடை எனும் சொல், வளமான மருதநிலத்தைக் குறப்பிட ஆளப்பட்டுள்ளது.

**“ ……………………. பிணங்குகதிர்**

**அலமருங் கழனித் தண்ணடை யொழிய**

**இலம்பா டொக்கற் றலைவற்கோர்**

**கரம்பைச் சீறூர் நல்கினன்”[34]**

இப்பாடலில் தண்ணடை மருதநிலத்தூர் எனும் பொருளில் ஆளப்பட்டுள்ளது.

**புன்செய் வேளாண்மை**

புன்செய் வேளாண்மை குறிஞ்சி, முல்லை, எனும் இரு திணைகளிலும் முக்கிய வேளாண்மையாய் இருந்துள்ளது. குறிஞ்சி நிலப் பகுதிகளை ஆண்ட குறுநில மன்னர் பற்றிய பாடல்களில் புன்செய் வேளாண்மையின் சிறப்பும் பாடப்பட்டுள்ளது. பாரியின் பறம்பு நாடு ‘மென்தினை யாணர்த்து’ எனத் தினை எனும் ‘புது வருவாய்’ உடையதாய்ப் புகழப்பட்டுள்ளது. பேகன் நாடும் தினையைப் புது வருவாயாக உடைய நாடாகக் கருதப்பட்டுள்ளது. தினை 80 இடங்களில் சங்க இலக்கியங்களில் வந்துள்ளது. பெரும்பாலும் இது குறிஞ்சித் திணையிலும் சிறுபான்மை பிற திணைகளிலும் வந்துள்ளது. நெய்தல்

திணையில் உவமையாக ‘உணங்கு தினை துழவும் கைபோல்’ ‘தினைமருள் திரள்வீ’ எனவும் ஆளப்பட்டுள்ளது.

தினைவிதைப்பு இரு வேறு நிலைகளில் நடைபெற்றுள்ளது ‘மிளகுக்கொடி வளரும் மலைச்சாரலிடத்து காந்தளின் கிழங்கைப் பன்றிகள் கிளறி உண்டதால் உழுதநிலம் போல் அமைந்த அந்தப் புழுதி இடத்தில் அதையே உழவாகக் கொண்டு குறவர் விதைத்த முறை பாடப்பட்டுள்ளது. இதன் மறுதலையாய்

**“ வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்**
**கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்**
**பூழி மயங்கப் பலவுழுது வித்திப்**
**பல்லியாடிய பல்கிளைச் செவ்வி**
**……………………………………….**
**வருந்தா யாணர்த்து”**[35]

எனப் பாரியின் பறம்பு நாட்டில் நடந்த திட்டமிட்டுச் செய்யப்பட்ட புன்செய் வேளாண்மைச் சிறப்பு பாடப்பட்டுள்ளது. கார்கால மழையை அடிப்படையாய்க் கொண்டு இவ்வேளாண்மை செய்யப்பட்டுள்ளது. புழுதி கலக்கும்படி பலமுறை உழுத உழவும் களை களையப்பட்ட முறையும் செழிப்பாய்ப் பயிர் விளைந்த முறையும் இப்பாடலில் காட்டப்பட்டுள்ளன. வரகு, தினை, எள், அவரை, என்பன பாரிநாட்டின் மறுபெயரான ஏனல் 43 இடங்களில் வந்துள்ளன. இது பெரும்பாலும் குறிஞ்சித் திணைப் பாடல்களிலேயே வந்துள்ளன.

வரகு சங்க இலக்கியங்களில் 31 இடங்களில் வந்துள்ளது. பெரும்பாலும் இது முல்லை விளைபொருளாகவே காட்டப்பட்டுள்ளது. இதைப் புறநானூற்றின் சீறூர் மன்னர் பற்றிய வல்லாண் முல்லை, மூதின் முல்லைப் பாடல்கள் காட்டுகின்றன.

“ களிறுபொரக் கலங்கு கழன்முள் வேலி

அரிதுண் கூவ லங்குடிச் சீறூர்”[36]

“ களர்ப்படு கூவற் றோண்டி நாளும்

புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை”[37]

எனக் களர்நிலத்தில் அமைந்த நீர்நிலை உடையதாக சீறூர் மன்னர் சமுதாயம் காட்டப்பட்டுள்ளது. செம்மண் நிலத்துத் தோண்டப்பட்ட, சிறிதளவே நீரை உடையதாகவும் பன்றிகளால் புழுதியாக்கப்பட்ட நிலத்தில் புதிதாகப் பெய்த பெருமழைக்குப் பின்னர் பள்ளங்களில் தேங்கிய சிறிதளவு நீரை உடையதாகவும் பசுக்கள் புல் மேய்ந்து உண்டபின் எஞ்சிய கலங்கல் நீரைப் பன்றி வேட்டை ஆடிய வீரர் உண்ணுவதாகவும் இச்சீறூர் காட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு நீர்வளமற்ற, மழை பெய்தாலும் நிறைய நீர் தேங்கி நிற்காத இயல்புடைய சீறூர்களில் செய்யப்பட்ட புன்செய் வேளாண்மை அச்சீறூர்க்கு உரிய போதுமான விளைச்சலைத் தரவில்லை. விளைந்த வரகு, தினை போன்றவை பொதுவில் வைத்து உண்ணப்பட்டதையும் விருந்தாய் வந்த வேந்தன் உண்ணும் உணவாக இருந்ததையும் இரவலர்க்கு உணவாகவும் கொடைப் பொருளாகவும் தரப்பட்டதையும் சீறூர் மன்னர் பாடல்கள் காட்டுகின்றன.

“ குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து

சிறிது புறப்பட்டன் றோவில டன்னூர்”[38]

என வரும் விதைத்தினை பற்றிய குறிப்பு புன்செய் வேளாண்மை அங்கு நடைபெற்றதைக் காட்டுகிறது. விளைச்சல் பேரளவில் இல்லாத இச்சமுதாயத் தலைவர்கள் வேந்துவிடு தொழிலுக்கு ஆட்படுவதையும் இப்பாடல்கள் காட்டுகின்றன.

நன்செய் வேளாண்மை

நன்செய் வேளாண்மை வெகுவாகப் பேசப்பட்ட சமுதாயம் வேந்தரின் மருதநிலச் சமுதாயமே ஆகும்.

**“ ………………… நெல் அரிந்து**
**சூடுகோ டாகப் பிறக்கி நாடொறுங்**
**கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்குஞ்**
**சாலி நெல்லின் சிறைகொள் வேலி**
**யாயிரம் விளையுட் டாகக்**
**காவிரி புரக்கு நாடுகிழ வோனே”**[39]

எனக் கரிகாலன் புகழப்பட்டுள்ளான். இவ்வாறே மருத நிலத்தை அடிப்படையாகக் கொண்டு விளக்கப்பட்டுள்ளன.

நெல்லும் கரும்பும்

நெல், கரும்பு இரண்டும் மருத நில விளைப்பொருட்களாய்க் காட்டப்பட்டுள்ளன. இவற்றை அடிப்படையாக வைத்தே நாட்டின் வளம் பாடப்பட்டுள்ளது.

நெல்

நெல் எனும் சொல் சங்க இலக்கியங்களில் 102 இடங்களில் ஆளப்பட்டுள்ளன. மூங்கில் நெல்லைக் குறிப்பிட இச்சொல் 6 இடங்களில் ஆளப்பட்டுள்ளன. செந்நெல் 21 இடங்களில் ஐவன வெண்ணெல் 4 இடங்களிலும் வெண்ணெல் 24இடங்களிலுமாக மொத்தம் 145 இடங்களில் நெல் ஆட்சி பெற்றுள்ளன. “நெல் தமிழகத்திற்கு அறிமுகப்படுத்திய உணவு வகையாகத் தோன்றுகின்றது. இது எப்போது வந்தது? இது மிகவும் முக்கியமானது. ஏனெனில் இது மிகவும் சிக்கலான சமூக சமைப்பின் வளர்ச்சிக்குப் பொருளாதார அடித்தளமாக அமைகிறது. மனிதன் கால்நடை நிலம் ஆகியவற்றுக்கு இடையே உள்ள உறவு முறையில் மிக முக்கியத்துவம் பெற்று உழுது பயிரிடும்

வேளாண் பொருளாதாரத்திற்கும் நாகரீகத்திற்கும் அடிகோலுகிறது என்பர்" என பர்டன் ஸ்டெயின் கூறும் கருத்தை எடுத்துக்காட்டி வளர்ந்து வந்த சங்கச் சமுதாயப் பொருளாதாரத்தில் நெல் பெற்ற முக்கியத்துவத்தைக் கோ.கேசவன் விளக்கியுள்ளார். சங்கப் பாடல்களும் நெல் பெற்ற முக்கியத்துவத்தைப் பரவலாய்க் காட்டுகின்றன.

**" ...................... உயர் நெல்லி**
**னூர் கொண்ட வுயர் கொற்றவ**
**.............................. தித்தன்"[40]**

**"பிண்ட நெல்லின் உறந்தை"[41]**

என நெல்லை முதன்மை படுத்தி மன்னர்களுடன் ஊர்களும் புகழப்பட்டுள்ளன. 'நெல் பல பொலிக, பொன் பெரிது சிறக்க' என வாழியாதன் நெல்லை முன்நிறுத்தி வாழ்த்தப் பெறுகிறான். 'சாலி நெல்லின் சிறைகொள் வேலியாயிரம் விளையுட்டாக எனக் கரிகாலனும், உயர் நெல்லின் ஊர்கொண்ட உயர் கொற்று' எனப் பாண்டியன் நெடுஞ்செழியனும் வாழ்த்தப் பெற்றுள்ளனர். இதைப் போல் 'நெடுங்கூட்டு, பிண்ட நெல்லின் தாய்மனை' 'நெல்லுடை நெடுநகர்' 'நெல் மலிந்த மனை' என நெல் அடிப்படையில் வீட்டின் வளமும் பாடப்பட்டுள்ளது.

வளத்தின் குறியீடாகக் கருதப்பட்ட நெல் சடங்குச் சூழல்களிலும் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. நெல்லும் மலரும் தூவித் தெய்வம் வணங்கப்பட்டது. முல்லைப்பூவுடன் நெல் தூவித் தெய்வம் வணங்கப்பட்டதை முல்லைப்பாட்டும் காட்டுகின்றது. செம்முது பெண்டிர் நெல்லை முன் வைத்துக் கட்டுரைத்ததை நற்றிணை பாடியுள்ளது. நெல்லுடன் நெல் விளைதற்கு அடிப்படை ஆதாரமான நீரையும் தூவி விரிச்சி கேட்டலைப் புறநானூறு காட்டுகிறது.

" ஒன்னாத் தெய்வர் முன்னின்று விலங்கி
ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே"[42]

எனும் புறப்பாடல் மருதநிலச் சமுதாயங்களின் வழிபாட்டுச் சூழல்களில் கடவுளர்க்கு நெல் தூவி வழிபட்டதைக் காட்டுகின்றது. மருதத்தில் நடந்த திருமணச் சடங்கிலும் நெல் முக்கிய இடம் பெற்றுள்ளது.

" வால் இழை மகளிர் நால்வர்கூடி
கற்பினின் வழா அநற்பல உதவிப்
……………………………………
……………………………………
வதுவை நல் மணம் கழிந்த பின்றை"[43]

எனும் பாடலில் நீரில் நெல் கலந்து சொறியப்பட்ட வளச்சடங்கு காட்டப்பெற்றுள்ளது.

ஏரும் கொழுவும்

புராதன வேளாண் முறைகள் மாற்றம் பெற்ற நிலவுடைமைச் சமுதாயத்தில் ஏர் ஒரு முக்கியமான உழவுக்கருவியாய்ப் பயன்படுத்தப்பட்டுள்ளது. உழுபடை, நாஞ்சில் எனும் சொற்களுடன் ஏர் என்பதும் சங்க இலக்கியத்தில் வந்துள்ளது. இச்சொல் அழகு எனும் பொருளில் பரவலாக ஆளப்பட்டாலும் ஏர் எனும் பொருளில் மேலே காட்டிய எட்டு இடங்களில் மட்டுமே ஆளப்பட்டுள்ளது. பொருளாதாரப் பெருக்கத்திற்கு அடிப்படையான வேளாண் விளைபொருள் பெருக்கத்திற்குக் காரணமாய் இருப்பதால், நிலத்தைப் பயன்படுத்த உதவுவதால் கலப்பையும் ஏர் எனப்பட்டுள்ளது. இது பழமை வாய்ந்ததோர் உழவுக் கருவியாய் சமுதாயத்தில் இடம் பெற்றுள்ளது.

“கி.மு 2000-த்தைச் சேர்ந்த குஷானர்களின் சிற்பங்களில் காணப்படும் ஏரும் உழவனும் திடீரென்று இக்கால இந்திய கிராமத்தில் தென்படுமேயானால் அவை இங்கு எவ்விதமான வியப்பையும் விளைவிக்காது. இதனால் கிராமப் பொருளாதார அமைப்பிலுள்ள வரையறுக்கப்பட்டோர் நிலப்பகுதியில் பண்படுத்த உதவும் ஏரின் உபயோகம், உற்பத்திச் சாதனத் துறையில் காட்டப்பட்ட மகத்தானதோர் முன்னேற்றம் என்பதை எளிதில் மறந்து விடுகிறோம்” என ஏர் செய்த பெரிய மாற்றத்தை டி.டி கோசாம்பி குறிப்பிடுகின்றார். புன்செய், நன்செய் எனும் இரு நிலப்பகுதிகளிலும் ஏர் உழவுக்கான அடிப்படைக் கருவியாய்ப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**“ ஈரம் பட்ட செவ்விப் பைம் புனத்து**
**ஓர் ஏர் உழவன் போல”[44]**

எனும் குறுந்தொகைப் பாடல் ஈர நிலத்தைக் காய்வதற்கு முன் உழ முயலும் ஓர் ஏர் உழவன் பற்றிக் குறிப்பிடுகிறது. பொருளாதார வசதிக் கேற்ப உழவர்கள், வேளாளர்கள் ஏர் வைத்திருந்தனர் என்பதை ‘ஓர் ஏர் உழவன்’ எனும் தொடர் உணர்த்துகிறது.

சங்க காலத்தில் இரும்பு முக்கிய உலோகமாய்ப் பயன்பட்டுள்ளது. வாள், வேல் போன்ற படைக்கலன்கள் செய்யப் பயன்பட்டதைப் போல் இரும்பு ‘கொழு’ செய்யவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இரும்புக் கொல்லர் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் பரவலாய் இடம் பெற்றுள்ளன. கொல்லர் கொழு செய்ததற்கான குறிப்பு எங்கும் இல்லை என்றாலும் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்ட இரும்பு, போர்க்கருவிகளை உருவாக்கப் பயன்பட்டதைப் போல் முக்கிய தொழிலான உழவுக்குரிய கொழு செய்யவும் பயன்படுத்தப் பட்டிருக்கின்றது.

**“கொல்லை யுழுகொழு”[45]**

"பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்
உடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை"[46]

"புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்
சீருடைப் பல்பகடு ஒலிப்பப் பூட்டி
நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின்
அலங்கு கதிர் திருமேனி பெறூஉம்
அகன் கண் வைப்பின் நாடு கிழவோனே"[47]

எனக் கொழு பற்றிய குறிப்பு மூன்று இடங்களில் மட்டுமே வந்துள்ளது.

"இரும்பு மனிதனுக்குச் சேவை புரியத் தொடங்கியது. வரலாற்றில் புரட்சிகரமான பாத்திரம் வகித்த கச்சாப் பொருட்களில் கடைசியாக வந்தது. அதிமுக்கியமானது இதுவே கடைசியானது அதாவது ………… இரும்பு வயல் விவசாயத்தை முன்னிலும் பெருமளவில் நடத்துவதையும் விரிந்த காட்டுப் பிரதேசங்களைச் சாகுபடிக்காகத் தரிசாக்குவரையும் சாத்தியப்படுத்தியது. அந்தக்கல்லும் அப்போது அறிந்துள்ள எந்த உலோகமும் எதிர்நிற்க முடியாத அளவுக்குக் கடினமும் கூர்மையும் பெற்ற கருவிகளை அது தொழில் செய்வோனுக்குத் தந்தது?" எனும் நிலையில் சங்க காலத்தில் வேளாண் பொருளாதார மேம்பாட்டில் 'கொழு' முக்கிய பங்காற்றியுள்ளது.

### உழுதுண்பாரும் உழுவித் துண்பாரும்

சங்க காலத்தே நிலவிய நிலவுடைமைச் சமுதாயம் நிலம் தனியுடைமைகளாக இருந்ததை வெளிப்படுத்துகிறது. இந்நிலையில் உழுவித் துண்ணும் வேளாண் மக்களையும் உழுதுண்ணும் வேளாண் மக்களையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.

“இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் நிலமற்ற உழவர்கள் இருந்தனர். நிலமற்ற வகுப்பினர் தாழ்த்தப்பட்ட வகுப்பினா் எனக் கருதப்பட்டனர். நிலமுள்ள உழவர்கள் வேளாளர்கள் என்னும் உயர்ந்த வகுப்பினராக கருதப்பட்டனர். இவ்விரு வகுப்பினரும் ஒழுக்கத்திலும் நாகரிகத்திலும் பழக்க வழக்கங்களிலும் மாறுபட்டிருந்தனர்” எனச் சாமி சிதம்பரனார் இந்த வேறுபாட்டை எடுத்துக் காட்டியுள்ளார். மருத வயல்களிலேயே உழுதுண்ணும் வேளாண் மக்கள் குடியிருந்து வேளாண் பணிகளைச் செய்து வந்துள்ளனர் மருத நில வளம் பற்றிய பகுதியில் பெரும்பாணாற்றுப்படை இவ்விரு வேறுபட்ட உழவர்களைப் பேசியுள்ளது.

**“ இரும்பு வடித்தன்ன மடியா மென்றோற்**
**கருங்கை வினைஞர் காதலற் சிறா அர்**
**பழஞ்சோற் றமலை முனைஇ வரம்பிற்**
**புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றி**
**லவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல**
**கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉ**
**நீங்கா யாணர் வாங்குகதிர்க் கழனி”**[48]

வலிமையான கைகளை உடைய தொழில் செய்வார்தம் குழந்தைகள் பழஞ்சோற்றை வெறுத்து நீங்க, புதிய வைக்கோலால் வேயப்பட்டு வரப்பிடத்தே உள்ள குடிசையின் முற்றத்தில் அவல் இடிக்கும் ஓசைக்குக் கிளிகள் அஞ்சுகின்ற இடையறாத புதுவருவாய் உடைய கழனி’ என வேளாண் தொழில் செய்வாருடைய உடலின் இயல்பும் வீட்டு இயல்பும் குழந்தைகள் பழைய சோற்றை வெறுத்து ஒதுக்கும் தன்மையும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவர்கள் ‘வினைஞர்’ எனவே குறிப்பிடப்பட்டுள்ளனர்.

இந்த வறுமை நிலைக்கு மாறாக உழுவித்துண்போரின் இல்லச் செழிப்பும் குழந்தைகளின் வளமும் ‘நீண்ட ஏணிக்கு எட்டாத உயரத்தையும் மேற்பகுதியைத் திறந்து போடப்பட்ட பழையனவாகிய நெல்லினையும் உடைய நெற்கூடு உடைய நல்ல இல்லம். சிறுதேர் உருட்டிய புதல்வர்கள், விளையாடிய வருத்தம் நீங்கச் செவிலித்தாயர் ஊட்டிய பாலை உண்டு படுக்கையிலே உறங்கும் அழகுடைய இல்லம் எனப் பாடப்பட்டுள்ளது.

மருத நிலத்தில் உள்ளவாறே முல்லை நிலத்திலும் உழுது உண்ணும் வேளாண்மக்கள் குடியிருப்பு இருந்ததைப் பெரும்பாணாற்றுப்படை காட்டுகிறது. ‘பெண் யானைகளின் தொகுதி நின்றது போன்ற குதிர்களை உடைய முன்றிலையும் யானையின் காலை ஒத்த வரகுத் திரிகை நட்ட பந்தலையும் கடத்தில் உருளை உருளைகளோடு கலப்பையும் சார்த்தி வைக்கப்பட்டதால் தேய்ந்த சுவருடைய புகை சூழ்ந்த கொட்டிலையும் வரகு வைக்கோலால் வேயப்பட்ட குடியிருப்புகளையும் உடைய சீறூர் என முல்லை நிலத்து உழுதுண்பார் வீட்டுநிலை காட்டப்பட்டுள்ளது. வரகும் அவரையும் சேர்த்துச் சமைத்த பருப்புச் சோறு இவர்களின் உணவாகக் காட்டப்பட்டுள்ளது.

வினைஞர் எனும் சொல் வணிகர், தச்சர் என்பவருடன் பெரும்பாலும் உழவுப்பணி செய்யும் தொழிலாளரையேக் குறித்து வந்துள்ளது. வினைஞர் எனும் சொல்லும் உழவுத் தொழிலாளரையே குறித்து வந்துள்ளது.

‘குடிபுறந்தருநர்’ எனும் சொல் பதிற்றுப்பத்தில் இடம் பெற்றுள்ளது. இதற்கு உரையெழுதிய ஔவை சு.துரைசாமிப் பிள்ளை “குடிபுறந்தருநர்

உழுவிப்போரும் குடிமக்கள் உழுவோருமாவர். குடிபுறந்தருவாரின் கீழ்க்குடிகள் மிகப் பலராய் அவரைச் சுற்றி வாழ்தலின் அச்சுறுத்தலைக் குடிபுறந்தருநர் பாரம் என்றார். பகடு புறந்தருநர் பாரமோம்பி என்று பிறரும் கூறுதல் காண்க?" என உரை எழுதியுள்ளார். இவ்வாறு குடிகள் உழுகுடிகளாகவும் குடிபுறந்தருநர் பெரும் உழவர்களாகவும் கருதப்பட்டுள்ளனர். கடைசியர், வினைஞர், அரிஞர், களமர் போன்ற சொற்கள் வேளாண் தொழில் செய்பவரைக் குறிக்கும் சொற்களாய் ஆளப்பட்டிருப்பதும் இந்த நிலையை வலியுறுத்துகிறது.

மருதநில வாழ்க்கை மற்ற நில வாழ்க்கைகளில் எல்லாம் செழிப்புமிக்கதாயிருந்தது. இங்கு குழுவாழ்க்கை அழிந்தது. அரசு தோன்றியது பிற மக்களையும் அரசில் இணைத்துக் கொள்ள பல போர்கள் நிகழ்ந்தன...... குழு வாழ்க்கை இழந்த மக்கள் மருதநில மக்களின் உழைப்பாளிகளாயினர்" என நா.வானமாமலை குறிப்பிடுவது இந்நிலையைத் தெளிவுபடுத்துகின்றது.

உள்ளதை, கூட்டுப்பிழைப்பில் கிடைத்ததை ஊரொடு பகிர்ந்து உண்ட நிலைகள் மாறி, இரத்தலும் ஈதலுமாய் மாறிப் போய்விட்ட சமுதாயத்தில்,

> **" ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்**
> **ஈயே னென்ற லதனிது மிழிந்தன்று**
> **கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்**
> **கொள்ளே னென்ற லதனிது முயர்ந்தன்று"**[49]

என இரத்தலின் இழிவும் ஈயாததன் இழிவு மிகுதியும் கொடுத்தலின் உயர்வும் கொள்ள மறுத்தலின் மிகு உயர்வும் பேசப்பட்டுள்ளது. 'செல்வத்துப் பயனே ஈதல்' என ஈதலறமும் வலியுறுத்தப்பட்டுள்ளது. இந்நிலையில் கொடுப்போர், கொள்வோர், உடையவர், இல்லோர்,

செல்வந்தர், ஏழை உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற இருமைகள், முரண்கள் பல்கிப் பெருகியுள்ளன.

"உற்பத்திச் சாதனங்களில் தனியுடைமையும் உடைமையில் ஏற்றத்தாழ்வும் ஏற்படுகின்ற பொழுது வர்க்கங்கள் தோன்றுகின்றன. செல்வர்களும் ஏழைகளும், முதலாளிகளும் தொழிலாளர்களும் தோன்றுகிறார்கள். அவருடைய நலன்கள் ஒரே மாதிரியானவை அல்ல, அவை நேரெதிரானவை, ஆகவே பகையில் வர்க்கங்கள் தோன்றுகின்ற பொழுது சமூக வரலாறு வர்க்கப் போராட்டங்களின் வரலாறாகிறது." எனும் நிலையில் சங்கச் சமுதாயம் வர்க்கச் சமுதாயமாக மாறிப்போகிறது. உள்ளதைப் பகிர்ந்துண்ட சீறூர்மன்னர் சமுதாயத்திலேயே சீறூர்மன்னர் கடன் பெறுவதும் கடவர் எனப்பட்ட கடன்காரர் இருந்ததும் காட்டப்பட்டுள்ளன. இந்த வேறுபாடு வேளாண் பொருளாதாரத்தின் வளர்ச்சியில், மருத நிலச் சமுதாயத்தில் பல்கிப் பெருகியுள்ளது.

### அரசும் வேளாண் பொருளாதாரமும்

எவ்விதமான அரசின் சாராம்சமும் அதன் பொருளாதார மற்றும் சமூக அடிப்படையினால் நிர்ணயிக்கப்படுகிறது. சமூகம் தனியுடைமை மற்றும் செல்வர்கள் ஏழைகளைச் சுரண்டுவதை அடிப்படையாகக் கொண்டு நிறுவப்பட்டிருந்தால் அந்த அரசு சிறுபான்மையினர் தம்முடைய ஆதிக்கத்தை வலுப்படுத்திக் கொள்வதற்குரிய கருவியாகத் தவிர்க்க முடியாதபடி மாறுகிறது" என்ற அடிப்படையில் சங்ககால அரசு குறிப்பாக மூவேந்தர் அரசு சங்க காலத்தில் உருவான நிலவுடைமைப் பொருளாதார அமைப்பை மையமாகக் கொண்டே உருவானது, செயற்பட்டது. பொருளாதார அடிப்படையாய் மையமாக இருந்த வேளாண் உற்பத்தியில் அவ்வரசு கவனம் செலுத்தியது. "பொது அதிகாரம்

என்பது அரசுக்கு மிக முக்கியமானது மக்கள் மீதான பொது அதிகாரத்தை நிலை நாட்ட சில அரசியல் செயல்பாடுகள் செயற்படுத்தப்பட்டன. பொது அதிகாரத்தை நிலை நிறுத்துவதற்குப் பிரஜைகளிடமிருந்து கட்டணங்கள் வசூலிப்பது அவசியப்பட்டது அவைகள் வரிகள்?" எனும் நிலையில் இந்த வரிகளைப் பெறுவதற்கு ஆதாரமாய் நிலங்களே இருந்துள்ளன. எனவே நிலம் அரசின் வளர்ச்சியில் முக்கியத்துவம் பெற்றுள்ளது.

### மருத வேளாண்மைப் பெருக்கம்

புன்செய் வேளாண்மை குறிஞ்சி, முல்லை எனும் இரு திணைகளிலும் பெரிய அளவிலான வளர்ச்சியை ஏற்படுத்தவில்லை. சீறூர் மன்னரின் முல்லைநிலச் சமுதாயம் புரவவரி செலுத்துவதற்கும் இயலாத ஊராய் சீறூர் மன்னர் பிறரிடம் கடன்பெற்று விருந்து பேணும் ஊராய் இருந்துள்ளது மறுபுறத்தே மருத விளை வயல்கள் பேரளவிலான வருவாய்க்கு அடிப்படையாய் இருந்துள்ளதும் உணரப்பட்டுள்ளது. இந்நிலையில் வேந்தர்கள் முழுக் கவனமும் மருதநிலப் பெருக்கத்தில் சென்றுள்ளது. 'வம்ப வேந்தன்' 'வம்ப வேந்தர்' 'வம்ப மள்ளர்' எனப்பட்டோர் பின்னர் 'தணபணை ஆளும் வேந்தர்' எனப்பட்டுள்ளனர்.

வேந்தர்களின் அடிப்படை நோக்கம் குறுநில மன்னர்களை வென்று உயர்வது என்பதோடல்லாமல் மூவேந்தரில் மேம்பட்டவராய் உயர்வது என்பதே இதை

**" மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்**
**முரசு முழங்கு தானை மூவருள்ளும்**
**ஆரசெனப் படுவது நினதே பெரும**
**.....................................**
**அந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்**

தோடுகொள் வேலின் தோற்றம் போல
ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடெனப் படுவது நினதே"[50]

எனும் பாடல் உணர்த்துகிறது. இந்நிலையுடைய வேந்தரிடம் புன்செய் வேளாண்மையின் பின்னடைவும் நன்செய் வேளாண்மையின் மேம்பாடும் வலியுறுத்தப்பட்டு நீர்வள, நிலவளப் பெருக்கம் அறிவுறுத்தப்பட்டுள்ளது. இந்நிலையில் புறநானூற்றின் 18-ஆம் பாடல் சங்க இலக்கியப் புறப்பாடல்களில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த பாடலாக அமைந்துள்ளது.

காவிரி பாயும் சோழ நாட்டின் மன்னனான சோழன் நலங்கிள்ளியிடம் 'மூவருள்ளும் அரசு எனப்படுவது நினதே' எனப் பாடப்பட்ட சூழலுக்குக் காவிரி பாயும் மருத வளநாடாகச் சோழ நாடு இருந்ததே அடிப்படைக் காரணம். மருத வேளாண்மை இதற்கு அடிப்படையானமை உணரப்பட்ட நிலையில் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் குடபுலவியனார் மருதவயல் பெருக்கத்தின் அவசியத்தை வலியுறுத்துகிறார்.

" வானுட்டும் வடிநீண் மதில்
மல்லன் மூதூர் வயவேந்தே
செல்லு முலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மற்றதன்
தகுதி கேளினி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே"[51]

“ வித்திவா னோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினு நண்ணி யாளும்
.......................................
தள்ளா தோரிவட் டள்ளா தோரே”[52]

எனும் இப்பாடல்களின் கருத்து நிலையில் மேற்பிரித்துக்காட்டியவாறு மூன்று பகுதிகளை உடையதாக அமைந்துள்ளது. முதலாவது பகுதியில் இறப்புக்குப்பின் சுவர்க்கப்பேறு அடைதல். இந்நிலவுலகத்தை ஆள்பவர்களை எல்லாம் வென்று தான் ஒருவன் மட்டுமே தலைவனாக உயர்தல், நல்ல புகழை இவ்வுலகில் நிலைநாட்டுதல் எனும் இவற்றை அடிப்படை நோக்கங்களாக முன்வைத்துள்ளது. இரண்டாவது பகுதியில் நீர், நிலம் எனும் இரண்டின் அவசியம் வலியுறுத்தப்பட்டுள்ளது. ‘நீரை அடிப்படையாகக் கொண்டு அமையும் உடம்புக்கு உணவு தருபவரே உயிர் தருபவர். அந்த உணவு நீரும் நிலமுமே ஆகும். அந்நீரையும் நிலத்தையும் சேர்ந்தவர்களே உடம்பையும் உயிரையும் உடையவர்கள் ஆவர், என நீரும் நிலமும் உடம்புக்கும் உயிருக்கும் அடிப்படையாவதும் உணவின் அவசியத் தேவையும் உணர்த்தப்பட்டுள்ளது. மூன்றாவது பகுதி மேற்சொன்ன இரண்டு பகுதிகளையும் இணைத்து இவற்றுக்கென அரசன் செய்ய வேண்டிய அடிப்படைச் செயற்பாட்டை உரைக்கின்றது. புன்செய் நிலத்தின் இழிவும் நீர்வளப் பெருக்கத்தின் அவசியமும் கூறப்பட்டுள்ளது. வானம் பார்த்த பூமியான புன்செய் நிலம் மிகப்பரந்துபட்ட பெரும் பரப்பை உடையதாக இருந்தாலும் அது நிலையான ஆட்சிக்குப் பயன்படாது. எனவே நீர் நிலைகள் பெருக மழைநீரைத் தடுத்து நிறுத்தித் தேங்கச் செய்ய வேண்டும் என அறிவுறுத்தப்பட்டுள்ளது.

சோழ நாட்டின் பகுதிகளிலும் கூடக் காடு திருத்தி நாடாக்கும் முயற்சிகளும் நீர்வளப் பெருக்க முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டதைப் பட்டினப்பாலை காட்டுகிறது.

**“ காடு கொன்று நாடாக்கி**
**குளந்தொட்டு வளம்பெருக்கி**
**பிறங்கு நிலை மாடத் துறந்தை போக்கிக்**
**கோயிலொடு குடிநிறீஇ”**[53]

எனக் காட்டை அழித்து நாடாக்கி, குளங்களைத் தோண்டி நீர் வளத்தைப் பெருக்கி, உறந்தை எனும் ஊரைப் பெரிதாக்கி அரண்மனையுடன் குடிகளை நிலைநிறுத்திய கரிகாற் சோழனின் செயல் பாடப்பட்டுள்ளது. குடிகள் நிலைபெறுவதற்கு அடிப்படையாக அமைவது நீர்வளப் பெருக்கமே என்பதை இது வலியுறுத்துகிறது.

**போரும் உழவும்**

போருக்கும் உழவுக்கும் இடையே நெருக்கமான உறவும் இணைப்பும் இருந்தது. ஒரே குடி இவ்விரு தொழில்களையும் மேற்கொண்டிருந்தமையே இதற்கு அடிப்படைக் காரணம். மேலும் வேளாண் பொருளாதாரம் சமுதாய வளர்ச்சியில், அரசு வளர்ச்சியில் பெற்றிருந்த முக்கியத்துவமும், போரின் அடிப்படை நோக்கமாக நிலங்கவர்தல் - குறிப்பாக மருதநிலம் கவர்தல் இருந்ததும் காரணம்.

**இனக்குழுக்களும் அரசரும்**

குடிகள் ஆங்காங்கே தங்கி நிலைத்து வாழத்தலைப்பட்ட சங்க காலத்தில் அந்தந்தக் குழுக்கள் அந்தந்த நிலப்பகுதியை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரத்தை மையப்படுத்தி வாழ்ந்தன. இந்த நால்வகைத் திணைக்குடிகளில் எது பொருளாதார வளம் மிக்கதாய் இருந்ததோ அது போருக்குக் காரணமாக அமைந்தது. ஒவ்வொரு குழுவும் தமக்குள் மட்டுமல்ல பிற குழுக்களுடனும்

போரிட்டுக் கொண்டன. சேர, சோழ, பாண்ழயர்களும் குழு வாழ்க்கையிலிருந்து தோன்றியவர்களே.

“குட்டுவர், குடவர், பூமியர், முதியர் ஆகிய குடிகளின் தலைவர்களாகச் சேரவேந்தர்கள் குறிக்கப் பெறுகின்றனர். சேரர்கள் தொடக்கத்தில் மாந்தை, நறவு, தொண்டி, வஞ்சி, முசிறி ஆகிய கடற்கரைப் பட்டினங்களில் இருந்து கொண்டு அந்தப் பட்டினங்களைச் சுற்றியிருந்த நாடுகளை ஆண்டனர். சேர மரபில் பொறையர், குட்டுவர் உதியர், வில்லோர் என்ற பிரிவினர் இருந்துள்ளனர்.

சோழர்கள் ஒன்பது குடிகளாக இருந்தனர் என்பதற்குத் தெளிவான சான்றுகள் கிடைக்கின்றன. கரிகாற் சோழன் வரலாற்றில் அவன் அரியணை ஏறுமுன் தன் தாயாதிகளுடன் போரிட வேண்டியிருந்தது பற்றிச் சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன. கிள்ளிவளவன் அரியணை ஏறியபோது ஒன்பது மன்னர்கள் எதிர்த்தனர் என்று பதிற்றுப்த்தின் ஐந்தாம்பத்தின் பதிகம் கூறும் அந்த ஒன்பதின்மரை செங்குட்டுவன் வென்றடக்கிக் கிள்ளிவளவனை அரியணை ஏற்றினான். பாண்டியர்கள் கவுரியர் - பஞ்சவர், மாறர், வழுதி ஆகிய குடிகளின் கூட்டமைப்பால் வேந்தர் நிலைக்கு உயர்ந்தனர். இச்சான்றுகள் சிறுசிறு குடிகளாய்த் தலைவர்கள் ஆண்டதைத் தெளிவுப்படுத்துகின்றன. அந்தந்த நிலப் பகுதியில் அவரவர் தமக்குரிய தொழிலைச் செய்து பொருளாதார அடிப்படையை அமைத்துக் கொண்டுள்ளனர். சேரமன்னர் மலை நாட்டில் வாழ்ந்தமையின் மலைகளிலும் மலைச்சரிவுகளிலும் மண்டியிருந்த பெருங்காடுகளில் வேட்டம் புரிவதையே தொடக்கத்தில் மேற்கொண்டிருந்தனர். அதனால் அவர்களுடைய கொடியில் வில்லே பொறிக்கப்பட்டிருந்தது. கடற்கரைப் பகுதியில் பனைமரங்கள் காடு போல் செறிந்திருந்தன. அதனால் அவர்கள் தமக்கு அடையாள மாலையாகப் பனம் பூவால் மாலை தொடுத்து அணிந்து கொண்டனர்.

## மறவர் குடியும் உழவர் குடியும்

இவ்வாறே முதுகுடி மன்னரும் மருதநிலப் பகுதிகளில் தங்கி வேளாண்மையில் ஈடுபட்டிருந்தனர். இந்தக் குழுக்களே தற்காத்துக் கொள்ளவும் இடத்தை விரிவுபடுத்தவும் ஏற்ற போர்த்திறம் வாய்ந்த மறவர் குடிகளாகவும் குலங்களின் இணைப்புகளாகவும் சிதறிக் கிடந்த தமிழகத்து மக்கள் ஓயாத போரில் ஈடுபட்டிருந்தனர். ஓயாத போர், படையெடுப்பு, ஊர் அழிவு, அரசுரிமைச் சண்டை ஆகியவற்றின் அடிப்படையிலேயே சங்ககாலத் தமிழகத்திலே மெல்ல மெல்ல அரசர்கள் தோன்றலாயினர். சங்க காலத்தில் அரசு செலுத்திய பேரரசரும் தொடக்கத்தில் சிறு கூட்டத்தினருக்குத் தலைவராக இருந்திருத்தல் வேண்டும் என்கிறார் க.கைலாசபதி இந்தப் போர் சூழலைத்தான் சங்க அகப்பாடல்களும் புறப்பாடல்களும் பரவலாகக் காட்டுகின்றன. ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று இவ்வுலகத்து இயற்கை எனும் சங்கச் சூழலில் வேளாண் முதுகுடியினரும் போர் மறவர்களாக இருந்துள்ளனர். இதனை பின்வரும் பாடல்கள் தெளிவாக எடுத்துக் கூறுகிறது.

> **“ ……………………… தன்னையர்**
> **பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்**
> **குருதி பற்றிய வெருவரு தலைவர்”[54]**

என்ற பாடலிலும் மற்றும்,

> **“ வாள்தகவைகலும் உழக்கும்**
> **மாட்சியவர் இவள் தன்னை மாரே”[55]**

என்ற பாடலிலும் மறவர்களாக முதுகுடிமன்னர் புதல்வர் காட்டப் பெற்றுள்ளனர்.

**உழவும் மள்ளரும்**

இந்திய அரசு உருவாக்க வரலாற்றிலும் இந்த இருநிலைகள் இருந்துள்ளதை டி.டி கோசாம்பியம் எடுத்துக் காட்டியுள்ளார். புத்தரின் சாக்கிய மரபும் இந்நிலையில் இருந்ததை அறிய முடிகிறது. இச்சாக்கிய இனத்தார் வைதீகமத ஒழுக்கமுடையவர்களாகவும் தோன்றவில்லை. தேவைப்பட்ட நேரத்தில் ஆயுதம் தாங்கிப் போராடும் சத்திரியர்களாயினும், சாக்கியர்கள் பயிர்த்தொழிலையும் செய்தனர். புத்தருடைய தந்தை உட்பட எல்லா சாக்கியர்களும் ஏர்பிடித்து உழுதவர்களே என விளக்கியுள்ளார் டி.டி கோசாம்பி.

சங்க இலக்கியத்தில் ‘களம்’ என்ற சொல் போர்க்களம் என்ற பொருளுடன் நெற்களம் என்ற பொருளிலும் ஆளப்பட்டுள்ளது. இவ்வாறே ‘களமர்’ என்ற சொல் உழவர் என்ற பொருளுடன் வீரர் என்ற பொருளிலும் வந்துள்ளது. இச்சொற்களைப் போல் பெரும்பாலும் வீரர் என்ற பொருளில் ஆளப்பட்ட மள்ளர் என்ற சொல் உழவர் என்ற பொருளிலும் ஆட்சி பெற்றுள்ளது.

**“ காடே கடவுள் மேன புறவே**
**ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன”**[56]

எனும் பதிற்றுப்பத்துப் பாடல் புறவு எனப்படும் முல்லை நிலங்கள் மகளிர்க்கும் மள்ளர்க்கும் உரிமை உடையனவாக இருந்தமையைச் சுட்டுகிறது. இங்கு மகளிருக்கு முதன்மை இடம் வழங்கப்பட்டிருப்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். இந்த மன்னர்கள் உழவர்கள் இதற்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, போரின்மையில் மள்ளர் புறவங்களில் தொழில் செய்கின்றனரெனவறிக. புறவுகளாவன வரகு, சோளம், துவரை, முதலிய தானியங்கள் விளையும் கொல்லைகள் ஈண்டுச் சிறுசிறு காடுகளும் உண்டு. ஆங்கு இடையர்தம் ஆநிரைகளை மேய்ப்பர்? என விளக்கவுரை எழுதியுள்ளார். மள்ளர் போர்த்தொழில், உழவுத் தொழில்

இரண்டையும் செய்தவராய்க் குறிப்பிடப்பட்டிருப்பது முதுகுடி மன்னர் வேளாளர்களாகவும் போர்மறவர்களாகவும் ஆள்வோராகவும் இருப்பதுடன் ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது.

**வேளாண் சமுதாயமும் பெண்டிரும்**

வேளாண் பொருளாதாரத்தில் பெண்டிருக்குத் தலைமை இடம் இருந்தது. ஈட்டி வேல் கண்டுபிடிக்கப்பட்டதும் வேட்டை ஆணின் தொழில் ஆனது. பெண்கள் உணவு சேகரித்தார்கள். வேட்டையாடுவது பிராணி வளர்ப்புக்கு கொண்டு சென்றது. ஆகபெண்களே விவசாயத்தைக் கண்டுபிடித்தனர். கலப்பையைக் கண்டுபிடித்த உடன் விவசாயம் ஆண்கள் தொழிலானது இவ்வாறு வேளாண்மை காலப்போக்கில் மாற்றம் பெற்று ஆண்களின் கைக்கு மாறியது. பெண்கள் வேளாண்மையில் தலைமை வகித்ததை அறிவிக்கும் சான்றுகளும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. இதைத் தினைப்புனம் காவல், வெறியாட்டு ஆகியவற்றின் வழி அறியலாம்.

**தினைப்புனம் காவல்**

குறிஞ்சித் திணையில் தினை வேளாண்மை மிக முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. விதைத்தல், காத்தல், அறுவடை செய்தல், எனும் மூன்று நிலைகளில் காத்தல் தொழிலில் பெண்களும் ஈடுபட்டிருந்தனர் என்பதைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

உழவு, விதைத்தல் எனும் இரு தொழில்களும் ஆண்களால் மட்டுமே செய்யப்பட்டுள்ளன. குறவர் உழாஅது வித்திய பரூஉக் குரல் சிறுதினை தந்தை வித்திய மென்தினை ‘வனகண் கானவன …… புன்புல மயக்கத்து உழத …… ஏனல்’ எனும் பாடல்கள் இதை உறுதி செய்கின்றன.

புன்செய் வேளாண்மையில் காவல் மிகுதியும் வேண்டப்படுகின்றது. இந்தக் காவலும் பகற்காவல், இரவுக் காவல், என்ற இரு நிலைகளில் அமைகின்றது. பகற்காவல் பெரும்பாலும் பெண்டிரால் செய்யப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. சங்க இலக்கியத்தில் தினை எண்பது இடங்களில் ஆண், தினைக்காவல் புரிந்தமை ஆறு இடங்களில் மட்டுமே இடம் பெற்றுள்ளது. பெண்கள் தினைப்புனம் காத்தமை 29 இடங்களில் பேசப்பட்டுள்ளது. ஏனல் நாற்பத்தி மூன்று இடங்களில் ஆண் காவல் எட்டு இடங்களிலுல் பெண் காவல் 26 இடங்களிலும் பேசப்பட்டுள்ளன.

**“ அன்னையும் அமர்ந்து நோக்கினளே**

**……………………………………….**

**சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்**

**காவல் நீ என்றோளே”**[57]

எனத் தாய் உடன்பாட்டுடன் தாயின் கட்டளையுடன் இளம் பெண்டிர் தினைப்புனம் காத்த செய்தி பாடப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**


1. வி.சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள் ப.36
2. தொல். மரபியல், நூ.எ.36
3. மலைபடுகடாம், பா.வ.ள்.114-115
4. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள்.253-255
5. கலைக்களஞ்சியம், ப.412
6. பெருநாராற்றுப்படை, பா.வரி 155
7. பெரும்பாணாற்றுப்படை, பா.வரி 248-249
8. மலைபடுகடாம், பா.வ.ள். 474 - 475
9. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள்.431-434
10. மேலது, பா.வ.ள். 206-207
11. பொருநராற்றுப்படை, பா.வ.ள். 85-86
12. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள்.477-480
13. மேலது., பா.வரி 159
14. மலைபடுகடாம், பா.வரி 321
15. திருமுருகாற்றுபடை, பா.வ.ள்.23-25
16. மேலது., பா.வ.ள் 67-69
17. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள்.270-274
18. சிறுபாணாற்றுப்படை, பா.வரி 163
19. மேலது., பா.வரி 155
20. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள்.319-339
21. குறள் - 1031
22. குறள் - 1032
23. குறள் - 1033
24. குறள் - 516
25. குறள் - 1037
26. குறள் - 1039

27. புறம், பா.எ. 109 பா.வ.ள்.3-8

28. மேலது.,பா.எ. 335 பா.வ.ள்.4-6

29. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள்.240-242

30. மேலது., பா.வ.ள்.245-247

31. மேலது., பா.வ.ள்.272-274

32. மேலது., பா.வ.ள்.197-199

33. புறம்., பா.எ. 287 பா.வ.ள். 8-10

34. மேலது., பா.எ. 285 பா.வ.ள்.14-18

35. மேலது., பா.எ. 120 பா.வ.ள்.1-16

36. மேலது., பா.எ. 306 பா.வ.ள்.1-2

37. மேலது., பா.எ. 311 பா.வ.ள்.1-2

38. மேலது., பா.எ. 333 பா.வ.ள்.12-13

39. பொருநராற்றுப்படை, பா.வ.ள்.242-248

40. மதுரைக்காஞ்சி, பா.வ.ள்.87-88

41. அகம்.,பா.எ. 6 பா.வரி 5

42. புறம்.,பா.எ. 335 பா.வ.ள். 9-10

43. அகம்.,பா.எ. 86 பா.வ.ள். 12-13

44. குறுந்தொகை,பா.எ. 131 பா.வ.ள்.4-5

45. பொருநராற்றுப்படை, பா.வரி 117

46. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள். 199-201

47. பதிற்றுப்பத்து., பா.எ. 58 பா.வ.ள். 15-19

48. பெரும்பாணாற்றுப்படை பா.வ.ள். 222-228

49. புறம்.பா.எ.204 பா.வ.ள் 1-4

50. மேலது., பா.எ.35 பா.வ.ள். 3-11

51. மேலது.,பா.எ.18 பா.வ.ள். 11-19

52. மேலது.,பா.எ.18 பா.வ.ள். 24-30

53. பட்டினப்பாலை, பா.வ.ள்.283-284

54. புறம்.,பா.எ.337 பா.வ.ள்.16-18

55. மேலது., பா.எ.342 பா.வ.ள்.14-15

56. பதிற்றுப்பத்து., பா.எ.13 பா.வ.ள்.20-21

57. நற்றிணை.,பா.எ.389 பா.வ.ள். 3-7

# இயல் - 4

# சங்க இலக்கியங்களில் சடங்குகளும் நம்பிக்கைகளும்

பண்டைத் தமிழர்கள் அன்பும் வீரமும் கலந்த வாழ்க்கையை வாழ்ந்தனர் என்பது சங்க இலக்கியப் பதிவுகளாகும். தாங்கள் வாழ்ந்த நிலங்களில் தட்பவெப்ப சூழ்நிலைக்கேற்ப வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டனர். தெய்வம் முதல் தாங்கள் பயன்படுத்திய உணவு வரையிலும் நிலம் சார்ந்த வாழ்க்கையை நடத்தினர். குறிப்பாக தெய்வ வழிபாடு, வழிபாட்டு முறைகள், சடங்குகள், நம்பிக்கைகள் முதலானவற்றில் மிகுந்த ஆர்வம் செலுத்தினர். பெரும்பாலும் வளமான வாழ்க்கையை வாழ்ந்தவர்களும், வறுமையான வாழ்க்கையை வாழ்ந்தவர்களும் பண்பாட்டின் நிலைக்களன் அடிப்படையில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். இவ்வியல் சங்ககால மக்களின் பண்பாட்டு அடிப்படையிலான பலவகையான தெய்வங்களைப் போற்றுதல், பெருந்தெய்வ, சிறுதெய்வ வழிபாடு, நிலம் சார்ந்த தெய்வ வழிபாடு, நிலம் சார்ந்த சடங்குகள், நம்பிக்கைகள் முதலானவற்றைச் சான்றுகளுடன் ஆராய்கிறது.

### தெய்வம் போற்றுதல்

தெய்வக் கோட்பாடு தொன்றுதொட்டு மக்களிடையே வேரூன்றி வந்துள்ள ஒரு பண்பாகும். மனித சக்திக்கு மேற்பட்ட மற்றொரு சக்தி உலகை ஆட்டிப்படைப்பதாக அவர்கள் கருதினர். உலகில் நிகழும் நன்மைக்கும் தீமைக்கும் முதற்காரணமாக இருப்பது தெய்வ சக்தியே என எண்ணியதால், எந்த வினையிலும் முதலில் தெய்வத்தைப் போற்றும் பண்பை மேற்கொண்டனர்.

தெய்வம் போற்றுதல் முதற்கண் அச்சத்தாலும் வருந்துதலாலும் விளைந்தது. தகாத செயல் செய்யின் தெய்வம் வருந்தும் என்று நம்பினர். இதனால் அச்சத்தைக் குறிக்கும் அணங்கு, சூர், பேய் முதலிய பெயர்களால் தெய்வங்களைக் குறிப்பிடலாயினர். தமக்கு அச்சத்தை விளைவித்த பல பொருள்களும் பெரும்சக்தி படைத்தன என்று நினைத்தனர். இதனால் மலை, காடு, மரம், கடல் முதலியவற்றிலெல்லாம் தெய்வங்கள் உறைவதாக நம்பி வழிபாடு செய்யலாயினர்.

**"உரு கெழு மரபின் கடவுள் பேணியர்"**[1]

என்பதால் அச்சம் தரும் இயல்பு கடவுளுக்கு ஏற்றப்படுதலை உணரலாம்.

மக்கள் தங்கள் வாழ்வு சிறக்கவும் தாங்கள் எண்ணிய வினை இனிது முடியவும் எண்ணி கடவுளிடம் வரம் வேண்டினர். குறவர்கள் மழை பெய்யும் பொருட்டாகப் பலி முதலியன கொடுத்துக் கடவுளை வேண்டினர். அவர்கள் வேண்டுதல்களுக்கு இணங்க மழை மிகுதியாகப் பெய்துவிடுகின்றது. உடனே மழை நிற்க வேண்டும் என்று கடவுளைத் தொழுகின்றனர். இவ்வாறு மழை வேண்டும் காலத்துப் பெய்வதற்காக குறவர்கள் தெய்வம் பரவினர் என்பதை

**" மலைவான் கொள்க, என உயர்பலி தூஉய்,**
**மாரி ஆன்று, மழை மேக்கு உயர்க! எனக்**
**கடவுட் பேணிய குறவர் மாக்கள்**
**பெயல் கண் மாறிய உவகையர்"**[2]

என வரும் புறப்பாட்டுப் பகுதியால் அறியலாம்.

இவ்வாறே மகளிர் கரு உருவாக வேண்டுமென்றும், தம் கணவரது பொருள் முயற்சி கைகூட வேண்டுமென்றும் கடவுளை வேண்டுவதாகப் பரிபாடல் குறிப்படுகிறது. இவற்றால், அக்கால மாந்தர் தெய்வ

நம்பிக்கை உடையவராய்த் திகழ்ந்ததும் தத்தம் சூழலுக்கேற்ற வகையில் பல தெய்வங்களை வணங்கும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்பதும் தெரியவருகின்றது.

**இயற்கை வழிபாடு**

மக்கள் தங்களைச் சுற்றிலும் காணும் இயற்கைப் பொருள்களில் எண்ணற்ற தெய்வங்கள் உறைவதாக நம்பினர். மலை, காடு, மரம், நீர்நிலை, கழி, கடல் முதலியவற்றில் எல்லாம் தெய்வங்கள் உள்ளன என்று நம்பினர். இத்தெய்வங்கள் மக்களை வருத்தும் இயல்பின என்றும் கருதினர்.

**' அணங்கொடு நின்றது மலை'**

**"காடே கடவுள் மேன்;**
**புறவே ஒள்ளிழை மகளிரோடு**
**மள்ளர்மேன;**
**ஆறே அவ்வனைத்தும்"[3]**

என வரும் பதிற்றுப்பத்து வரிகளில் மலையிலும், காட்டிலும், மக்கள் செல்லும் பிற வழிகளிலும் மரஞ்செடி கொடிகளிலும் மலர் மண்டிக் கிடக்கும் வனங்களிலும் புதர்களிலும் கூடத் தெய்வம் உறைதலைக் கண்டனர். அடிமரத்திலே தெய்வம் உறைவதாக நம்பினர். மரங்களில் மராஅ, அனை, வேம்பு, ஆல், வேங்கை, ஓமை, கள்ளி முதலியவற்றில் தெய்வங்கள் சேர்ந்துள்ளமையைச் சங்கப் பாடல்களால் அறியலாம்.

மலையிலும் நீரிலும் உறையும் தெய்வ மகளிரை 'வரையர மகளிர்' 'நீரர மகளிர்' என்று போற்றினர். இத்தெய்வங்கள் பார்ப்பவரின் கண்களுக்குத் தென்படாது அனைத்து இடங்களிலும் உறைந்திருக்குமாம். இவற்றை அணங்கு, சூர் என்னும் பெயர்களால் அழைத்தனர். இதனால் இவைகள் அச்சம் தரும் தெய்வங்கள்

எனப்பட்டன. மேலும் இவை மக்களைத் தீண்டி வருத்துவதினால் ‘தாக்கணங்கு’ என்று குறிப்பிடப்படுகிறது.

**“உருமும் சூரும் இரை தேர் அரவமும்”[4]**

என்ற வரிகளில் இடியும் பாம்பும் போல சூழும் துன்பத்தை விளைவித்தலை இது குறிப்பிடுகிறது. சூர் மகள், சூரர மகளிர் என்றும் இத்தெய்வம் குறிக்கப்படுகிறது. சூர்த் தெய்வத்தால் தாக்கப்பட்டோர் நடுக்கத்திற்குள்ளாவர்.

கொல்லி மலையில் உறையும் பாவைத் தெய்வம் மிகுந்த அச்சம் தருவதாகப் புலவர்களால் குறிக்கப்பட்டிருக்கின்றது. இப்பாவைத் தெய்வம் தெய்வத்தால் எழுதி வைக்கப்பட்டதாம். இதனைத்

**“பெருநலம் கிளரினும், திருநல உருவின்**
**மாயா இயற்கைப் பாவையின்”[5]**

என்றும் போற்றுகின்றனர். ஒரு கவிஞர் இப்பாவையின் அழகை பெண்கள் நலத்திற்கு ஒப்பிட்டுப் பேசுகின்றார்.

அச்சம் விளைவிப்பவற்றுள் பேய், பிசாசு, பூதம் போன்றன முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை. பாசம், கழுது, பழு, அணங்கு, கூளி என்பனவும் பேய் எனப்படும் தெய்வங்களே. இவை எல்லாம் நள்ளிரவில் உருக்கொண்டு எங்கும் சுழன்று திரிவனவாம். பொதுவாகப் பேய்கள் கண்ணுக்கினிய காட்சியுடையவையல்ல பேயின் தலை தாழை மரத்தின் தோற்றம் போல் உள்ளதாம். இரண்டாகப் பிளவுபட்ட கவைத்தலைப் போன்ற பேய்களும் குறிக்கப்பட்டிருக்கிறது. இவற்றுள்சில மிகப் பெரிய கண்கள் கொண்டவை. செந்நிறமானவை; கடுமையாக நோக்கும் இயல்புடையவை. இவை தம் காதுகளில் வெள்ளாட்டு மறியை அணியாகப் பூண்டிருக்குமாம். வலிய நெருப்புக் கொழுந்து போன்ற நாக்கும் உடையன. இவற்றின் பற்கள் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு நீண்டு

தோன்றும். இவை யானையின் கால் நகங்களை ஒத்துள்ளன என்பர். செம்முருக்கின் பூங்கொத்துப் போன்ற விரல்களையும் பிளவுபட்ட பாதங்களையும் கொண்டவை. இவ்வகை உறுப்புகளோடு விளங்கும் பேயானது அதன் வடிவம் கண்டார்க்கு அச்சமும் வருத்தமும் விளைவிக்கும். பேய்கள் குட்டை வடிவமானவை. பூதங்களோ இவற்றிற்கு மாறுபட்ட பெருவடிவு உடையவை பேய் ஏறிச் செலுத்த ஊர்தியாக அமைவதும் பேய்தான். பெரும்போர் நடக்கும் களங்களில் பேய்கள் பிணங்களைத் தின்று மகிழ்ச்சிக் கூத்தாடுவதாகப் புலவர்கள் வருணிக்கின்றனர். பண்டைத் தமிழர்கள் புதை குழியை மூடியிருக்கும் கற்களையும் கூடத் தெய்வமாக வழிபட்டனர். பேய் முதலியவற்றால் தீண்டப்பட்டார் பொருட்டு, கவர்ந்த வழிகளில் ஆட்டைப் பலிகொடுத்து, தினையரிசி முதலியவற்றையும் படையலாக வைத்து வழிபடுவது வழக்கமாய் இருந்தது. ஊர்களிலும் மன்றங்களிலும் மாலைப் பொழுதில் இடப்படும் பலிகளை இவை உண்ணுமாம். பேய்களுக்குரிய பலியைக் கொடுத்துவிட்டால் அவைகள் தம்மை விட்டு நீங்கிவிடும் என நம்பினர்.

**"பலி கொண்டு பெயரும் பாசம் போல**
**திறை கொண்டு பெயர்தி."[6]**

என்ற வரிகளால் பேய்கள் தம்மால் பற்றப்பட்டாரது உயிரை உண்ணாமல் அவரை வருத்தித் தமக்குரிய பலியைப் பெற்றுக் கொண்டு நீங்கிச் செல்லும் தன்மையுடையன என்று கூறப்படுகிறது.

**ஊர்களில் உறையும் தெய்வங்கள்**

மக்கள் தாங்கள் வாழும் ஊர்களிலுள்ள சதுக்கங்களிலும் சந்திகளிலும், எல்லோரும் கூடும் மன்றங்களிலும், தாம் வாழும் இல்லங்களிலும் சில தெய்வங்களை வணங்கி வந்தனர்.

**" சதுக்கமும் சந்தியும் புதுப் பூங் கடம்பும்**
**மன்றமும் பொதியிலும், கந்துடை நிலையினும்"[7]**

என்பதில் மேற்குறித்த தெய்வ வழிபாட்டு முறையைக் காணலாம். சதுக்கம் என்பது நான்கு தெருக்கள் கூடுமிடம், சந்தி என்பது முச்சந்தி, ஐஞ்சந்திகளைக் குறிக்கும். ஊருக்கு நடுவில் எல்லோரும் வந்து கூடுவதற்குப் பயன்படும் மரத்தடியே மன்றம் எனப்படும். இந்த மன்றம் அந்தந்த ஊர்களில் ஊருக்கு நடுவே செழித்து வளர்ந்திருக்கும் மராஅமரத்துக்கு கீழே இது இருக்கும். பொதியில் என்பது ஊருக்குப் பொதுவாக அமைந்த கட்டடம். இந்த ஊர் அம்பலத்தில் சித்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். இதனை, “எழுது எழில் அம்பலம்” என்று பரிபாடல் குறிக்கிறது. இங்கே சுவரில் கடவுளின் உருவம் எழுதப்பட்டிருக்கும். பாழ்பட்ட மன்றத்திலிருந்து ‘எழுது அணி கடவுள் போகலின’ என்பதால் அங்கு பலி கொடுப்பாரின்றி பலிப்பீடமும் அழகு இழந்து கிடந்ததைத் அகப்பாட்டுத் தெரிவிக்கிறது. மேலும், இப்பொதியில் கந்து எனப்படும் தூண் வடிவமும் வணக்கத்துக்குரியதாய் இருந்தது பாழ்பட்ட ஒரு பொதியில் நாட்டப்பட்ட ஒரு கந்தின் மேல் கலைமான் சொறிந்ததினால் அந்தக் கந்து அசையும் நிலையை அடைந்து விடுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## நானிலத் தெய்வங்களும் பிறவும்

நானிலப் பகுதிகளுக்கும் தனித்தனிச் சிறப்பாக மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என்னும் தெய்வங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவர்கள் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நிலங்களுக்கு உரியர். இவர்களோடு பலராமன், கண்ணன், முக்கண்ணன் என்னும் தெய்வங்களும் சிறப்பாகக் குறிக்கப்பட்டிருக்கின்றனர். மேலும் இவர்களோடு தொடர்புடைய திருமகள், பிரம்மன், காமன், உமை, கொற்றவை முதலியோரும் இடம் பெற்றுள்ளனர். காடு, மலை, மரம், நீர் முதலியவற்றையண்டி உறைவதாகக் கருதப்படும் சிறு தெய்வங்களும், ஊர் மன்றங்களிலும் கோவில்களிலும் வழிபடும் கந்து முதலியனவும், இல்லுறையும் பாவை

முதலிய தெய்வங்களும் ஆகப் பலப்பல தெய்வங்களைப் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் உள்ளன.

**திருமால்**

முல்லை நிலத்திற்குரிய திருமால் பற்றியும் குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் பற்றியும் பரிபாடல் தொகுதியில் திருமாலுக்கு ஆறும், முருகக்கடவுளுக்கு எட்டுப் பாடல்களும் உள்ளன. முருகாற்றுப்படை முருகனது பெருமையைப் பேசும் தனிநூல். பத்துப்பாட்டில் முருகனைப் பற்றிய பாட்டை முதலிலும் பரிபாடலில் திருமாலைப் பற்றிய பாடலை முதலிலும் அமைந்திருப்பது இவ்விரு கடவுளரின் முதன்மையைக் காட்டும்.

**" மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்"**[8]

எனத் தொல்காப்பியர் திருமாலை முதலிலும் அடுத்து முருகனையும் குறிப்பிடுகின்றார். இவற்றால் திருமாலுக்கு முதலிடம் தந்து போற்றும் ஒரு மரபு தெரிய வருகிறது.

திருமால் காடுறையும் ஆயர்களால் சிறப்பாக வழிபடப் பெறும் தெய்வமாகும். முல்லைக்கலியில் ஆயர்கள் குரவையாடிப் போற்றிப் புகழ்ந்தமை சிறப்பாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆயர் வாக்கில் தெய்வ மால் காட்டிற்று எனக் கூறப்படுவதால், ஆயர்கள் வழிபட்ட சிறப்புத் தெய்வம் மால் என்பது நோக்கமாகும்.

திருமாலின் உருவக் காட்சிகளும் அவருடைய ஊர்தி கொடி, படை முதலிய விவரங்களும், அவர் அரசுப் பகைகளை ஒழித்து உலகைக் காத்த வகையும், அவர்தம் அவதார நிகழ்ச்சிகளும் சங்கப் பாடல்களில் ஆங்காங்கே விவரிக்கப்பட்டுள்ளன. திருமால் நெடிய வடிவுடையவர். இந்நெடுமால் நீலமணி, கார்மேகம், கருங்கடல், காரிருள்,

கரிய பூவைமலர் இவற்றைப் போன்ற வண்ண முடையவர் என்றும் நீலநிற வண்ணன், மாயோன் என்னும் பெயர்களும் இவர்தம் நிறத்தைக் குறிப்பிடுவன. இவர் தலை மேல் தோன்றும் திருமுடி நீலமலையின் மேல் படிந்துள்ள சூரியனது ஒளியைப்போல் பிரகாசிக்கிறது. இவர்தம் மலை போன்ற மார்பில் அழகிய மாலைகளும் துளசி மாலை முதலியனவும் பொன்னாபரணங்களும் பொருந்தி விளங்குகின்றன. இங்ஙனம் பல்வேறு அணிகள் விளங்கும் அவர்தம் மார்பு பெரிய வானத்தில் தோன்றும் இந்திர வில்லைப் போலக் காட்சி தருகிறது என்கிறார் ஒரு புலவர். மார்பில் திருமகளும் நீங்காது மறுப்போல் உறைகின்றாள் என்பதால் திருமறு மார்பன் என்பது இவனுக்குரிய ஒரு பெயர். மார்பின் கீழாக உள்ள உந்தியில் உள்ள கொழிப்பூழில் எழுந்த தாமரையில் பிரம்மன் காட்சி தருகின்றான். பிரம்மனைத் தனது உந்தியில் பிறப்பித்து, உலகைப் படைக்கும் தொழிலை இவன் செய்தனன் என்பர். திருமாலின் வலக்கரத்தில் சக்கரமும் இடக் கரத்தில் சங்கும் சூரிய சந்திரரைப் போன்று விளங்குகின்றனவாம். இவை போரில் வெற்றியளிக்கும் ஆயுதங்களாகும். மாற்றாரை அழிக்கும் போது சங்கு தனது முழக்கத்தால் பகைவரை நிலை குலையச் செய்யும் சக்கரம் அவர்களை அறுத்து எறியும். இவற்றோடு வில்லம்புகளும் அவர்க்குரிய ஆயுதங்களாகக் குறிக்கப்பட்டுள்ளன. இவருடைய அருட்கண்களும் திருவடிகளும் செந்தாமரை மலரைப் போன்றவை. இத்தகைய செய்திகளைப் பரிபாடல் விளக்குகிறது.

### பலதேவன்

பாலையும் சங்கையும் இவன் மேனிக்கு ஒப்புக் கூறுவர். இவரது ஒரு காதில் குண்டலம் விளங்கும் மார்பில் கடப்ப மாலை அணிந்து இருப்பான். புடை நாஞ்சில் என்னும் கலப்பை கொடியும் யானைக் கொடியும் இவனுக்குண்டு பலராமனைப் போலவே திருமகள், கருடன்,

பிரம்மன், ஆதிகேசன், காமன் முதலியோர் திருமாலின் தொடர்புடையராய்த் தனித் தெய்வங்களாகவும் போற்றப்படுகின்றனர்.

**திருமகள்**

திருமகள் செந்நிற உருவம் உடையவளாய்த் தாமரை மலரை இருக்கையாகக் கொண்டவள். இரு புறத்தும் யானைகள் நீர் சொறிய, நடுவில் பூமேல் செல்வத்துக்கு உரிய அதிதேவதை செல்வம் மிகுந்து சிறந்திருத்தலைத் திருமகள் நிலையாகவும், செல்வம் இழந்து நிற்கும் வறிய நிலையைத் திருமகள் நீக்கியதாகவும் கருதினர். பற்று விட்டோர்க்கு இவள் அருள் கிட்டும். அரசர்களைத் திருமால் வழியினர் என்று போற்றுதலைப் போலத் திருமகளை அரசர்களின் துணைவியாகக் கூறப்படுவது மரபு. மாமறுத்த மலர் மார்பிடத்தே என அரசனின் மார்பிடத்தே திருமகள் விரும்பி உறைவதாகக் குறிக்கப்படுகிறது.

நிலமகளையும் திருமால் ஒரு காலத்தில் கூடினான். வராகு கர்ப்பத்தில் நீரினுள் மூழ்கிக் கிடந்த நிலமகளைத் திருமால் ஆதிவராகமாக மணம் புரிந்தான் என்பர்.

ஆதிகேசன் ஆயிரம் திருமுடிகளை உடையவன். குடையாக அவருக்கு மேலே தன் தலைகளை விரித்திருப்பான். தேவரும் அசுரரும்பாற் கடல் கடைந்த காலத்தில் மத்தின் நாணாக விளங்கினான். சிவபெருமானுடைய மேரு வில்லுக்கு நாணாக அமைந்து புகழ் கொண்டவனும் இவனே. உலகத்தைத் தன் தலைமேல் தாங்கிக் காப்பாற்றுகிறான். இருந்தையூரில் இவனுக்கென அமைந்த கோயிலில் மக்கள் வழிபட்டுப் போற்றினர்.

**கருடன்**

கருடன் பாம்பிற்குப் பகையெனக் கூறப்படுபவன். பாம்பின் உடலையும் உயிரையும் கவர்ந்து உண்ணும் இயல்பினன். ஆதிகேசனையும் தன் வாயில் கௌவிக் கொள்ளும் பெருவலி படைத்தவன். இக்கருடனின் தொடி கண்ணிகள், கழுத்துப்பூண், சூட்டு முதலியன எல்லாம் பாம்புகளாகவே அமைத்து கொள்ளும் இயல்புடையன. இத்தகைய வலிபடைத்த கருடனின் செருக்கையும் ஒரு சமயம் திருமால் அடக்கினன் என்பர்.

**குறிஞ்சி நில முருகன்**

முருகன் மலைவாழ் மக்கள் போற்றும் பெருந்தெய்வம். குறிஞ்சிக் கிழவன் என்பது இவனுக்குள்ள ஒரு பெயர். பிறங்குமலை மீமிசைக் கடவுள், காடு கெழு நெடுவேள் எனச் சிறப்பிக்கப்படுகிறான். முருகப் பெருமானின் திரு அவதார நிகழ்ச்சிகளைப் பரிபாடலின் ஐந்தாம் செய்யுள் விவரித்திருக்கிறது. திரிபுராந்தகன் உமையோடு கூடி முருகன் வெளிப்படுவதும், இந்திரன் கருவைச் சிதைத்தலும், பின் அறு முனிவர் பத்தினியரின் கர்ப்பத்தில் தங்கியதும், இமயத்தின் உச்சியிலுள்ள சுனையிலே தாமரைப் பள்ளியில் தோன்றியதும், பிறந்த அன்றே மீண்டும் பகையாய் வந்த இந்திரனை வென்றதும், தோற்ற இந்திரன் மற்றும் தேவர்கள் முருகப் பெருமானுக்கு ஆயுதங்கள் முதலியன கொடுத்தலும், வேறுபல நிகழ்ச்சிகளும் அப்பாடலில் விவரிக்கப்பட்டுள்ளன.

நீலக்கடலில் தோன்றும் இளஞ்சூரியனையொத்துச் செவ்வொளி வீச, ஆறு திருமுகங்களும் அருட்காட்சி நல்க, பன்னிரு கைகளும் பல தொழில் புரிய மயிலின் மேல் பெருமான் வீற்றிருக்கும் அழகினைத் திருமுருகாற்றுப்படை பல படியாகப் பாராட்டிப் பேசுகிறது. முருகப் பெருமானின் மேனியின் நிறம் போன்றே அவன் அணிந்துள்ள ஆடை,

மாலை, கொடி முதலியனவெல்லாம் செந்தீப்பிழம்பாகக் காட்சியளிக்கின்றன. முருகனுடைய உடையை

**"நலம் பெறு கலிங்கம்"[9]**

என முருகாற்றுப்படையும்,

**"வெண்டுகில்"[10]**

எனக் கலித்தொகையும் குறிக்கின்றது. இவன் மார்பில் கடம்பம் பூ மாலை, முத்து மாலை முதலியனவும் விளங்கும்.

முருகன் சீற்றமும் சினமும் மிக்கவன். ஒப்பற்ற பெருந்திரல் வாய்ந்தவன். போரிலே முன்னின்று எந்நாளும் வெற்றியைப் பெறுபவன். முருகன் தேவர் சேனைக்குத் தலைமை தாங்கி, இந்திரனுக்குப் பகைவனாகிய அசுரர்களுள் ஒருவனான சூரனைக் கொன்றது முக்கியமான நிகழ்ச்சியாகும். சூரன் மாமரவுருவில் கடலில் ஒளிந்து போர் செய்ய, பெருமான் அம்மாமரத்தினை வெட்டி அழித்து, அவனை வதம் செய்தான். இதற்கடுத்தபடியாகக் குருகு பெயர்க் குன்றமாகிய கிரௌஞ்ச மலையை வேல் எறிந்து அழித்தது முக்கியமான நிகழ்ச்சியாகும். இச்செய்திகள் பரிபாடலில் இடம்பெற்றுள்ளன.

**இந்திரன்**

மருத நிலத்தில் வாழும் மக்கள் அந்நிலத் தெய்வமாகிய இந்திரனுக்கு ஆண்டு தோறும் விழாக் கொண்டாடினர். இவ்விழா இருபத்தெட்டு நாள் நடைபெற்றதாகச் சிலப்பதிகார, மணிமேகலைக் காவியங்கள் தெரிவிக்கின்றன.

**"இந்திரவிழாவில் பூவினன்ன"[11]**

என்று குறிப்பிடுவதைச் சங்க தமிழர் வாழ்வியல் சுட்டுகின்றது. வயல் சூழ்ந்த மருதநில ஊர்களில் நிகழும் இந்திரவிழாவை கண்டு களிக்க மக்கள் திரண்டு செல்வதைப் பதிற்றுப்பத்து சுட்டுகிறது. இந்த இரு தொகைநூல்களும் மருத நிலத்தார் தம் பேரூர்களில் கொண்டாடிய

விழாவாகவே இதனை சுட்டுவதினால், இந்திரன் மருதப்பூக்கள் நிறைந்த நாட்டின் சிறப்புத் தெய்வம் என்பது விளங்குகிறது. தொல்காப்பியமும் இதனை,

**"வேந்தர் மேய தீம்புனல் உலகம்"**[12]

என்று கூறுகிறது.

இந்திரன் வானுலகத் தேவர்களின் அதிபதியாகக் கூறப்படுபவன். வடக்கே உயர்ந்து ஓங்கிய பெருமலையாகிய மேருவைக் காவல் புரிபவன். நூறு வேள்விகளைப் புரிந்தவன். அதன் பலனாக பகைவரை வெல்லும் ஆற்றல் படைத்தவன். ஆயிரம் கண்களை உடையவன் வச்சிராயுதத்தை ஏந்தியவன். நெடியோன் என்றும் இவனுக்குப் பெயர் உண்டு. நான்கு கொம்புகளைப் படைத்த ஐராவதம் யானையை ஊர்தியாகக் கொண்டவன். இந்திரனும் பிற தேவர்களும் அமுதை அருந்துபவர்கள். ஆதலால் அமிர்தத்தை 'இந்திரர் அமிழ்தம்' என்பர். தேவ மைந்தரும் மகளிரும் புடைசூழ ஆகாய கங்கையில் நீராடி இவன் இன்பமாகப் பொழுதுபோக்குபவன். இவன் சொர்க்கலோகத்திற்குத் தலைவனாதலின், வீர சொர்க்கம்புகும் வீரர்கள் இவனது உலகிற்குச் செல்வர். அரசனான ஆய் இறந்த பொழுது, அவனை எதிர் கொள்வதற்காக இந்திரன் கோவில் முரசம் முழங்கியது என்று ஏணிச்சேரி முடமோசியார் குறிப்பிடுகின்றார்.

வானத்தில் மழைக் காலத்தில் தோன்றும் வானவில்லை 'இந்திரவில்' என்பர். முருகப்பெருமானுக்கு பகைவனாய் இந்திரன் முதலில் தோன்றி, பின் அவனிடம் தோற்று, அப்பெருமானின் வலிமை கண்டு அவனைத் தன் சேனாதிபதியாகக் கொண்டு சூரர் பகை களைந்து இவனும் பிற தேவர்களும் நல்வாழ்வு பெற்றனர். இந்திரன் தன் மகள் தேவயானையை முருகப்பெருமானுக்குத் திருமணம் செய்து கொடுத்தான்.

இந்திரன் ஒரு சமயம் தன் மோகத்திற்கு அடிமையாகி அகலிகையை விரும்பிக்கூடி, அதனால் அவளது கணவன் கௌதம முனிவரின் சாபத்திற்கு ஆளானான். இந்தப் புராண நிகழ்ச்சி திருப்பரங்குன்றத்தின் கோவில் ஓவியத்தில் தீட்டப்பெற்றுள்ளது இதனை,

**" இந்திரன், பூசை; இவன் அகலிகை; இவன்**
**சென்ற கவுதமன்; சினம் உறக் கல் உரு**
**ஒன்றிய படி இது' என்று"**[13]

என்று பரிபாடல் வரிகள் குறிக்கின்றன.

**வருணன்**

நெய்தல் நிலத்தெய்வம் வருணன்

**"வருணன் மேய பெருமணல் உலகமும்"**[14]

என்று தொல்காப்பியம் கூறுகிறது. பெருங்கடல் தெய்வம் என்பது இவ்வருணனைக் குறித்தது ஆகலாம். நெய்தல் நிலத்து மக்கள் சுறாமீனின் கொம்பை நட்டு தங்கள் நிலத்தெய்வத்திற்கு வழிபாடு செய்தனர் என்பதையும் அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் நெய்தல் நில வழிபாட்டில் வருணன் என்ற குறிப்பு இல்லை. வருணன் மழைத் தெய்வமாதலால் நீர்த்துறைத் தெய்வங்களாகச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றனவா? என்பது ஆய்வுக்குரிய ஒன்று. இதனை,

**" கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கி,**
**கடுஞ்சூள் தருவன் நினக்கே"**[15]

என்று அகநானூற்றுப் பாடலும்,

**" பெருங்கடற் தெய்வம் நீர்நோக்கித் தெளித்து என்**
**திருந்திழை மென்றோள் மணத்தவன்"**[16]

என்று கலித்தொகைப் பாடலும் கழிமுகத்துறைத் தெய்வத்தையும் பெருங்கடல் தெய்வத்தையும் பற்றி கூறியுள்ளன.

'அணங்குடை முந்நீர்' என்று அகநானூறும், 'பெருந்துறை பரப்பின் அமர்ந்துறை அணங்கோ' என்று நற்றிணைப் பாடலும் குறிப்பிடுவது நோக்கத்தக்கதாகும். 'கடல்கெழு செல்வி' என்று கடல் தெய்வத்தைப் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன.

தொகை நூல்களிலும் பாட்டு நூல்களிலும் குறிக்கப்படும் கடவுள் வழிபாடுகளில் பலி இலாத் தெய்வமாகவும், பெண் தெய்வமாகவும், ஆவித் தெய்வமாகவும் மட்டுமே இருப்பதைக் காண முடிகிறது.

**கொற்றவை**

கொற்றவை பாலை நிலத்திற்குரிய தெய்வம் என்பர். இவள் முக்கண்ணனுடைய போர்சக்தியாவாள். முருகனை உமைபாலன் என்பதைப் போலவே,

**"வெற்றி வேல் போர்க்கொற்றவை சிறுவ"**[17]

**"இழையணி சிறப்பின் பழையோள் குழவி"**[18]

எனக் கொற்றவையை சிறுவனாகக் கூறுவதும் மரபு. இவள் காட்டில் வாழும் மறவர்களால் போற்றப்படுபவள். "கானமற் செல்வி" 'பெருங்காட்டுக் கொற்று' என்றும் குறிக்கப்படுகின்றாள். கொற்றவையின் கோலம் பற்றிய குறிப்பொன்று மகளிர் தைந்நீராடலின் பகுதியில் காணப்படுகிறது. இக்குறிப்பினால் இவள் முக்கண்ணுடையவள் என்று தெரியவருகிறது. கையில் சூலப்படையைத் தாங்கி இருப்பாள். இதனால் 'சூலி' என்னும் பெயரும் இவளுக்குண்டு. இவளைப் போர் கொற்றவை என்பதற்குக் காரணம் மகிடாசூரனை அழித்த நிகழ்ச்சியைக் குறிப்பது ஆகும். வீரர்கள் சூடும் வெற்றிப் பூவாகிய வாகையிலும் இவள்

வீற்றிருப்பதாகக் கருதுவர். இதனால் அவ்வாகை பூவைக் கடவுள் வாகைத் தூய்வீ என்று சிறப்பிக்கின்றனர். வெற்றி மடந்தையாகிய கடவுள் வாழும் வாகை என்று அதற்கு விளக்கம் கூறப்படுகிறது.

கொற்றவையின் கோட்டம் காட்டிலே அமைந்திருக்கும். இதனை பேய், பூதம், பிசாசுகள் சூழ்ந்து நின்று காவல் காக்கும். அக்கோவிலில் புறாக்களும் தங்கியிருக்கும்.

கானவர் காய்ந்த விறகால் தீமூட்டி அங்கே எரி விளக்காக அமைப்பர். காளி கோவிலின் முற்றத்திலே வந்து உறங்கும் மான் கூட்டங்களை எரிவிளக்கின் ஒளியால் மந்திகள் எழுப்பி ஓட்டி, அதனைத் துடைத்துத் தூய்மை செய்வதாக புறப்பாட்டில் ஒரு குறிப்பு உள்ளது. தேவியைச் சுற்றியிருக்கும் பேய்கள் அவளுக்கு பொழுதுப்போக்காக வேடிக்கையான விடுகதைகளைக் கூறுமாம். இதனை,

**"பெருக்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித் தாங்கு"[19]**

என்று கலித்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது.

மறவர் கொற்றவையைத் தொழுது அவளுக்குப் பலிகடன்களைச் செலுத்துவர். அப்பொழுது அவர்கள் காப்பாகத் தங்கள் கையில் நூலைக் கட்டிக் கொள்வதும் உண்டு. குருதிப் பலியும் கொடுப்பது வழக்கமாய் இருந்தது.

கொற்றவை உறையும் இடங்களில் அயிரைமலை, விந்த மலை என்ற இரண்டையும் பற்றிய செய்தி தெரிய வருகிறது. அயிரை மலைக் கொற்றவையைப் பற்றிய குறிப்புகள் பதிற்றுப் பத்தில் மட்டுமே காணப்படுகின்றன.

இம்மலையிலிருந்து ஓடிவரும் ஆயிரையாறு

"மாற்று அருந்தெய்வத்துக் கூட்ட முன்னிய
புனல்மலி பேரியாறு"[20]

என்று கூறப்படுகிறது. சேர மன்னர்கள் தாங்கள் போர் முதலியவற்றில் ஈடுபடும் முன்னர் இக்கொற்றவையை வழிபட்டுச் சென்றனர் என்று தெரிகிறது. மேலும்,

"கடவுட் பெயரிய கானம்"[21]

என்பதற்குக் கொற்றவை உறையும் விந்திய மலைக்காடு என்று பழைய உரைகாரர் விளக்கம் தருகிறார்.

### பெருந்தெய்வங்கள்

உலகத்தைக் காப்பவரும் முடிவு காலத்தைச் செய்பவரும் பெரும்புகழ் படைத்தவருமான தெய்வங்களாக நால்வரை ஐம்பத்தாறாம் புறப்பாட்டுக் கூறுகிறது. அவர்களாவர் மணி மிடற்றோன், பனைக் கொடியோன், விறல் வெய்யோன் மற்றும் செய்யோன் என்ற இந்நால்வரும் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுடைய சீற்றம், வலிமை, புகழ், முன்னியது முடிக்கும் ஆற்றல் ஆகியவற்றுக்கு ஒப்பிடப்பட்டுள்ளனர். இவரைத் தோலா நல்இசை நால்வர் என்கிறார் புலவர்.

திருமால், முக்கண்ணன், நான்முகன், என்னும் மூவரும் முறையே காத்தல், அழித்தல், படைத்தல் என்னும் தொழிற்குரிய முதல்வராகக் கூறப்படுகின்றனர். பிரம்மதேவனிடம் இருந்து ஞாயிறு, திங்கள் முதலிய தேவர்களும் பிறரும் தோன்றுகின்றனர். திருமுருகாற்றுப்படை, மாயோன், முப்புரம் எரித்தவன் ஆயிரம் கண்ணனாகிய இந்திரன் என்னும் மூவரையும், சிறப்பித்துரைக்கிறது. இம்மூவரையும்,

**“ உலகம் காக்கும் ஒன்று புரிகொள்கைப்**

**பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக”**[22]

என்று நக்கீரர் குறிப்பிடுகின்றார்.

இவற்றால் திருமால், முக்கண்ணன், நான்முகன், இந்திரன் என்னும் நால்வரும் தலைமைத் தெய்வமாகக் குறிக்கப்படுகின்றனர் என்பதை அறியலாம். முத்தொழிற்கு உரிமையால் அயன், அரி, அரனும் தேவர்களின் அதிபதியாதலின் இந்திரனும் தலைவராகக் குறிக்கப்பட்டனர் போலும்.

**“ வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து**

**உரு உடன் இயைந்த தோற்றம் போல**

**அந்தி வானமொடு கடல் அணி கொளாஅ”**[23]

என்ற வரிகள் சுட்டும் செந்நிறமாகத் தோன்றும் அந்திவானம் செம்மேனி படைத்த முருகனையோ அல்லது முக்கண்ணனையோ குறிப்பதாகும். நீலக்கடல் கருநிறம் படைத்த திருமாலைக் குறிப்பதாதல் வேண்டும்.

மதுரைக்காஞ்சியில் மழுவாள் நெடியோனைத் தலைவனாகக் கொண்டு பிற தெய்வங்கள் விளங்குவதாகக் கூறப்பட்டிருக்கிறது.

**“ நீரும் நிலனும் தீயும் வளியும்**

**மாக விசும் போடு ஐந்து உடன் இயற்றிய**

**மழுவாள் நெடியோன் தலைவன் ஆக,**

**மாசு அற விளங்கிய யாக்கையர், சூழ்சுடர்**

**வாடாப்பூவின் இமையா நாட்டத்து**

**நாற்ற உணவின், உருகெழு பெரியோர்”**[24]

என்ற மதுரைக்காஞ்சி பாடல் பகுதிக்கு உரை விளக்கம் தரும் நச்சினார்க்கினியர்,

‘மழுவாகிய வளையுடைய பெரியோன் ஏனையோரின் முதல்வனாகக் கொண்டு மாயோன், முருகன் முதலாகிய தெய்வங்கள்’விளங்குகின்றன என்று குறிப்பிடுகின்றார்.

இவ்வுரைப்பகுதிக்கு விளக்கம் எழுதிய டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர், ‘மழுவாள் நெடியோன் என்று குறிப்பிட்டது சிவபெருமானை ஆகும்.

மழுவாளைக் கொண்ட தெய்வங்கள் பரசுராமனும் முக்கண்ணனும் ஆவர். பரசுராமனை ‘மன்மருங்கறுத்த மழுவாள் நெடியோன்’ என்று சுட்டுகிறது. எனவே, இது முக்கண்ணனைக் குறிக்கும் சிறப்புப் பெயராகக் கொள்ள இடமுண்டு.

பெருந்தெய்வங்களுள் தலைமைத் தெய்வமாகக் கருதப்படும் முக்கண்ணன் அந்தி வானத்தைப் போன்ற செந்நிறம் படைத்தவன். மலர்ந்து நறுமணம் பரப்பும் செண்பக மலர் இவனது திருமேனி அழகைப் பெற்று விளங்குகிறது என்பர். எனவே முக்கண்ணனின் திருமேனியின் நிறம் அந்திவானைப் போன்ற பொன்னிறமாயும் காட்சி தருதல் பெறப்படும். இதனை,

**“செவ்வானன்ன மேனி”**[25]

என்று அகநானூற்றின் கடவுள் வாழ்த்தும் குறிப்பிடுகிறது. இவனது திருமேனி போன்றே திருமுடியில் விளங்கும் சடையும் நெருப்பை ஒத்துக் காட்சியளிக்கிறது. இச்சடையில் தெள்ளிய கங்கை நீரை மறைத்து வைத்துள்ளான். நீர் தங்கியிருப்பதனால் இச்சடை ஈரமாகவும் உள்ளது. இவனது முக்கண்ணையும் கறை மிடற்றையும் சங்கப் புலவர்கள் பல இடத்து ஒப்புமையாக எடுத்துக் கூறியுள்ளனர்.இவை முறையே இவனது சினத்திற்கும், பேரருளுக்கும் சின்னமாக விளங்குகின்றன. இதனால்

இவன் முக்கட் செல்வன் என்றும் பேசப்படுகின்றான். நஞ்சை உள்ளடக்கிய கழுத்தை உடைமையால் இவன் கழுத்து நீலநிறம் வாய்ந்து விளங்குகிறது. இதனால் இவனை 'நீலகண்டன்' என்றும் குறிப்பிடுவர்.

முக்கட் செல்வன் உமையை ஒருபாகத்துக்குக் கொண்டு உயர்ந்த மலையாகிய கயிலை மலையில் அமர்ந்து யோகியாகக் காட்சியளிக்கிறான். உமையுடன் கூடி முருகனைத் தந்தனன். இவன் அருந்தவ முதல்வனாய் ஆலின்கீழ் அமர்ந்து அறம் உரைக்கும் யோகியாகவும் காட்சி தருபவன். வேதம் இவன் வாக்கிலிருந்து பிறந்தது. எப்பொழுதும் இவன் வாக்கில் நீங்காது உறைவது. வேதம் என்னும் முதுநூலை அருளிய இம்முக்கண்ணன் 'முதுமுதல்வன்' ஆகக்கொண்டாடப்படுகிறான். தேவர் பொருட்டுச் செய்யும் வேள்வியில் அவிபாகத்தை உண்ணும் வேள்வி முதல்வனாகவும் விளங்குபவன் இவனே.

இவன் வீற்றிருக்கும் கயிலை மலையை இராவணன் பெயர்த்து எடுக்க இயலாது அம்மலையில் அகப்பட்டு இசை பாடித் துதிக்க அவனுக்கு அருள் செய்தான். இவன் முப்புரம் எரித்த நிகழ்ச்சி விரிவாகச் சங்கப் பாடல்களில் குறிக்கப்பட்டிருக்கிறது. முப்புரம் அழித்ததைப் போலவே மூவுலகையும் முடிவில் அழிக்கும் ஊழி முதல்வனும் இவனே. கயிலை மலையில் உறையும் இப்பெருமானின் திருக்கோயில் நன்னனுடைய நவிரமலையிலும் ஆலமுற்றம் என்னும் தலத்திலும் அந்நாளில் விளங்கிய செய்தியும் தெரிய வருகிறது.

உமை முக்கண்ணனோடு உடனாகக் கயிலையில் அமர்ந்து இருந்தாள் என்பது அவனது உடலின் ஒரு பகுதியாக விளங்கும் காட்சியாகும். இறைவனுடைய செம்மேனிக்கு மாறான கருமையும்

பசுமையுமான நிறத்தையும் இவள் கொண்டுள்ளாள். இவர்கள் இணையாக இருப்பதை,

**" உமை அமர்ந்து விளங்கும் இமையாமுக்கண்**
**மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வன்"**[26]

என்ற அடிகளில் உமையுடன் விளங்கும் முக்கண்ணன் என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

**நடுகல்**

வெட்சி கரந்தைப் போர்களில் ஈடுபட்ட வீரர்கள் வெற்றியோடு மீண்டு வந்தால் ஊரவர் உண்டாட்டு நிகழ்த்திக் கொண்டாடிப் போற்றினர். மாண்ட வரை நடுகல் நட்டு வணங்கி வழிபட்டனர். சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள நடுகல் பற்றிய செய்திகள் அனைத்தும் வெட்சி கரந்தைப் போர்களில் வீரமரணம் அடைந்த ஆடவர்களின் நினைவைப் போற்றி வணங்குவதற்காக நடப்பட்ட கற்களைப் பற்றியதாகவே உள்ளன. பெண்களுக்கு நடுகல் நடப்பட்ட செய்தி சங்க இலக்கியங்களில் காணப்படாமை நோக்கத்தக்கது.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்கு நடுகல் நட்டுக் கோயில் அமைத்து வழிபாடு நிகழ்த்த ஏற்பாடு செய்ததனைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. கண்ணகி தவிர்த்த பிற பெண்களுக்கு நடுகல் நடப்பட்டதா என்பது தெரியவில்லை.

வெட்சி கரந்தைப் போர்களில் வீரமரணம் அடைந்த வீரர்களின் நினைவாக நடப்பட்ட நடுகற்களைத் தெய்வமாகக் கருதி வணங்கி வழிபட்ட நிலை தமிழகத்தில் ஏற்பட்டது. நடுகல் தெய்வமாக வணங்கப்பட்டதற்குப் புலவர் மாங்குடி கிழார் சான்றளிக்கிறார்.

**“ கல்லே பரவினல்லது நெல்லுகுத்துப் பரவும்**

**நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே”[27]**

என்பது அவரது கூற்றாகும்.

நடுகற்களுக்கு நாள்தோறும் தீபதூபம் காட்டிப் பூசைசெய்யும் வழக்கமும் ஏற்பட்டது.

**“ இல்லடுகள்ளின் சில்குடிச் சீறூர்ப்**

**புடைநடு கல்லின் நாட்பலியூட்டி**

**நன்னீராட்டி நெய்நறை கொளீஇய**

**மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்”[28]**

என்று நடுகல் வணங்கப்பட்ட செய்தியைப் புறநானூறு கூறுகிறது.

நடுகல்லுக்குப் பீலிசூட்டி வணங்கும்போது அடுகள்ளும் படைத்து வணங்கப்பட்ட செய்தியை புறநானூறு கூறுகிறது.

**“நடுகற் பீலி சூட்டி நாரரி சிறுகலத்துகுப்பவும்”[29]**

என்று அதியமான் நெடுமானஞ்சியின் நடுகல்லுக்குக் கள்ளும் படைக்கப்பட்டது குறித்து அவ்வையார் கூறுகிறார்.

ஆநிரைகளையுடைய கோவலர் உயர்ந்த வேங்கை மரத்தின் நல்ல பூங்கொத்துக்களைப் பனையோலையில் தொடுத்து அலங்கரித்து இலைமாலை சூட்டி நடுகல்லை வணங்கினர் என்று புறநானூறு கூறுகிறது.

**“ ஊர் நனியிகந்த பார் முதிர் பறந்தலை**

**ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்**

**போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்**

**பல்லான் கோவலர் படலை சூட்டக்**

**கல்லாயினை”[30]**

என்பது அது குறித்தபாடற் பகுதியாகும்.

வெட்சியார் கவர்ந்து சென்ற ஆநிரைகளை மீட்பதற்காக நடைபெற்ற கரந்தைப் போரில் உயிர்நீத்த வீரனுக்கு ஊரவர் கல் நட்டனர். முரல் நாரில் தொடுக்கப்பட்ட சிவந்த பூவையுடைய கண்ணியையும் அழகிய மயிலினது பீலியையும் சூட்டிப் பெயரும் பீடும் எழுதிப் பெருமை செய்து வழிபட்டனர் என்று புறநானூறு கூறுகிறது.

**" பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி**
**மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு**
**அணி மயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து**
**இனி நட்டனரே கல்லும்"**[31]

என்ற பாடல் பகுதி அதனை விளக்குகிறது.

நடுகற்களுக்கு நாள்தோறும் தீபதூபம் காட்டிப் பூசை செய்து வழிபடும் காரியங்களைப் பெண்கள் செய்தனர் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. கண்ணகிக்கு செங்குட்டுவன் அமைத்த நடுகல்லுக்குப் பூசை செய்யும் செயலுக்கு அவள் தோழியான தேவந்தி என்பவளை அம்மன்னன் நியமித்தான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இதனை,

**" ஒலிமென் கூந்தலொண்ணுதலரிவை**
**நடுகல் கைதொழுது பரவு மொடியாது**
**விருந்தெதிர் பெறுகதில்யானே யென்னையும்**
**.................................... வேந்தனொடும்**
**நாடு தருவிழுப்பகை எய்துக எனவே"**[32]

என்னும் சிலம்பின் வரிகளால் அறியலாம். இளங்கோ அடிகள் வடித்தபடி பெண்கள் ஆடவர்க்கு நடப்பட்ட கல்லை வணங்கினர் என்னும் இச்செய்தியானது, பெண் சமூகத்தின் தலைமையிடத்தில் இருந்து

தூக்கியெறியப்பட்டு அடிமைப்படுகுழியில் ஆழ்த்தப்பட்டதையும் ஆணாதிக்கம் மேலோங்கிவிட்ட நிலையையும் தெளிவாக உணர்த்துகிறது.

நடுகல்லை நாள்தோறும் வணங்கினால் விருந்தினர் எதிர்ப்படுவர் என்றும் போரில் கணவனுக்கும் அரசனுக்கும் வெற்றி கிட்டும் என்றும் பெண்களிடையே மூடநம்பிக்கைகள் பரப்பப்பட்டதனையும் மேற்குறித்த பாடலடிகள் நமக்குக் கூறுகின்றன.

நடுகற்களைத் தவறாது வணங்கினால் மழை மிகுதியாகப் பெய்யும் வறட்சி நீங்கும், வளம் ஓங்கும், மகிழ்ச்சி வெள்ளம் பெருகும் என்ற நம்பிக்கையும் மக்களிடையே பரப்பப்பட்டது. பெண்கள் மட்டுமல்லாது, சமுதாயத்தின் அடிமட்டத்தில் வாழ்ந்தவர்கள் செல்வர்களான புரவலர்களை அண்டியிருந்து அவர்களின் தயவில் வாழ்ந்த இரவலர்களான பாணர்களும்கூட, வீரர்களின் நடுகற்களைக் கண்டு வணங்கிச் செல்லுமாறு வற்புறுத்தப்பட்ட நிகழ்வுகளையும் சங்க இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றன.

**“ பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண்**
**இரும்பறை யிரவல! சேறியாயின்**
**தொழாதனை கழித லோம்புமதி வழாது**
**வண்டு மேம் படூஉ மிவ் வற நிலையாறே**
**..................................................................**
**....................................................................**
**வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்**
**கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே”**[33]

என்று பாணர்கள் நடுகல்லை வணங்கிச் செல்லுமாறு வற்புறுத்தப்பட்டதைப் புறநானூறு கூறுகிறது.

நடுகல்லைத் தொழுது செல்க என்று மட்டும் கூறாது, தொழாதனை கழிதலோம்புமதி என்று கூறுதல், கல்லைத் தொழுது செல்லுமாறு பாணனைக் கட்டாயப்படுத்தும் செயலேயாகும் என்பது மிகையன்று.

வழிச்செல்லும் பாணர்கள் வழியிடைக்காணும் நடுகற்களை வணங்கி யாழை வாசித்து செல்லுமாறு வற்புறுத்தப்பட்ட செய்தியை மலைபடுகடாம் வரிகள் கூறுகின்றன.

**" ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்தார்த்தென**
**நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்**
**கல்லேசு கவலை யெண்ணு மிகப் பலவே**
**இன்புறு முரற்கை நும் பாட்டு விருப்பாகத்**
**தொன்றொழுகு மரபினும் மருப்பிகுத்தினைமின்"**[34]

என்று பாணர்கள் நடுகல்லைக் கண்டு வணங்கிச் செல்லுமாறு கூறப்பட்டனர்.

இந்நிகழ்வுகள் தனியுடைமைச் சிந்தனையும் ஆணாதிக்கமும் தலைதூக்கியதால் சமூகத்தில் பெண்களும் அடித்தட்டு மக்களும் அடிமை நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டதைத் தெளிவாக உணர்த்துகின்றன. ஆண்டைகளான ஆண்கள் உயிருடன் இருக்கும்போது மட்டுமல்ல,இறந்த பின்னும் அவர்களுக்குப் பெண்களும் அடித்தட்டு மக்களும் அடங்கி நடக்க வேண்டும், பணிந்து போக வேண்டும் என்ற ஆணை மேல்தட்டு வர்க்கத்தவரின் ஆதிக்க மனப்பான்மையையும் அதிகார மமதையையும் வெளிப்படையாக உணர்த்துகின்றன எனல் மிகையன்று.

இங்கு கடவுளாக்கிக் காட்டப்பட்டது கல் அல்ல, கல் ஒரு அடையாளம் மட்டுமே. ஆண்டைகளும் அதிகார வர்க்கத்தாரும்தான்

கடவுளாக்கப்பட்டுள்ளனர். உயிருடன் இருந்த போது ஆண்டையாக இருந்தவன் இறந்த பின்பு ஆண்டவனாக்கப்பட்டான். இச்செயல், இறந்த பின்பும் ஆண்டைகளை நினைத்து வணங்கினால் நன்மைகள் உண்டாகும் என்று மக்களை நம்பச் செய்யும் சூழ்ச்சியே ஆகும். கல்லை மக்கள் தொடர்ந்து வணங்கி வழிபட வேண்டுமானால், அதற்கு ஒரு சிறப்புத் தன்மையைக் கற்பித்துக் கூற வேண்டும். மேன்மைப்படுத்திக் காட்ட வேண்டும். அவ்வாறு கற்பித்துக் காட்டும் முயற்சியே அது வரம் கொடுக்கும், வாழ்வு கொடுக்கும், நன்மை விளைவிக்கும் என்று கூறப்பட்டதாகும்.

தெய்வம் தன்னை வணங்குவார்க்கு என்னென்ன வரங்களைக் கொடுக்கும் என்பதனை ஆழ்வார்கள் முதல் அபிராமி பட்டர்வரை பட்டியலிட்டுக் கூறியுள்ளார்கள். அவர்களுக்கு முன்னதாகவே, நடுகல்லைப் புகழ்வாரது செயல் அமைந்துள்ளது என்பது மிகையன்று. அரசர்களைத் தெய்வமாக்கிக் காட்ட வேண்டும் என்ற அவர்களது ஆணவ முயற்சி கவனிக்கத்தக்கது.

**வேளாண் சடங்குகளும் வளச் சடங்குகளும்**

பிறப்பு முதல் இறப்பு வரையில் வாழ்வின் எல்லா நிகழ்வுகளும் சடங்குடன் பின்னிப் பிணைந்துள்ளன. வாழ்வின் அடிப்படைத் தேவையான உணவைத் தரும் வேளாண்மையுடன் சடங்கும் சடங்குடன் வேளாண் விளைபொருட்களும் இணைந்துள்ளன.

பண்டைய சமுதாயங்கள் தொட்டு இன்றைய சமுதாயம் வரையில் தமிழர் வாழ்வில் சடங்குகளுக்கு மிக முக்கிய இடம் இருந்து வருகின்றது. இந்தச் சடங்குகளில் வேளாண்மை தொடர்பான சடங்குகளும் அடங்கும் போலச் செய்தல் என்ற அடிப்படையில் இயற்கையைக் கட்டுப்படுத்தலாம் என்ற நம்பிக்கையின் அடியாக இந்தச்

சடங்குகள் எழுந்தன. வாழ்க்கைக்கு ஆதாரமான பொருட்களை வாழ்வின் முக்கிய நிகழ்வுகளில் பயன்படுத்துதல் என்பதே வளச்சடங்கு.

> **"உணவு சேகரிக்கும் காலம், வேட்டைக்காலம், வேட்டையும் புராதன விவசாயமும் செய்த காலம், கால்நடை வளர்ப்பு ஆகிய காலங்களில் இனக்குழுமக்கள் வாழ்க்கையில் மந்திரத்திற்குப் பெரும்பங்கிருந்தது. அவ்வினக்குழு மக்களின் பொருளாதார வாழ்க்கையை ஊக்குவிப்பதற்கு மந்திரமே பயன்பட்டது."**[35]

என்று வளச்சடங்கின் அவசியத்தை அறிஞர் கூறுவர்.

மழைவளமும் நீர் வளமும் வேண்டிச் செய்யப்பட்ட சடங்குகளையும் வேளாண் விளைபொருட்களை வழிபாட்டில் பயன்படுத்திய வளமைச் சடங்குகளையும் சங்க இலக்கியங்களில் ஓரளவு காணமுடிகின்றது.

**மழைச்சடங்கு**

வேண்டிய நேரங்களில் மழை பெய்யச் செய்வது, போதுமான சூழலில் மழையை நிறுத்தச் செய்வது இச்சடங்கின் அடிப்படை நோக்கமாகும். இச்சடங்கு பெரும்பாலும் குறிஞ்சித் திணையில்தான் நடைபெற்றது.

> **" மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்**
> **மாரி யான்று மழைமேக் குயர்கெனக்**
> **கடவுட் பேணிய குறவர் மாக்கள்**
> **பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்**
> **புனைத்தினை யயிலு நாட"**[36]

மலையில் மழை வந்து சூழ வேண்டும் என்று மிகுதியான பலியைத்தூவி வழிபட்ட நிலையில் மழை பெய்ததையும், மழை

மிகுதியானதும் மழை நின்று மேகங்கள் மேலே போவதாக எனக் கடவுளை வேண்டியவுடன் மழை நின்றுவிட்டதைக் கண்டு குறவர் மகிழ்ந்ததையும் புறநானூற்றுப் பாடல் காட்டுகிறது. இதைப் போல் மழை வேண்டும் ஒரு பாடல் நற்றிணையிலும் உள்ளது.

**" குன்றக் குறவ னார்ப்பி னெழிலி**

**நுண்ப லழிதுளி பொழியும் நாட"[37]**

எனும் ஐங்குறுநூற்றுப் பாடலிலும் மழை வேண்டிய வளச்சடங்கு பாடப்பட்டுள்ளது. குறவன் மழை வேண்டிக் கடவுளை வழிபட்டு ஆரவாரித்தபோது மேகம் மழை பொழிந்த செய்தி இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

> **"மந்திரம் என்பது யதார்த்தத்தைக் கட்டுப்படுத்துவது போன்ற பிரமையை உண்டாக்குவதாகும். மழை வேண்டுமானால் மேகம் திரள்வது போலவும் இடி இடிப்பது போலவும் துளி விழுவது போலவும் பாவனை செய்வார். தாம் விரும்பிய யதார்த்தத்தை நாடக பாணியில் நிறைவேற்றுவர். 'பெய்' எனக் கட்டளை கொடுப்பர். இது கூட்டுக் கட்டளை. இப்படிப்பட்ட கூட்டுச் செயல் நடக்க இயற்கைக்குக் கட்டுப்பட்டிருந்த கூட்டுச் சமூகம் இருந்திருக்க வேண்டும்"[38]**

என்கிறார் அறிஞர்.

இவை எல்லாமே நீர் ஆதாரப் பெருக்கச் செயற்பாடுகள் நடைபெறாத குறிஞ்சியில், புன்செய் வேளாண் சமுதாயத்தில் செய்யப்பட்ட சடங்குகளாகவே உள்ளன. நன்செய் வேளாண்மை நடைபெற்ற மருத நிலத்தில் நீர் வள ஆதாரப் பெருக்கம், நீர்நிலைப் பெருக்கம், நீரைத்தடுத்துத் தேக்கி வைத்தல் போன்ற செயற்பாடுகள் நடைபெற்றாலும் மருதநிலச் சமுதாயங்களில் இவ்வகைச் சடங்குகள்

நடைபெற்றமைக்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் இல்லை. மருத வேளாண் சமுதாயம் இயற்கையைத் தம் கட்டுப்பாட்டுக்குள் கொணர்ந்த சமுதாயமாக வளர்ந்ததே இதற்குக் காரணம்.

**சடங்குகளில் வேளாண் விளைபொருட்கள்**

ஒவ்வொரு திணைநிலைச் சமுதாயத்திற்கும் ஒரு அடிப்படையான உணவுப் பொருள் உண்டு. தினை குறிஞ்சியிலும் வரகு முல்லையிலும், நெல் மருதத்திலும் இந்த அடிப்படை உணவுப் பொருட்கள். அந்தந்த நிலத்தின் வளக்குறியீடுகளாகக் கருதப்பட்டுள்ளன. 'மென் தினை யாணர்த்து வருந்தாயாணர்த்து' எனத் தினை புது வருவாயாகக் காட்டப்பட்டுள்ளது. இத்தினையானது சடங்குச் சூழல்களில் இடம் பெற்றுள்ளது.

**" மறிக்குரல் அறுத்து தினைப்பிரப் பிரீஇச்**
**செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்**
**தோற்ற மல்லது நோய்க்கு மருந் தாகா**
**வேற்றுப் பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்தி**
**பேஎய்க் கொளீஇயன் இவளெனப் படுதல்**
**நோதக் கன்றே"[38]**

எனும் இப்பாடல் வெறியாட்டில் தினை இடம்பெற்றதைக் காட்டுகிறது. முருகாற்றுப்படையில் தினையை இரத்தத்துடன் கலந்து தூவி வழிபட்ட நிலை காட்டப்பட்டுள்ளது. ஆட்டின் இரத்தம் உயிர்ச்சக்தியின் அறிகுறி என்பதும் இரத்தத்தில் விதை நனைக்கப்பட்டால் நன்கு வளரும் என்பதும் அக்கால நம்பிக்கையாகும்.

இதைப் போலவே நெல்லும் சமுதாய வழிபாடுகளில் வளக் குறியீடாக இடம்பெற்றுள்ளது எனலாம்.

**"நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலவே"**[39]

எனும் புன்செய் வேளாண் சமுதாயக்குரல் மருதநிலச் சமுதாயத்தில் நெல் வழிபாட்டில் இடம் பெற்றதைக் காட்டுகிறது.

**" நெல்லு மலருந் தூஉய்க்கை தொழுது**
**மல்ல லாவண மாலை யயர"**[40]

என்னும் பாடல் மகளிர் நெல்லையும் மலரையும் தூவி இல்லுறை தெய்வத்தை வழிபட்டதை நெடுநல்வாடை காட்டுகிறது.

**" நெல்னீ ரெறித்து விரிச்சி யோர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா**
**துடிய பாண பாடுவல் விறலி**
**என்ஆ குவிர்கொ லளியிர் நுமக்கும்**
**இவணுறை வாழ்க்கையோ வரிதே"**[41]

எனும் இப்பாடல் சீறூர்மன்னர் சமுதாயம் புன்செய்நிலச் சமுதாயம் பற்றியது. இப்புன்செய் சமுதாயத்திற்கு வேந்துவிடுதொழில் நெல்லை அறிமுகப்படுத்துகிறது. இந்நிலையில் நெல்லும் நெல்லின் விளைவுக்குக் காரணமான நீரும் வழிபாட்டில் பயன்படுத்தப்படுகின்றது. இங்கு இரண்டுமே வளக்குறியீட்டின் அறிகுறிகளாய்ப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**" செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇ**
**கட்டிற் கேட்கு மாயின் வெற்பின்**
**......................................................**
**நெடுவே ளணங்கிற் றென்னுங் கொ லதுவே"**[42]

இதுவும் ஒரு குறிஞ்சித்திணைப் பாடல். இது கட்டுரைத்தலில் நெல் பயன்படுத்தப்பட்ட நிலையைக் காட்டுகிறது.

மருத நிலச் சமுதாயத்தில் வளத்தின் அறிகுறியாக நெல் மணச்சடங்கில் பயன்படுத்தப்பட்டதையும் வளச்சடங்கின் சான்றாய்க் காட்டலாம்.

" வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரித ழலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றை"[43]

எனும் இப்பாடலில் நீரும் நெல்லும் பயன்படுத்தப்பட்ட நிலை வாழ்வின் செழுமைக்கு இவை உதவ வேண்டும் என்ற வளமை நோக்கத்தையே வெளிப்படுத்துகிறது.

## அருவ உருவ வழிபாடு

அக்காலத்தில் பெருங்கோயில்கள் இல்லை. சிறு கோயில்களே சிறப்புற்று விளங்கின. அக்கால மக்கள் தெய்வம் எங்கும் நிறைந்திருப்பதாக எண்ணினர். எனவே அவர்கள் இயற்கை வளம் சூழ்ந்த எழில் நிறைந்த இடங்களில் எல்லாம் தெய்வத்தை வணங்கி வழிபட்டனர் அன்று. அருவ வழிபாடும் இருந்தது, உருவ வழிபாடும் இருந்தது.

தமிழர்கள் முருகனைக் காட்டில் வைத்து வணங்கினர். சோலைகளில் அமைத்துத் தொழுதனர். ஆற்றங்கரைகளிலும் குளத்தங்கரைகளிலும் முருகனைப் பூசித்து வழிபட்டனர். முச்சந்தி, நாற்சந்தி மற்றும் பல சந்திகளில் முருகனை வைத்து வணங்கினர். மரத்தடியிலும் அம்பலத்திலும் அவனை வணங்கிப் போற்றினர் என்பதனை,

" காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல வைப்பும்
சதுக்கவும் சந்தியும் புதப் பூங்கடம்பும்

மன்றமும் பொதியினும் கந்துடை நிலையிலும்”[44]

என்ற பாடல் அடிகளால் அறியலாம்.

சங்க நூல்களில் உருவ வழிபாடு காணப்பெறுகிறது. அது தமிழர்களின் தொன்மையிலிருந்து தோன்றிய வழக்கம் என்பர். வீரர்களுக்கு எடுக்கும் நடுகல் வழிபாட்டைத் தொடர்ந்து கடவுளர்க்கும் கற்சிலைகள் செய்து வைத்து வணங்கினர்.

பண்டைத் தமிழர் முருகனை ஆறுமுகங்கொண்டும், பன்னிருக்கைக் கொண்டும், உருவமாகப் படைத்தும் வணங்கினர். இவ்வழக்கத்தை அதிகமாகத் திருமுருகாற்றுப்படையில் காணலாம்.

குன்றுதோறாடலில் குறிஞ்சி நிலத்துக்குரிய முருகப் பெருமானைக் குறவர்கள் ஆடியும் பாடியும் வழிபாடு செய்யும் திறம் விளக்கப்படுகிறது.

முருகாற்றுப்படையின் இறுதிப் பகுதியாகிய பழமுதிர்ச் சோலைப் பகுதியில் முருகப் பெருமானை வணங்கும் முறையும் அவனிடம் சென்று அருள் பெறும் வழியும், தொண்டர்களின் நல்லியல்பும், அருவியின் இயல்பும் சித்தரிக்கப்படுகின்றது. முருகனின் பாடலை நாள்தோறும் ஓதி வந்தால் மனக்கவலை நீங்கி நினைத்த தெல்லாம் எய்தலாம் என்பது சைவ சமயத்தவரின் நம்பிக்கையாகும். இவ்வாறு முருக வழிபாடு என்பது சிறப்பாக போற்றப்பட்டு வந்திருக்கிறது.

### உயிர்ப்பலி வழிபாட்டுமுறை

பண்டைத் தமிழர்கள் தெய்வங்களுக்கு உயிர்ப்பலி கொடுத்து வணங்கினர். ஆடவர்கள் மலர்களைத் தூவியும் வணங்கினர். குருதி கலந்த அரிசியைப் படைத்தும் வணங்கினர்.

சிறிய தினை அரிசியை மலரோடு கலந்து சிறப்புச் செய்தனர் என்பதை,

**" சிறுதினை மலரொடு விரைஇ மறி யறுத்து**
**வாரணக் கொடிய வயிற்பட நிறீஇ**
**ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்"[45]**

என்ற அடிகளால் அறியலாம்.

மிகுந்த வலிமை பொருந்திய கால்களையுடைய கொழுத்த ஆட்டுக்கடாவை வெட்டினர். அதன் குருதியில் நுண்ணிய வெண்மையான அரிசியைக் கலந்தனர். அவற்றைப் பலியுணவாக பிரப்பங் கூடைகளில் வைத்து முருகனை வழிபட்டனர் என்பதை,

**" மத வலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்**
**குருதிபெயடு விரைஇய தூரிசிவெள்**
**சில் பலிச்செய்து பில்பிரப்பு இரீஇச்"[46]**

என்னும் அடிகள் விளக்குகின்றன. எனவே முருகனின் வழிபாட்டிற்கு உயிர்ப்பலி இட்டுள்ள செய்தியை இதனால் அறியலாம்.

பிற வழிபாடுகள்

விறலியர் மலைவாழ் தெய்வகளைப் பணிந்து குறிஞ்சிப் பண்ணில் பல பாக்களைப் பாடுதல் மரபு. அவர்கள் முதலில் கடவுளை வாழ்த்திப் பாடினார்கள், பின்னரே பல பாடல்களைப் பாடினார்கள். தவிர மலையில் கடவுளுக்கான கோவில் இருந்ததையும், கூத்தர் அக்கடவுளை வணங்கிச் சென்றனர் என்பதையும்,

**" ஓர்யாற்று இயவின் மூத்த புரிசைப்**
**பராவு அரு மரபின் கடவுட் காணின்**
**தொழாநிர் கழியின் அல்லது, வறிது**
**நும்இயம் தொடுதல் ஓம்புமின் மயங்கு துளி"[47]**

என்ற பாடல் அடிகளால் அறியப்படுகிறது.

போரில் தன்னால் இயன்ற வரையில் சிறப்புறப் போர் புரிந்து உயிர்விட்ட வீரனது உடலைப் புதைத்த அல்லது எரித்த இடத்தில் ஒரு கல்லை நடுவர். அக்கல்லின் மேல் அவனது உருவத்தையும் பெயரையும், இன்ன போரில் இவ்வாறு போர் புரிந்து மாண்டான் என்ற செய்தியையும் பொறிப்பர். அக்கல் ‘நடுகல்’ எனப்படும். வீரர் சிறப்பாகவும் பிறர் பொதுவாகவும் நடுகல்லை வழிபடுவர் இத்தகைய நடுகற்களை வழிபட்ட வீர வணக்கங்கள் தமிழர்க்கு வீரத்தையும் நாட்டுப்பற்றையும் ஊட்டி வந்தது எனலாம்.

நன்னனுடைய மலைகளின் மீது இத்தகைய நடுகற்கள் இருந்தன. அவற்றுள் சில மராமரத்தடியில் இருந்தன. அவ்வழியிற் சென்ற கூத்தர், யாழ் வாசித்து நடுகல் வீரர்களை வழிபட்டுச் சென்றனர் என்பதை,

**“ ஒன்னார்த் தெவ்வர் உவைல இடத்து ஆர்த்தென**
**நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்**
**செல்லா இல்இசைப் பெயரொடு நட்ட”[48]**

என்ற அடிகளால் அறியலாம். இதன் மூலம் அக்காலத்தில் நடுகல் வழிபாட்டு முறை இருந்துள்ளது என்பது விளங்குகிறது. மேலும், ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர், பதினெண்கணங்கள், கந்தருவர், சூர மகளிர் ஆகியோரைப் பற்றியும் தமிழர் அறிந்திருந்தனர் என்பதனை,

**“ நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு**
**ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்”[49]**

என்ற முருகாற்றுப் படை அடிகளால் அறியலாம்.

தவம் செய்யும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது என்பதை,

**" தவம் செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது**
**அதன்பயம் எய்திய அளவை மான"[50]**

என்ற பாடல் வரிகள் கூறுகிறது.

முருகன் பிறப்பு, முருகன் சூரனைக் கொன்றமை, முருகன் கிரவுஞ்ச மலையைப் பிளந்தமை, திருமால் மூன்றடி மண் கேட்டு உலகளந்தமை, திருமால் அசுரரை வென்றமை, நல்லியக்கோடன் வேண்ட முருகன் ஒரு கிணற்றில் இருந்த மலரை வேலாக மாற்றித் தந்தமை போன்ற சமயம் தொடர்பான கதைகள் ஆற்றுப்படைகளிலும், பல புராணச் செய்திகள், தெய்வ வழிபாட்டு முறைகள் முதலானவை சங்கப் பாடல்களில் பதிவாகியுள்ளமையை அறியமுடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. பதிற்றுப்பத்து. பா.எ.21 வரி 5
2. புறம்., பா.எ.143 பா.வ.ள். 1-4
3. பதிற்றுப்பத்து, பா.எ.13, பா.வ.ள்.20-22
4. குறிஞ்சிப்பாட்டு, பா.வரி 255
5. நற்றிணை, பா.எ.201 பா.வ.ள். 10-11
6. பதிற்றுப்பத்து, பா.எ.71, பா.வ.ள்.23-24
7. முருகாற்றுப்படை, பா.வ.ள். 225-226
8. தொல்.பொருள்.அகம்.நூ.எ.5
9. திருமுருகாற்றுப்படை, பா.வரி 109
10. கலித்தொகை பா.எ.105, வரி 17
11. சங்கத்தமிழர் வாழ்வியல், மு.சண்முகம்பிள்ளை
12. தொல்.பொருள்.அகம், நூ.எ.5
13. பரிபாடல் பா.எ.19, பா.வ.ள்.50-53
14. தொல்.பொருள்.அகம். நூ.5
15. அகம்., பா.எ.110 பா.வ.ள். 4-5
16. கலித்தொகை பா.எ.131 வரி 8
17. திருமுருகாற்றுப்படை, பா.வரி 258
18. மேலது., பா.வரி.259
19. கலித்தொகை, பா.எ.89 வ.8
20. பதிற்றுப்பத்து, பா.எ.88, பா.வ.ள்.24-25
21. மேலது., பா.எ.88, வ.2
22. திருமுருகாற்றுப்படை, பா.வ.ள். 161-162
23. அகம்., பா.எ. 360 பா.வ.ள். 6-7
24. மதுரைக்காஞ்சி, பா.வ.ள். 453-458
25. கலித்தொகை பா.எ.8, பா.வரி.11
26. திருமுருகாற்றுப்படை, பா.வ.ள். 153-154
27. புறம்., பா.எ.335 பா.வ.ள். 11-12

28. மேலது., பா.எ.329 பா.வ.ள். 1-4
29. மேலது., பா.எ.232 பா.வரி 3
30. மேலது., பா.எ.265 பா.வ.ள். 1-5
31. மேலது., பா.எ.264 பா.வ.ள். 1-5
32. மேலது பா.எ.306 பா.வ.ள். 3-7
33. மேலது., பா.எ.269 பா.வ.ள். 5-12
34. மலைப்படுகடாம் பா.வரி 391
35. மாதையன்.பெ. சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப.94
36. புறம்., பா.எ.143 பா.வ.ள். 1-5
37. ஐங்குறுநூறு பா.எ.251 பா.வ.ள். 1-2
38. குறுந்தொகை பா.எ.263 பா.வ.ள். 1-6
39. புறம்., பா.எ.335 பா.வரி 12
40. நெல்நல்வாடை, பா.வ.ள். 43-44
41. புறம்., பா.எ.280 பா.வரி 6
42. நற்றிணை பா.எ.288 பா.வ.ள். 6-10
43. அகம்.,பா.எ.86 பா.வ.ள். 12-17
44. திருமுருகாற்றுப்படை, பா.வ.ள். 223-226
45. மேலது., பா.வ.ள். 218-220
46. மேலது., பா.வ.ள். 232-234
47. மலைப்படுகடாம், பா.வ.ள். 229-232
48. மேலது., பா.வ.ள். 386-388
49. திருமுருகாற்றுப்படை, பா.வ.ள். 167-168
50. பொருநராற்றுப்படை, பா.வ.ள். 91-92

# இயல் -5

# சங்க இலக்கியங்களில் பண்பாட்டு நிலைக்களன்கள்

தமிழ்ப் பண்பாட்டிலும் சங்க இலக்கிய மரபிலும் ஐந்திணைப் பாகுபாடு என்பது இன்றியமையாத கருத்தாக்கமாகும். திணை என்பது முதல், கரு, உரி ஆகிய மூன்றின் உறவுகளால் கட்டமைக்கப்படும் ஒழுங்கமைவு ஆகும். மனித நடத்தை முறைகளும் அவனது வாழ்வியல் தோரணிகளும் அவன் வாழும் சூழலும் இதனுள் அடங்கும். இது எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாக அமையவில்லை என்பதே ஐந்திணைப் பாகுபாட்டின் அடிப்படையாகும். எனவே ஒவ்வொரு திணையும் தனித் தன்மையானது எனப் பொருள் கொள்ள வேண்டும் திணையின் அடிப்படையான மூன்று கூறுகளும் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபட்டது. இருப்பினும் ஒன்றை ஒன்று மேவி வருவதும் உண்டு. இது 'திணை மயக்கம்' எனத் தொல்காப்பியரால் வரையறுக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். 'திணை' என்பதைப் பண்பாடு சார்ந்த வகைமையாகக் கொள்ளும் போது ஒவ்வொரு திணையும் வெவ்வேறு பண்பாட்டு மரபுகளை அடையாளப் படுத்துகிறது எனக் கொள்ளலாம். இவ்வடிப்படையில் குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம், பாலை ஆகிய ஐந்து திணைகள் எவ்வாறு ஒரு பண்பாட்டு நிலைக்களனாக அமைகின்றது என்பதை விளக்க இவ்வியல் முயல்கிறது.

## நிலவியல் அமைப்பு

ஒரு குறிப்பிட்ட பண்பாட்டு வெளியை உள்ளடக்கிய பகுதியே பண்பாட்டு நிலைக்களன் ஆகும். இப்பண்பாட்டு வெளியில் ஒன்றுக்கு

மேற்பட்ட குழுக்கள் வாழலாம். அக்குழுக்கள் வாழும் சுற்றுச்சூழலும் அவர்கள் தங்களது வாழ்வியல் தேவைகளுக்காகப் புழங்கும் வெளியையும் உள்ளடக்கியதே பண்பாட்டு நிலைக்களனாகும். இப்பண்பாட்டு நிலைக்களன் சில குறிப்பிட்ட தனித்தன்மையான கூறுகளால் அடையாளப்படுத்தப்படும். குறிஞ்சித்திணை மலையும் மலை சார்ந்த பகுதியாகவும், முல்லைத் திணை காடும் காடு சார்ந்த பகுதியாகவும், மருதத்திணை வயலும் வயல் சார்ந்த பகுதியாகவும், நெய்தல் திணை கடலும் கடல் சார்ந்த பகுதியாகவும், பாலைத் திணை வறண்ட பாழ் நிலமாகவும் அடையாளப்படுத்தப்படுகிறது. இந்நிலைகளில் வாழும் மக்கள் புழங்கும் வெளியே இந்நிலங்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் புழங்கும் வெளிகுறித்த கருத்தமைவுகளும், உலக நோக்கும், அறிதல் சார் அறிவும் அவ்வெளியோடு அவர்கள் கொள்ளும் தொடர்களும் பண்பாட்டு நிலைக்களன் என்னும் தனித்தன்மையான அடையாளத்தை உருவாக்குகிறது. திணை என்ற கருத்தாக்கமும் பண்பாட்டு நிலைக்களன் என்ற கருத்தாக்கமும் ஒன்று போல் தோற்றமளித்தாலும் இவை இரண்டிற்குமிடையில் நுட்பமான வேறுபாடுகள் உள்ளன என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். திணை என்பது ஒரு பண்பாட்டின் புறவயமான வெளிப்பாடுகளைப் பின்புலமாகக் கொண்டு ஒழுக்கத்தின் வழி அடையாளப்படுத்துகிறது. முதல், கரு குறித்த குறிப்புகள் எதுவும் இல்லாத சில பாடல்கள் உரிப்பொருள் அடிப்படையில் அதற்குரிய திணையை அடையாளப் படுத்துவதை இதற்குச் சான்றாகச் சுட்டலாம். ஆனால் பண்பாட்டு நிலைக்களன் அவ்வாறு அல்லாமல் அகவயமான வெளிப்பாடுகளை முதன்மையாகக் கொண்டு புறவயச் சூழல்களை விளக்கும். மலை, காடு, வயல், பாலை, கடல் சார்ந்த நிலம் எனத் திணை நிலவியல் எல்லைகளை வரையறுத்து அதனைச் சார்ந்த பண்பாட்டு மரபுகளை விளக்க முயல்கின்றது. ஒரே மாதிரியான தன்மையைக் கொண்ட நிலவியல் எல்லையில் ஒரே மாதிரியான பண்பாட்டு மரபு அமையும் என்னும்

கருத்தைத் திணை அமைப்பு முன் வைக்கின்றது. ஒரு பண்பாட்டு நிலைக்களனின் நிலவியல் அமைப்பு என்பது அவ்வாறு அமைய இயலாது. ஒரு பண்பாட்டு நிலைக்களனின் நிலவியல் அமைப்பு என்பது ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. ஆனால் ஒத்த அகவய வெளிப்பாடுகள் அமைதல் வேண்டும். ஒரே மாதிரியான பண்பாட்டு மரபுகளைக் கொண்ட வெளியில் ஒத்த அகவய வெளிப்பாடுகளே அமைய இயலும்.நிலவியல் அமைப்பைக் கொண்டு இதனை வரையறுக்க இயலாது. எனவே அகவய வெளிப்பாடுகளை இனங்காண்பதும் அவற்றிற்கிடையிலான உறவுகளை விளக்குவதும் பண்பாட்டு நிலைக்களனைப் புரிந்து கொள்ளவும் வரையறுக்கவும் பெரிதும் துணை செய்யும் என்னும் இவ்வடிப்படையில் ஐந்திணைப் பாடல்களை அணுகலாம்.

**ஐந்திணை வரிசைப்படுத்துதல்**

சங்க அகப் பாடல்களைச் சமூக பண்பாட்டியல் நோக்கில் ஆராய்வதாக இவ்வியல் அமையும். சமூகப் பண்பாட்டியல் என்பது ஈண்டுச் சமுதாயப் பரிணாம வளர்ச்சியைக் குறிப்பது. சங்க அகப்பாடல்கள் அனைத்தும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை எனும் ஐந்து திணைகளுள் அடங்கும் என்பது தொல்காப்பியர் வகுத்தளித்த திணை முறையாகும். இந்த ஐந்து திணைகளையும் தொல்காப்பியர்,

**“ முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்**
**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே”**[1]

என வரிசைப்படுத்தியுள்ளார். இவ்வமைப்பு முறை பற்றி நச்சினார்க்கினார்க்கினியர் தரும் விளக்கம் ஈண்டுச் சுட்டற்பாலது.

‘முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற முறையென்ன எனின் இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்க மாதலின் கற்பொடு

பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கையாதலின் முல்லை முற்கூறப்பட்டது. புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியை அதன்பின் வைத்தார். புணர்ச்சிக்குப் பின் ஊடல் நிகழ்தலின் அதன்பின் மருதத்தை வைத்தார். பரத்தையிற் பிரிவு போலப் பிரிவு ஒப்புமை நோக்கி நெய்தலை ஈற்றின்கண் வைத்தார்' நச்சினார்க்கினியர்.

இதே வைப்பு முறைக்குப் புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனத் தொல்காப்பியர் உரிப்பொருளை வரிசைப்படுத்தும் போது வேறு வகையான விளக்கத்தைத் தந்துள்ளார். மேலும் தொல்காப்பியர் புறத் திணையியலில் அகத்திற்குப் புறமான புறத்திணைகளை வரிசைப்படுத்தும் போது 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' – எனக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று வரிசைப்படுத்தியுள்ளார்.

"சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என்ற நூற்பா வடியால் குறிஞ்சி மருதம் நெய்தல் என்று தொல்காப்பியர் சொன்ன வரிசையிற் கூற வேண்டும் என்பதில்லை, மாற்றியும் கூறலாம். இம்முறைமாற்றத்தைச் சான்றோர் செய்யுட் கோவையிலும் பிற நூலகத்தும் கண்டு கொள்க என்று இளம்பூரணரும் 'தொகைகளிலும் கீழ்க்கணக்கு நூல்களிலும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க' என்று நச்சினார்க்கினியரும் மேல் விளக்கம் அளித்துள்ளமையை மனத்துள் கொள்ளுதல் வேண்டும்.

தொல்காப்பியர் கூறிய வரிசை முறையையும் உரையாசிரியர்கள் தந்த விளக்கங்களையும் அடியொற்றி வ.சுப.மாணிக்கம் இரு கருத்துக்களை முன் மொழிவர். அவையாவன,

1. திணைகள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்று குறியீடு பெறுதல்
2. திணைகள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்று வரிசை பெறுதல்

இவற்றுள் திணைகள் குறியீடு பெறுதலை வ.சுப.மாணிக்கம் உடன்படுவர்.

உரையாசிரியர்களும் பிற்காலத் திறனாய்வாளர்களும் தொல்காப்பியர் சொன்ன கருத்துக்களையும் முறைகளையும் நோக்கிய அளவிற்குத் தொல்காப்பியர்க்கு முன்னோரால் சொல்லப்பட்ட கருத்துக்களையும் முறைகளையும் நோக்கவில்லை என்றே எண்ணத் தோன்றுகிறது. தொல்காப்பியர் முதனூல் ஆசிரியர் அல்லர். அனைத்தையும் முதன்மையாகப் படைத்தாரும் அல்லர் அவர்க்கு முன்னர் இருந்த இலக்கணச் சிந்தனையாளர்களும் அறிஞர்களும் தொல்காப்பியருக்கு எந்த முறையில் பொருளதிகாரத்தை அறிமுகப்படுத்தி இருந்தனர் என்பதை அறிவதன் வழி அகத்திணைகளையும் சங்க அகப்பாடல்களையும் புரிந்து கொள்ள முடியும். இவ்வாறான ஒரு கருத்தை முன் வைப்பதும் ஒரு கருத்துப்போக்கை வளர்த்தெடுப்பதும் சங்க அகப்பாடல் ஆராய்ச்சிக்குப் பிறிதொரு அடித்தளத்தை அமைக்க இயலும்.

தொல்காப்பியத்தில் கூறப்பெற்றுள்ள கருத்துகள் அல்லது சங்க இலக்கியப் பாடுபொருள்களாகிய உரிப்பொருள்கள் பற்றி இரண்டு கருத்துக்களை இங்குச் சுட்டுதல் வேண்டும்.

1. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை பற்றிய பாடல்கள் சங்க காலத்தில் வழக்கில் இருந்தன என்பதில் கருத்து

வேற்றுமைகள் இருக்க முடியாது. சங்க கால எல்லையில் அவை பாடப் பெற்றதும் அவை இலக்கியக் கொள்கையாக உருப்பெற்றிருந்ததும் உண்மையே.

2. ஆனால் இத்திணைப்பாடல்கள் யாவும் ஒரே சமூக அமைப்பில் தோற்றங்கொண்டனவா என்ற வினா விரிவான ஆராய்ச்சிக்குரியது. ஒரு சமூக அமைப்பில் பாடப்பெற்றமை வேறு; வேறு வேறு சமூக அமைப்பில் அப்பாடல்களின் கரு தோற்றம் பெற்றன என்பது வேறு.

தொல்காப்பியர் தம் காலத்திற்கு முந்தைய இலக்கண இலக்கிய வழக்காறுகளை அடிப்படையாகக் கொண்டே தம் இலக்கண நூலைப்படைத்துள்ளார் என்பதில் கருத்து வேற்றுமை இருக்க முடியாது. தொல்காப்பியர் காலத்திற்கு முந்தைய வழக்காறுகள் எவை என்பதைத் திட்டவட்டமாக வரையறுக்கப் போதுமான சான்றுகள் இல்லை என்றாலும் தொல்காப்பியர்க்கு முன்பு பன்னெடுங் கால நீட்சிமையில் இலக்கண இலக்கியச் சிந்தனை மரபு உருப்பெற்றுப் பரிணமித்திருக்க வேண்டும் எனும் கருத்துச் சமூகவியல் பார்வையில் சரியானதாகும்.

இச்சிந்தனை மரபிலிருந்து தொல்காப்பியர் எவற்றைப் பெற்றார் எவற்றைச் சேர்த்தார் என்பன விடையறியா வினாக்களாகும் என்றாலும் ஒருசில சான்றுகள் இச்சிந்தனைப் பரிணாம வளர்ச்சியை வெளிப்படுத்தி உள்ளன. தொல்காப்பியரின்,

**“ முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே”[2]**

எனும் வரிசைஅமைப்பை எளிதில் புறக்கணித்து விட முடியாது. ‘சொல்லவும் படுமே’ என்ற சொல்லாட்சி ஒரு தடுமாற்ற நிலையை வெளிப்படுத்தியுள்ளது. இவ்வாறும் சொல்லலாம், வேறுபடுகையிலும்

சொல்லி இருக்கிறார்கள் என்ற மறையுறை பொருளே இச்சொல்லாட்சியுள் புதைந்துள்ளது எனலாம். முல்லை குறிஞ்சி எனும் வரிசைமுறையே 6,7,8,9,10,11,23 ஆகிய அகத்திணையியல் நூற்பாக்களிலும் தொல்காப்பியர் பின்பற்றியுள்ளதை அறிதல் வேண்டும். இந்நூற்பாக்களில் ஒன்றாகிய,

**" ஆயர் வேட்டுவர் ஆடுஉத் திணைப்பெயர்**

**ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே"**[3]

எனும் நூற்பா தொல்காப்பியரின் வரிசைத் தேர்வு முறையை வெளிப்படுத்துவதாக, அமைந்துள்ளது. 'ஆயர் வேட்டுவர் கிழவர் ஆடுஉத் திணைப் பெயர்' என்ற நூற்பா ஆக்கமே பொருள் செறிந்ததாக இருக்க 'ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே' என்று பிரித்துக் கூறியதற்குக் காரணம் உண்டு.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற வரிசை முறை மனிதச் சமூகப் பரிணாமத்தின் வரிசை முறையாகக் கொண்டு அதன் அடிப்படையில் சங்க அகப் பாடல்களைப் புரிந்து கொள்வதும் ஆராய்வதும் சிறப்பு மிக்கதாகும். இந்த வரிசை முறையில் அகவயப்பட்ட இலக்கண வரிசை முறையாகத் தொல்காப்பியத்திற்கு முன் உள்ள சிந்தனை மரபை அவர் பின் பற்றி இருக்க வேண்டும். எனவே தான் தொல்காப்பியர்,

ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர் எனத் தனியே கூறி அதன் பின்னர் முல்லை, குறிஞ்சி சமூகத்திற்கு அடுத்த பரிணாம சமூகமாகிய மருதத்திணைப் பெயரை, ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே' என்று தனியே கூறி இருக்க வேண்டும். முல்லை குறிஞ்சி என்று முல்லை முதலில் இடம்பெற்றமைக்கு முல்லைச் சமூக காலத்தின் சமூக அரசியல் காரணமாகலாம். நெய்தல், பாலைத்

திணைப் பெயர்கள் இலக்கண வரையறையைப் பெற்றிருக்கவில்லை என்பதைத் தொல்காப்பியர் அடுத்து வரும்,

**“ ஏனோர் மருங்கினும் எண்ணங் காலை**

**ஆனா வகைய திணைநிலைப் பெயரே”[4]**

என்ற நூற்பா வழித் தெரியப்படுத்தியுள்ளார். எனவே தொல்காப்பியர் இலக்கணச் சிந்தனைகள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற வரிசையில் வேட்டை, ஆநிரை, வேளாண்மைச் சமூகத்தை அடியொற்றி வரிசைப்படுத்தப் பட்டிருக்கலாம் என்ற கருதுகோளைச் கொள்ள வாய்ப்புள்ளது.

### மகள் மறுத்து மொழிதல் மானுடவியல் ஆய்வு

தொல்காப்பியப் புறத்திணை இயல் மகட்பாற் காஞ்சி என்னும் துறையைக் காஞ்சித்திணையில் அமைத்துள்ளது. ‘பாங்கரும் சிறப்பின் பன்னெறி யானும் நில்லா உலகம் புல்லிய தெறித்தே’ என்ற நூற்பா வழித் தொல்காப்பியர் காஞ்சித் திணையை நிலையாமைத் திணையாகப் படைத்துள்ளமையை அறிய முடியும். தமிழகத்தின் பண்டைய முதுகுடி மக்களுக்கும் புதிதாக அரசு அமைப்புத் தோன்றியதன் மூலம் உருவெடுத்து வந்த புதிய மன்னர்களுக்குமான ஒரு போராட்டத்தை மகட்பாற் காஞ்சி எனும் துறை வெளிப்படுத்தி நிற்கிறது.

**“ நிகர்த்து மேல் வந்த வேந்தனொடு முதுகுடி**

**மகட்பாடு அஞ்சிய மகட்பா லானும்”[5]**

என்பது தொல்காப்பிய விளக்கம். இதற்கு இளம்பூரணர், ஒத்து மாறுபட்டுத் தன்மேல் வந்த வேந்தனொடு தன் தொல்குலத்து மகட்கொடை அஞ்சிய மகட்பாற் காஞ்சியும் என்று உரை வரைந்துள்ளனர். நச்சினார்க்கினியர், பெண்கோள் ஒழுக்கத்து ஒத்து மறுத்தல் பற்றிப் பகைவனாய் வலித்து கோடற்கு எடுத்து வந்த அரசனோடு முதுகுடித் தலைவராகிய வணிகரும், வேளாளரும் தத்தம்

மகளிரைப் படுத்தற்கு அஞ்சிய மகட்பாற் காஞ்சி என்று உரை எழுதியுள்ளார்.

இளம்பூரணர் உரையும் நச்சினார்க்கினியர் உரையும் தம்முள் சில வேறுபாடுகளைக் கொண்டுள்ளன. நிகர்த்து என்பதற்கு இருவருமே 'ஒத்து மாறுபட்டு' எனவும் 'பெண்கோள் ஒழுக்கத்தின் ஒத்து மறுத்தல்' எனவும் உரை எழுதி உள்ளனர். முதலில் பெண்தர இசைந்து பின் மறுத்தல் என்பது இவ்வுரையின் பொருளாகும். ஆ.சிவலிங்கனார் (1996) இவ்வுரையின் பொருளையே பெண் கொடுக்க அஞ்சி மறுத்தல் என விரிவாக்குவர். முதலில் இசைந்தாலும் பின்பு அஞ்சி மறுத்தல் என்பதே இவ்வுரைகளின் கருத்துரை ஆகும். ஆனால் மகட்பாற் காஞ்சிப் பாடல்கள் எதிலும் பெண் கொடுக்க இசைந்தமைக்கான குறிப்புகள் எதுவும் இல்லை.

மகள் மறுத்து மொழிதல் எனும் பாடல் போக்கு பற்றிச் சமூகவியல் அணுகுமுறையில் கைலாசபதி சில விளக்கங்களைக் கண்டுரைத்துள்ளார். 'கிறித்துச் சகாப்தம் தொடங்குவதற்கு முன்பு தமிழக வரைப்பிலே சில நூற்றுக்கணக்கான குலமரபுக் குழுக்கள் சிதறிக் கிடந்தன. ஒவ்வொரு சிறு குழுவிலும் அடங்கிய யாவரும் இரத்த உறவினால் பிணைக்கப்பட்டவர்கள்; புராதன பொதுவுடைமை அமைப்பு நிலவிய காலம் அது; ஒளியர், ஆவியர், கோசர், அதியர், அருவர், மழவர், வழுதியர் முதலிய இனங்களெல்லாம் குலமரபு இனங்களே. நாளடைவில் இக்குலங்களிடையே உலோகக் கண்டுபிடிப்பு பொருளாதார மாறுபாட்டை உருவாக்கியது. இதனால் ஏற்றத்தாழ்வுகள் உண்டாயின. இதன் விளைவாகச் சிதறிக் கிடந்த குலங்கள் ஒன்றுடன் ஒன்று மோதின; சில அழிந்தன; சில தாழ்ந்தன. இந்நிலைமையிலிருந்தே

காலப் போக்கில் தமிழகத்தில் மூன்று அரசுகள் உருவாயின. முடியுடை வேந்தர் தோன்றினர்.

## தமிழர் வாழ்வியல்

சங்ககாலத் தமிழகத்தின் அரசியல், உரிமை வாழ்வினை வளர்த்தற்குரிய வேலியாய் விளங்கியது. அதனால் அக்காலத் தமிழ் மக்கள் பசியும் பிணியுமற்று, நல்வாழ்வு வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்க்கையின் சிறப்பியல்புகளை ஒரு சிறிது நோக்குவோமாக.

மக்களது நல்லறிவின் பயனாய் அமைவது ஒழுக்கமாகும். வாழ்க்கையில் மேன்மேலும் உயர்ச்சி அடைவதற்குக் காரணமாகிய ஒழுக்கவுணர்வுடைய மக்கள் 'உயர்திணை' எனச் சிறப்பிக்கப் பெற்றார்கள். அவ்வொழுக்க உணர்ச்சியில்லாத ஏனைய உயிர்களும் உயிரற்ற பொருள்களும் அ∴றிணை என வழங்கப்பெற்றன. உலகப் பொருள்களையெல்லாம் உயர்திணை அ∴றிணையென இரண்டாக வகுத்தலும் 'ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல' என ஐம்பாலாகப் பகுத்து வழங்குதலும் தமிழ் மொழியிலன்றி வேறு எம்மொழியிலும் காணப்படாத சிறப்பியல்புகளாம்.

விலங்கு முதலிய தாழ்ந்த உயிர்களினின்று மக்களைப் பிரித்து உயர்திணையாக உயர்த்துவது மனவுணர்வின் பாற்பட்ட நல்லொழுக்கமே. ஒழுக்கம் மேன்மேலும் உயர்வைத் தருதலால், அதனை உயிரினும் சிறந்தாகப் போற்றுதல் வேண்டுமெனத் தமிழ்ச் சான்றோர் அறிவுறுத்துவாராயினர். ஒழுக்கமில்லாதார் மக்கள் வடிவிற் காணப்பட்டாலும் மாக்கள் என்றே இழித்துரைக்கப்படுவர்.

தமிழ் மக்களுடைய பழைய இலக்கண நூலாக விளங்குவது தொல்காப்பியம். அந்நூல் மக்கள் வாழ்க்கையினை அகம், புறம் என

இருவகையாகப் பகுத்து விளக்குகின்றது. ஒத்த அன்புடைய கணவனும் மனைவியும் கலந்து வாழும் குடும்ப வாழ்வினை அகவாழ்வென்றும், இங்ஙனம் பல்லாயிரக்கணக்கான குடும்பங்கள் ஒன்றி வாழ்வதற்குரிய அரசியல் வாழ்வினைப் புறவாழ்வென்றும் வகுத்துரைத்தல் தமிழர் மரபாகும்.

அறம், பொருள், இன்பம் என்னும் இம்மூன்று பொருள்களையும் மும்முதற்பொருள் எனத் தமிழர் பாராட்டிப் போற்றுவர். எல்லாவுயிர்களாலும் விரும்பப்படுவது இன்பம். அவ்வின்பத்திற்குக் காரணமாக மக்களால் ஈட்டப் பெறுவது பொருள். நடுவு நிலையில் அப்பொருளையீட்டுதற்குரிய ஒழுங்கு முறை அறம். அறத்தினாற் பொருள் செய்து அப்பொருளால் இன்பம் நுகர்தல் மக்கள் வாழ்க்கை முறையாகும். இம்முறையினை ஆசிரியர் திருவள்ளுவனார் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பால்களாக வகுத்து விளக்குகின்றார்.

**அகவொழுக்க வகைகள்**

அகவொழுக்கத்தை ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை என ஏழுவகையாக விரித்து விளங்குவர். ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் இல்லிருந்து நல்லறஞ்செய்தற்கு இன்றியமையாத அன்பின் வழிப்பட்ட உள்ளத்துணர்ச்சியே ஐந்திணை எனப்படும். தலைவன், தலைவி என்னுமிருவரும் தம்முட் கூடி மகிழ்தலும், உலகியற் கடமை நோக்கித் தலைவன் சிலநாள் தலைவியைப் பிரிந்து செல்லுதலும், பிரிந்த தலைவன் குறித்த நாளளவும் தலைவி அப்பிரிவுத் துன்பத்தைப் பொறுத்து ஆற்றியிருத்தலும், கணவன் குறித்த நாளில் வரத் தாமதிப்பின் ஆற்றாமை மிகும் மனைவி இரங்குதலும் பின் அவன் வந்த போது அன்பினாற் பிணங்குதலும் என ஐந்து பகுதியாக இவ்வகத்திணையினை விரித்துரைப்பர். இவ்வைந்து ஒழுகலாறுகளையும்

முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் எனப் பெயரிட்டு வழங்குவர்.

மேற்கூறிய அன்பினைந்திணையாகிய அகவொழுக்கம் களவு, கற்பு என இருவகைப்படும். உருவும் திருவும் உணவும் முதலியவற்றால் ஒத்து விளங்கும் தலைவனும் தலைவியும் நல்லூழின் செயலால் தாமே எதிர்ப்பட்டு, அன்பினால் ஒருவரையொருவர் உணர்ந்து மனமொத்து உலகத்தார் அறியாது மறைந்தொழுகுதல் களவாகும். ‘மறைவில் நிகழும் ஒழுகலாறு’ என்ற கருத்திலேயே களவு என்னும் சொல் வழங்குகின்றது. இங்ஙனம் மறைந்தொழுகுதலைத் தவிர்த்து, பெற்றோர் உடன்பாடு பெற்று இருவரும் உலகத்தார் அறிய மணஞ்செய்து கொண்டு மனையறஞ் செய்தலே ‘கற்பு’ எனப்படும்.

கணவன், மனைவி என்னும் இருவருள் ஒருவர் மட்டும் அன்பினாற்கூடி வாழ்தலின் விருப்புடையராக, மற்றவர் அவர் உறவில் விருப்பின்றி ஒழுகுவது கைக்கிளையாகும். கைக்கிளையென்பது ஒருதலைக்காமம். ஒருவனும் ஒருத்தியும், தம்முள் அன்பில்லாதவராய் இருந்தும், கணவனும் மனைவியுமெனப் பிறராற்பிணைக்கப்பட்டு அன்பின்றிக் குடும்பம் நடத்துதல் பெருந்திணையாகும். இவ்வாறு பொருத்தமில்லாத உறவு உலவியலிற் பெரும்பான்மையாகக் காணப்படுதலான், இதனைப் பெருந்திணை என்ற பெயரால் வழங்குவராயினர்.

பொன்னையும் பொருளையும் பிறவற்றையும் விரும்பி ஒருவரையொருவர் மணத்திற்கு ஒருப்படுதல் பொதுமக்களின் இயல்பாகும். மணற்கேணியினைத் தோண்டத்தோண்ட நீர் ஊறுவது போலக் கணவனும் மனைவியும் எனப் பன்னாள் பழகப் பழகச் சிறப்புடைய அன்பு தோன்றிப் பெருகுதல் வாழ்வின் பயனாகும்.

கணவனும் மனைவியுமாகப் பல பிறவிகளிலும் ஒன்றி வாழ்ந்தமையால் நிரம்பிய அன்புடையாரிருவர், மீண்டும் பிறந்து வளர்ந்து, நல்லூழின் செயலால் ஓரிடத்து எதிர்ப்படுவராயின் , அன்பினால் நிறைந்த அவ்விருவருடைய நெஞ்சமும் செம்மண் நிலத்திற்பெய்த மழை நீரைப் போலக் கலந்து ஒன்றாகும் இயல்புடையனவாம். ஒருவரையொருவர் முன் கண்டு பழகாத நிலையில் அவர்கள் உள்ளத்திற் பண்டைப் பிறப்பிற் பெருகித் தேங்கியிருந்த அன்பு வெள்ளம், அவ்விருவரும் ஒருவரையொருவர் கண்ட அளவிலேயே பெருக்கெடுத்து அணைகளைக் கடந்து, நிலமும் குலமுமாகிய தடைகளை அழித்து ஒன்றாகும் இயல்பே இயற்கைப் புணர்ச்சி எனத் தமிழ் மக்களாற் சிறப்பித்து உரைக்கப்படுவதாம். இவ்வாறு முதற்காட்சியிலேயே அன்பின் தொடர் புணர்ந்து ஒருவரையொருவர் இன்றியமையாதொழுகும் இயல்புடையாரை நல்வாழ்விற் சிறந்த தலைமக்கள் எனத் தமிழ் மக்கள் பாராட்டிப் போற்றினார்கள். இத்தகைய தலைமக்களது ஒழுகலாறே சங்க இலக்கியங்களில் விரிவாக விளக்கப் பெறுகின்றன.

**புறத்திணை**

ஒருவர் வாழ்வில் மற்றவர் குறுக்கிட்டுப் பூசல் விளைக்கும் குழப்ப நிலையைத் தடுத்து, மக்களுள் ஒவ்வொருவருக்கும் தாம்தாம் விரும்பிய குற்றமற்ற இன்பங்களை அடைவதற்கு மேற்கொள்ளும் செயல் முறைகளே ‘புறத்திணை’ எனப் போற்றப்பெறுவன. இப்புறவொழுக்கங்களை மேற்கொள்ளுதற்குரிய வரம்பு, ‘அரசியல்’ எனப்படும். இவ்வரசியல் வாழ்வில் நன்கு மதிக்கத்தக்க தலைவன், மன்னனாவான். மன்னனுக்கு இன்றியமையாது வேண்டப்படுவனவாகிய கல்வி, வீரம், புகழ், கொடை என்னும் பண்பாடுகள் எல்லா நாட்டு மக்களுக்கும் இன்றியமையாதனவாம்.

நடுவுநிலையில் நின்று நாட்டினையாண்ட அரசன் மக்களால் இறைவனாக மதித்து வழிபடப் பெற்றான். கொடியவர்களால் துன்புறுத்தப்பட்டாரும். வறுமையால் வாட்டமுற்றாரும் ஆகிய பலரும் தம் குறைகளைச் சொல்லி நலம் பெறுவதற்கு ஏற்ற முறையில் காட்சிக்கு எளியவராகவும் இன்சொல்லுடையராகவும் பண்டைத் தமிழ் வேந்தர் விளங்கினர். அவர்கள் அரசியற் பாதுகாப்புக்காக நாட்டு மக்களிடமிருந்து பெறுவது விளைச்சலில் ஆறிலொன்றாகிய நிலவரியேயாகும். அதுவன்றி, நாடு காவலுக்கென மக்கள் தரும் சிறுதொகை 'புரவு வரி' என வழங்கப் பெறுவதாகும். வாணிபம் செய்பவர்பாற்பெறும் சுங்கப் பொருளும் பகைவர் தந்த திறைப் பொருளும் அரசாங்கத்திற்குரியனவாம். இப்பொருள்கள் நாட்டின் காவலுக்குரிய படைகளுக்கும், அரண் முதலிய பிற சாதனங்களுக்கும், நீர் நிலை பெருக்கல், பெரு வழியமைத்தல், மன்றங்களில் நீதி வழங்கல், இளமரச் சோலை அமைத்தல் முதலிய பொது நல வளர்ச்சிக்கும் பயன்படுத்தப் பெற்றன. அரசனது செல்வம் அறனும் பொருளும் இன்பமும் என்ற மூன்று பொருளையும் நாட்டில் வளர்த்தற்கு உதவியது.

அரசிற்கு உறுதி கூறும் இயற்றமிழ் வல்ல புலவர்களும் இசையால் மக்களுடைய மனமாசு கழுவி மகிழ்விக்கும் இசைத்தமிழ் வல்ல பாணர்களும், உழைத்து அலுத்த மக்களுக்கு உயர்ந்த கதைகளை நடித்துக் காட்டி அவர்களை ஊக்குவிக்கும் நாடகத் தமிழில் வல்ல பொருநர், கூத்தர், விறலி என்பாரும் தம் சிறந்த புலமைத் திறத்தால் மக்களால் வரிசை தந்து நன்கு மதிக்கும் உயர்ந்த பரிசுடையராதலின் இவர்களைப் 'பரிசிலர்' என்ற பெயரால் தமிழர் பாராட்டிப் போற்றுவாராயினர்.

### தமிழ் வேந்தர்களின் சிறப்புகள்

பிணி முதலிய காரணங்களால் எத்தகைய தொழிலும் செய்து வாழ்தற்குரிய வசதி பெறாது வறுமையால் வாட்டமுற்றுப் பிறர்பால் இரந்துண்டு வாழும் எளியவர் 'இரவலர்' என்ற பெயரால் வழங்கப்படுவர். பகைவர் தந்த திறைப் பொருளைக் கலைச்செல்வராகிய பரிசிலர்க்கும் ஆற்றலற்ற எளியோராகிய இரவலர்க்கும் வரையாது கொடுத்தளித்தலைத் தமிழ் வேந்தர் தம் சிறப்பியல்பாகக் கொண்டிருந்தனர். பரிசிலர் தமக்குரிய கலைத்திறத்தில் திறமை பெற்று வந்தாலும் திறமையின்றி வந்தாலும், வறுமையான் வந்த அவர்தம் பசித் துன்பத்தை உணர்ந்து அருளுடன் பரிசில் தந்து பாராட்டுதல் தமிழ் வேந்தர்களின் கடமையாகக் கருதப்பட்டது.

தீயாரை ஒறுத்தலும் நடுவு நிலைமையுடையார்க்கு அருள் புரிதலும் ஆகிய நீதி முறையிற் சோம்பலின்றித் தமிழ் வேந்தர் இடைவிடாதுழைப்பாராயினர். ஆதலால், மாந்தர் எல்லோராலும் வெறுப்பின்றிக் கண்டு போற்றும் இறைமை தெய்வத் தன்மையுடையவராக வேந்தர் நன்கு மதிக்கப் பெற்றனர். நல்வினையினது நன்மையும் தீவினையினது தீமையும் இல்லையென்று கருதித் தம் மனம் போனபடி முறை பிறழ்ந்து நடக்கும் சிற்றினத்தாரைத் தம் ஆட்சிக் குழுவினின்றும் விலக்கினர். தம் நாட்டிற்கெனப் போர்க்களத்தில் உயிர் வழங்குமியல்பினராகிய படை வீரர்களை வறுமையகற்றித் தம்மைப் போலப் பரிசிலர்க்கும் வழங்கும் வன்மையுடையவராகப் பெரும்பொருள் தந்து ஆதரித்தனர். அதனால், அவ்வீரர்கள் போர் என்று கேட்பின் பகைவர் நாடுகள் எவ்வளவு தூரமாயிருந்தாலும் விரைந்து சென்று போரில் வெற்றி பெற்றுத் தந்தார்கள். போரில்லாது சும்மா இருத்தலில் வெறுப்படைந்த வீரர்கள் எங்கள் வேந்தன் எங்களைப் போருக்கு ஏவாதிருத்தலால் யாங்கள் எங்களுக்குள்ளேயே போர் செய்து சாவேம்! எனக் கருதி

நட்புடையர்களாகிய தங்களுக்குள்ளே போர் செய்ய எண்ணுதலும் உண்டு. இவ்வாறு போரில் விருப்பமுடைய படைவீரர்களுடைய தமிழரசர்கள் தாங்கள் எண்ணியபடியே தங்கள் நாட்டை வளப்படுத்தி உருவாக்கும் ஆற்றல் பெற்று விளங்கினார்கள். பெரும் வெள்ளத்தால் உண்டாகும் பூசல் அல்லது மக்கள் மனம் கலங்கி முறையிடும் பூசல் நேராதபடி தம் நாட்டு மக்கள் அமைதியாக வாழும் வண்ணம் போல வேந்தர்களும் தங்கள் குடிமக்களைப் போற்றி பாதுகாத்தார்கள் ‘கொல்லுந் தன்மையுடைய யானைகளும், மனஞ்செருக்கற்ற குதிரைகளும், நெடுகொடியுடைய பெரிய எனும் நாற் பெரும்படைகளால் வேந்தர் சிறப்புற்றிருப்பினும், அறநெறியை முதலாகக் கொண்டு நிகழ்வதே அரசரது வெற்றியாகும். என்ற கருத்தினைப் புலவர்கள் வேந்தர்க்கு அறிவுறுத்தினார்கள். தமக்குரியார் என்று கருதி அவர் செய்யும் கொடுந்தொழிலைப் பொறுத்து முறைபிறழாமலும், அயலார் என்று கருதி அவர்களுடைய நற்குணங்களைக் கெடாமலும், ஞாயிறையொத்த வீரமும் திங்களையொத்த அருளாற்குளிர்ந்த மென்மையும் மழையைப் போன்ற பெருவண்மையும் உடையவர்களாகி, வறுமை என்பதே தம் நாட்டில் நிலவாமல் நெடுங்காலம் அரசு புரிந்தார்கள்.

தமிழ் வேந்தர் எல்லாரும் மக்களுக்குக் கண் என்று போற்றப் பெற்ற கல்வித் துறையிற் சிறந்த பயிற்சியுடையவராக விளங்கினர். அறநூற்றுறையிலும் , அவ்வறத்தின் வழிப்பட்ட அரசியல் நூலிலும், போர்த் துறையிலும் நிரம்பிய பயிற்சியுடைவராய் விளங்கினர். அரசியற் கல்வியிலன்றி இலக்கியத் துறையிலும் நிரம்பிய அறிவுடையராக செய்யுள் பாடும் சிறப்பமைந்த செந்தமிழ்ப் புலவராயும் விளங்கினர் என்பது பண்டைத் தமிழ் வேந்தர்கள் பாடியனவாகவுள்ள சங்கச் செய்யுட்களால் புலனாம்.

வேந்தராற் பாடற்பெற்ற செய்யுட்களெல்லாம் அவர்தம் உள்ளத்திலமைந்த விழுமிய எண்ணங்களை வெளிப்படுத்தி நாட்டு மக்களை உயர்த்தும் நலமுடையனவாகத் திகழ்கின்றன. தமிழ் வேந்தர் சிறந்த கல்வியுடைவராகவே, அவர் தம் கல்வி அவரால் ஆளப்பெறும் நாட்டு மக்கள் எல்லாருக்கும் பயன்படுவதாயிற்று.

ஒரு நாட்டு அரசியலுக்கு இன்றியமையாது வேண்டப் பெறுவது கல்வியே, என்பதனைத் தமிழ் மக்கள் நெடுங்காலமாக உணர்ந்திருந்தார்கள். ஆசிரியர் திருவள்ளுவனார் பொருட்பாலில் இறைமாட்சியினை அடுத்து அரசனுக்கு இன்றியமையாத கல்வியினை வற்புறுத்துரைத்தலால், இவ்வுண்மை நன்கு தெளியப்படும். கல்வியுடையோர் கருத்தின் வழியே அரசியலும் நடைபெறுதல் வேண்டும் என அக்காலத் தமிழ்வேந்தர் எண்ணினர். குற்ற தமிழ்ப் புலவர்களைப் போற்றி, அவர்கள் அஞ்சாது கூறும் அறிவுரைகளை வெறுக்காது ஏற்றுக் கொண்டு, தமிழ் மன்னர்கள் தங்கள் தவறுகளைப் போக்கித் திருந்தி வாழ்ந்தார்கள். அரசன்பால் தவறு கண்டவிடத்து அவனை இடித்துரைத்துத் திருத்தும் உரிமை அந்நாட்டில் வாழும் சான்றோர்களுக்கு உரியதாயிருந்தது.

### தமிழர் கல்வி நிலை

கல்வியென்பது மக்கள் அறிய வேண்டுமெனவற்றை அறிதற்குரிய மனப் பயிற்சியாகும். உட்கருவியாகிய மனமும் கண் முதலிய புறக் கருவிகளும் ஒன்றி நிற்பது இவ்வுலகியற் பொருள்களை நோக்கியுணரும் இப்பயிற்சி முறையினாலேயே மக்களது அறிவு வளர்ச்சியடைகின்றது.

கல்வி வளர்ச்சிக்கு மொழியின் துணையே இன்றிமையாததாகும். மக்கள் தாங்கள் எண்ணிய கருத்துக்களை மற்றவர்களுக்கு விளங்கச் சொல்லுதற்கும், பிறர் எண்ணங்களைத் தாங்கள் கேட்டறிதற்கும்

அவர்களாற் பேசப்படும் தாய்மொழியே இடை நின்று துணை செய்வதாம். ஆகவே, தமிழ் முன்னோர்களால் கல்வியெனக் குறிக்கப்பட்டது அவர் தம் தாய்மொழி வழியாகப் பயிலும் தமிழ்க் கல்வியே என்பது புலனாம்.

மக்களுடைய புலமை செல்வத்தின் குன்றாத நிலைக்களமாய் விளங்குவது அவர்கள் பேசும் மொழியேயாகும். அதன் உதவியினாலேயே அவர்தம் கல்வி உருவாகின்றது. மொழியின் துணையின்றிக் கல்வியை வளர்த்தல் என்பது இயலாத செயலாம். இவ்வுண்மையை நன்குணர்ந்த தமிழ் முன்னோர், தம் தாய் மொழியாகிய தமிழைக் கல்விப் பயிற்சிக்குரிய திறமுடையதாக அமைத்துக் கொணடனர்.

## முத்தமிழ்

உலகியற் பொருள்களின் இயல்பினை உள்ளவாறு விளங்குவதற்குரிய சொல்லமைப்பினையுடையது ‘இயற்றமிழ்’ எனப்படும். மக்கள் மனத்தில் அமைந்து கிடந்து எண்ணங்களை உருவாக்கிச் செயற்படுத்தற்குரிய இயல்பினை வெளிப்படுத்தும் திறம் இயற்றமிழுக்குரியதாகும். தாம் சொல்லக்கருதிய கருத்துக்களைக் கேட்பார் உள்ளம் மகிழ இனிய ஓசையோடு கூடிய இசைத் திறத்தாற் புலப்படுத்தும் மொழிநடை ‘இசைத் தமிழ்’ ஆகும். தம் எண்ணங்கள் தம் உடம்பிற் காணப்படும் மெய்ப்பாடு முதலியவற்றால் வெளிப்பட்டுத் தோன்ற நடித்துக் காட்டுவதற்கு அமைந்த மொழி நடை ‘நாடகத் தமிழ்’ என வழங்கப்படும். எப் பொருள்களையும் தெளிவாக எண்ணியறியும் உள்ளத்தின் இயல்பினை வளர்த்தற்குரிய மொழியமைப்பினை இயற்றமிழ் என்றும், கேட்பார் உள்ளத்தினைக் குளிரச் செய்யும் இன்னோசை மிக்க உரையின் இயல்பினை இசைத்தமிழ் என்றும், மக்கள் சொல்வன அவர்கள் உடலிற்றோன்றும் மெய்ப்பாடுகளால்

புலப்படும் முறையில் அமைந்த மொழி நடையினை நாடகத்தமிழ் என்றும் மிகப் பழைய காலத்திலேயே தமிழ் முன்னோர் வகுத்துள்ளனர்.

மக்கள் தங்கள் உடம்பின் செயலால் விளங்கிக் கொண்டவற்றை உரையினால் அறிவுறுத்தவும், உரையினால் அறிவித்தவற்றை உள்ளத்தால் உய்த்துணரவும் துணை செய்யும் கருவியாகத் தமிழ் மொழி அமைந்தமையால், அதனை ‘முத்தமிழ்’ என்ற பெயரால் முன்னையோர் குறிப்பிடுவாராயினர்.

மக்கள் தங்கள் மனப் பயிற்சியின் பயனாக உணர்ந்து கொண்ட இயல்புகளை ஓர் ஒழுங்கு முறையிலே வைத்து ஏனையோர்க்கு எடுத்துரைப்பதே கல்விப் பயிற்சிக்குரிய நூலாகும். அறிய வேண்டுவனவற்றை அறிவிக்கும் கருவி ’நூல்’ எனப்படும் நுண்ணிய பஞ்சின் நுனிகளால் ஒரிழைப்படுத்தி நூற்கும் நூலைப்போன்று, ஆழ்ந்தகன்ற பொருளுடைய சொற்களால் முறைப்பட்டதே ‘நூல்’ எனச் சிறப்பிக்கப்படும். முறைப்பட இயற்றப் பெற்றமை கருதி அதனை ‘முறை’ என்ற பெயரால் வழங்குதலும் உண்டு.

**எண் எழுத்து வகைகள்**

கல்விப் பயிற்சிக்குரிய நூலினை ‘எண்’ எனவும் ‘எழுத்து’ எனவும் இரு பகுதியாகப் பண்டைத் தமிழ் மக்கள் வகைப்படுத்தினார்கள். காலம், இடம், பொருள் என்பவற்றின் அளவினை உள்ளத்தால் எண்ணிக் கூறுபடுத்தி அதற்குரிய பயிற்சியினை வளர்க்கும் கருவி ‘எண்ணூல்’ என வழங்கப்பெறும். எண் எனும் சொல் இக்காலத்தில் ‘கணிதம்’ என்ற பொருளில் வழங்குகின்றது. மிகப் பெரிய அண்டங்களையும் மிகச் சிறிய அணுவினையும் எண்ணுவதற்குரிய பேரெண்களையும் சிற்றெண்களையும் தமிழ் முன்னோர் முன்னரே கண்டறிந்தனர்.

அண்டம் முதலிய பொருள்களின் அகலம், நீளம், நிறை முதலியவற்றை அளந்து கூறுதற்குரிய கோடி, சங்கம், தாமரை, நெய்தல், வெள்ளம் முதலிய பேரெண்களும் ஒரு பொருளையே பன்னூறு கூறாகப் பகுத்துணர்தற்குரிய காணி, முந்திரி முதலிய சிற்றெண்களும் தமிழ் மக்களால் முன்னரே இயற்றப் பெற்றுள்ளன. கணக்கினைக் 'கருவி', 'செய்கை' என இருவகையாகப் பகுத்து விளக்கிய தமிழ்க் கணக்கு நூல்கள் தம் காலத்திலிருந்தனவெனப் பரிமேலழகர் கூறுகின்றார். சிந்தைக்கும் மொழிக்கும் அப்பாற்பட்ட முதற்கடவுளாகிய இறைவன் ஒருவனைத் தவிர, ஏனைய எல்லாப் பொருள்களும் இவ்வெண்ணூலின் வரம்புக்குட்பட்டுத் தோற்றுவனவே என்பது தமிழ் மக்களின் துணிபாகும்.

கல்வியின் இரண்டாவது பிரிவாகச் சொல்லப்பட்ட எழுத்தென்பது, இயற்றமிழ் நூலாகும். உலகில் உள்ள பொருள் எல்லாவற்றையும் உயர்திணை அ∴றிணை என இரண்டாகப் பகுத்து அவற்றின் இயல்பினை உள்ளவாறு விளக்குவது, இயற்றமிழின் இயல்பாகும். உலகத்தார் செய்யும் வினைகள் யாவும் அறிவதும் செய்வதும் என இரண்டுக்குள் அடங்கும். அவற்றுள் எண்ணி அறிவதற்குக் கருவியாவன எண் நூல் எனவும் பண்டைத் தமிழ் மக்களால் வழங்கப் பெற்றன. எண்ணூற் பயிற்சியால் எப்பொருளையும் தெளிய விளங்கும் உரைத் திறமும் இயல் நூற்பயிற்சியால் எத்தொழிலையும் செய்து முடிக்கும் செயற்றிறமும் பெருகுமென்பது பண்டைத் தமிழாசிரியர்களின் கருத்தாகும்.

எண்ணும் எழுத்துமாகிய இருவகைக் கல்வியினையும் தமிழ் மக்கள் தங்களுக்குரிய இரண்டு கண்களாகக் கருதிப் போற்றி வந்தார்கள். மக்கள் உடம்பிலே அமைந்த கண்கள் ஒரு காலத்தே ஓரிடத்தே அமைந்த புறப்பொருள்களையே காட்டுவன. எண்ணும்

எழுத்துமாகிய இக்கண்களோ, இடத்தையும் காலத்தையும் ஊடுருவிச் சென்று, எல்லா பொருள்களையும் காணவல்ல சிறப்புடையனவாகும். ஆதலால் மக்கள் உயிர்க்கு இவ்விரண்டும் சிறந்த கண்களாம் எனத் தமிழ்ச் சான்றோர் கருதினர். அறிவில்லாதார் இவ்விரு திறக் கல்வியையும் எண் என்றும் எழுத்தென்றும் கூறித் தமக்குப் புறம்பாகக் கருதி வந்தாலும், அறிந்தவர் இவ்விரண்டனையும் சிறப்புடைய உயிர்களுக்குக் கண்கள் என்றே அறிவுறுத்தி வந்தனர்.

**" எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**

**கண்ணென்ப வாழு முயிர்க்கு"[6]**

என்ற திருக்குறளாலும் அதற்கு பரிமேலழர் எழுதிய உரையாலும் இவ்வுண்மை புலனாம்.

கல்லாதார் முகத்திற் கண்ணுடையவராயினும், உலகியற் பொருள்களின் இயல்பினை உள்ளவாறுணரும் ஞானக் கண்ணைப் பெறாமையால், அவர்தம் முகத்திலுள்ள கண்கள் புலண்களாகவே இழித்துரைக்கப்பட்டன.

கற்கப்படும் நூல்களைப் பழுதறக் கற்று, கற்றபடி நன்னெறிக்கண் ஒழுகுதல் வேண்டுமெனவும், தோண்டத் தோண்டக் கிணற்றில் நீர் ஊறுவது போல நூல்களை மேலும் மேலும் கற்பதால் அறிவு பெருகும் எனவும், அழிவில்லாத செல்வம் கல்வியே எனவும், தாம் பெற்ற கல்வி உலகத்தார்க்கும் இன்பந்தருவதனைக் கண்டு, கற்றோர் மேலும் அக்கல்வியினையே விரும்புவர் எனவும், கற்றவனுக்குத் தன்னாடும் தன்னூருமேயன்றி, எந்நாடும் எவ்வூரும் தன்னாடும் தன்னூருமேயாகும் எனவும், ஒரு பிறப்பிலே கற்ற கல்வி ஒருவருக்கு எழு பிறப்பிலும் உயிரோடு சென்று உதவும் இயல்புடையதாதலால், அக்கல்வியை ஒருவன் இறக்குமளவும் கற்றல் வேண்டுமெனவும் ஆசிரியர் திருவள்ளுவனார் அறிவுறுத்துகின்றார்.

திருக்குறளிலுள்ள கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, சொல்வன்மை என்னும் ஐந்ததிகாரங்களும் கல்விப் பயிற்சியின் முறையினை இனிது விளக்குவனவாம். கல்வியின் முடிந்த எல்லையாக ஆசிரியரால் அறிவுறுத்தப் பெறுவது, 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரமாகும். துறவறவியலிற் கூறப்பட்ட இவ்வதிகாரம், தமிழ் மக்களின் சமய நூற்பயிற்சியினை நன்கு தெளிவிப்பதாகும்.

## முப்பொருள் பகுப்பு

தமிழ் மக்கள் இவ்வுலகியற் பொருள்களை முதற் பொருள் கருப்பொருள், உரிப்பொருள் என மூவகையாகப் பகுத்து ஆராய்ந்தார்கள். அவற்றுள் முதற் பொருள் எனப்படுவன இடமும் காலமுமாகும். இவையிரண்டுடன் சார்பாக தோன்றும் புல், மரம் முதலிய நிலையியற் பொருள்களும், உணவு, தொழில் முதலியனவும் கருப்பொருள்களாம். இவை யாவும் நிலமும் காலமுமாகிய முதற்பொருளின் கண்ணே கருக்கொண்டு தோற்றுவனவாதலால், கருப்பொருள் என வழங்கப்பெற்றன. மக்களுக்குரிய அகமும் புறமுமாகிய ஒழுகலாறுகள், உரிப்பொருள் என வழங்கப் பெற்றன.

உலகியற் பொருள்களையெல்லாம் முதல், கரு, உரி என மூன்று திறமாகப் பகுத்துக் கொண்டு தமிழ் மக்கள் கண்டறிந்த நுட்பங்கள் யாவும் அவர்களது கல்விப் பயிற்சியை மிகுதிப்படுத்தின. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும்பூதங்களால் ஆகியதே இவ்வுலகம் என்னும் உண்மையினைப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே நம் தமிழ் முன்னோர் உணர்ந்து வெளியிட்டுள்ளனர்.

## அறிவியல் அறிவுத்திறன்

இவ்வுலகத்தினையும், இதனைச் சூழ்ந்த வெளியாகிய வானத்தின் இயல்பினையும் வானத்தில் இயங்கும் ஒளிப் பொருள்களாகிய ஞாயிறு

திங்கள் முதலியவற்றையும் ஆராய்ந்துணரும் திறனோடு உழைத்துள்ளார்கள். அவ்வுழைப்பின் பயனாக அவர்கள் கண்டுணர்ந்து வெளியிட்ட உண்மைகள் பலவாகும். அவர்கள் பூதநூல் ஆராய்ச்சி பற்றி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே அறிவுறுத்திய உண்மைகளில் சில இப்பொழுது கிடைத்துள்ள சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன. தொன்மைக் காலத்திலேயே தமிழ் மக்கள் கண்டுணர்த்திய முடிவுகள் இக்காலத்துப் பல்வேறு கருவிகளின் துணைகொண்டு மேனாட்டார் கண்டுணர்த்திய முடிவுகளுடன் பெரிதும் ஒத்திருக்கக் காண்கின்றோம்.

ஞாயிறாகிய அனற்பிழம்பிலிருந்து தெறித்து விழுந்த ஒரு சிறு உருண்டையே உலகமென்றும், இந்நிலத்தினின்றும் தெறித்துச் சென்ற மற்றோர் உருண்டையே சந்திரனென்றும், ஞாயிற்றினின்றும் தெறித்து விழுந்த பூமி அதனது கவர்ச்சியால் இழுக்கப்பட்டு ஞாயிற்றைச் சுற்றி வருகின்றதென்றும், அவ்வாறே பூமியிலிருந்து சிதறிய மற்றோர் உருண்டையாகிய சந்திரன் ஞாயிற்றையும் தமக்குப் பிறப்பிடமாகிய பூமியையும் ஒருங்கே சுற்றி வருகின்றதென்றும் இக்கால ஆராய்ச்சி யாளர்கள் கூறுவர்.

இவ்வுண்மையினை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தங்கள் நுண்ணுணர்வால் அறிந்து வெளிப்படுத்திய பேரறிஞர்கள் தமிழ் நாட்டில் வாழ்ந்தார்கள். அப்பேரறிஞர்களின் கல்வித்திறத்தை நேரிற்கண்டு வியந்த உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் பெருமான், அவர்களது கல்வித் திறத்தின் உயர்வினைப் பற்றி எடுத்துரைப்பதாக அமைந்த பாடலொன்று புறநானூற்றில் உள்ளது.

“ஞாயிற்றினது இயக்கமும், அதனுடைய ஈர்ப்பாற்றலும் அவ்வாற்றலால் இழுக்கப்பட்டு அஞ்ஞாயிற்றைச் சுற்றி வரும் இப்பார்

வட்டமும், இப்பூமியில் காற்று வீசும் திசையும், காற்றின்றி வறிதேயுள்ள ஆகாயமும் என்று சொல்லப்பட்ட இவற்றை அங்கங்கே சென்று நேரில் கண்டறிந்தவர்களைப் போலச் சென்ற காலத்து இவ்வாறு இருந்தன இப்பொழுது இன்ன தன்மையை அடைவன என்று மூன்று காலத்தும் அறுதியிட்டுச் சொல்லும் கல்வியையுடைய பெரியோர்களும் இந்நாட்டில் உள்ளார்கள்" என்பார். அதனை,

**" செஞ்ஞா யிற்றுச் செலவும்**
**அஞ் ஞாயிற்றுப் புரிப்பும்**
**பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்**
**வளிதிரிதரு திசையும்**
**வறிது நிலைஇய காயமு மென்றிவை**
**சென்றளந் தறிந்தார் போல வென்றும்**
**இனைத்தென போரும் உளரே"[7]**

என்ற பாடல் வழி விளக்கிக் கூறுகிறார்.

மக்களுடைய வாழ்க்கைக்கு அரண் செய்வது அரசியல் நூற்கல்வியாகும். அரசியலின் இயல்பினை ஆசிரியர் திருவள்ளுவனார் திருக்குறள் பொருட்பாலில் தெளிவாக அறிவுறுத்துகின்றார். திருக்குறளை நன்கு கற்றுணர்வோர் சங்ககாலத் தமிழகத்தில் வழங்கிய அரசியல் முறையின் செம்மையினை நன்குணர்வர். நாட்டினை ஆளும் அரசியல் தலைவன் தன்னாட்சிக்கு உண்டாகும் ஆக்கத்தையும், அதனைப் பெறுதற்குத் தடையாயுள்ள இடையூறுகளையும் புறத்தார்க்குப் புலப்படாது தன் மனத்தேயடக்கிக் கொண்டு அமைதியாக அரசியலைச் செலுத்துதற்குரியவனாவன். சோழன் நலங்கிள்ளி என்ற மன்னன், யானை மீதேறி தன் மேல் ஒருவன் எறிந்த கல்லை யாருக்கும் புலப்படாமல் தன் கன்னத்தில் அடக்கிக் கொண்டிருந்தாற்போலக், காலமும் இடனும் கருதி அடங்கியிருந்தான். அவனது அரசியல்

நுட்பத்தினை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் தன் செய்யுளிற் புகழ்ந்து போற்றுகின்றார்.

ஐம்பெரும்பூதத்தின் இயல்பினையும், ஞாயிறு முதலியவற்றின் இயக்கத்தினையும் நேரே சென்று பார்த்தவர்களைப் போல நாளும் இன்ன தன்மையன எனச் சொல்கின்ற பேரறிஞர்களும் இந்த நாட்டில் வாழ்கின்றார்கள். அவர்களது அறிய முடியாத வன்மையினையுடையவனாக நீ அடங்கி வாழ்கின்றாய். ஆதலால், நின்னுடைய திறத்தை எவ்வாறு புலவர்கள் விளங்கப்பாடுவார்கள். என அவனை அவர் போற்றும் முறை, அவ் வேந்தனது அரசியற்கல்வியின் நுட்பத்தைக் குறிப்பாக அறிவுறுத்துவதால் காணலாம்.

காவிரிப்பூம்பட்டினத்தில் கல்வித்துறை உறழ்ச்சி குறித்து சான்றோர் கொடி கட்டியிருந்தனர்.

**“ பலகேள்வித் துறைபோகிய**
**தொல்லாணை நல்லாசிரியர்**
**உறழ்குறித் தெடுத்த உயர்கெழு கொடி”**[8]

என வரும் பட்டினப்பாலை அடிகளால் அத்தகைய கொடியின் இயல்பினை நன்குணரலாம். ‘பலவாகிய நூற் கேள்வியினையும், முற்றக் கற்றுச் சொல்லியபடி நடக்கும் பழைய ஆணை மொழியினையுமுடைய நல்லாசிரியர்கள் செய்யக் கருதிக் கட்டின அச்சம் பொருந்தின கொடி’ என்பது மேற்காட்டிய அடிகளின் பொருளாகும்.

‘ஒருவருடைய அறிவின் மாட்சியினை விளங்க உணர்த்தும் கருவியாவன, அவர்தம் வாய்ச் சொற்களே,’ என அக்காலத் தமிழர் நன்கு துணிந்தனர். அவர்கள் சொல்வன்மையினை வளர்த்தற்குப் பயன்பட்டது ‘உரை நூல்’ என்பதாகும். வழக்கியல் நூல் சங்க காலத்

தமிழ் மகளிர்க்குப் பயிற்றப்பட்டது. காவிரிப்பூம்பட்டினத்திலமைந்த அறங் கூறவையத்திலே இவ்வுரை நூல் வழங்கப்பெற்ற தெனவும், இவ்வுரை நூல் நெறிக்கு மாறுபடப் பேசுதல் ஆகாதெனவும் இளங்கோவடிகள் கூறுகின்றார்.

தமிழ் மொழிக்கே உரியனவாகத் தமிழ் மக்கள் வகுத்துணர்த்தியவை இசையும் நாடகமும் ஆகும். இயற்கையில் எழுந்த இனிய ஓசையைப் பொருளுணர்த்தும் பாக்களோடு ஒன்றுபடுத்தி இசைத்துப் பாடுவது ‘இசை’ எனப்படும். மூலாதாரத்திற் றொடங்கிய எழுத்தின் ஒலி, நெஞ்சு, கண்டம், நாக்கு, மூக்கு, மேல்வாய், கீழ்வாய், உதடு, பல் என்னும் எட்டிடங்களிலும் பொருந்தி எடுத்தல், படுத்தல், நலிதல்,உறழ்வு, கம்பிதம், ஒலி, உருட்டு, தாக்கு என்னும் எண் வகைப்பட்ட தொழில்களால் உருவாகப் பண்ணிக் கொள்ளப்படுதலாற் ‘பண்’ என்பதும் காரணப் பெயராம். நானிலத்தவராகிய நிலமாந்தர் எல்லாரும், தத்தம் நிலத்திற்குச் சிறப்புரிமையுடைய யாழ், பண், பறை முதலிய இசைக் கூறுபாடுகளை வளர்த்து வந்தனர்.

கிளி, குயில் முதவியவற்றின் இன்குரலினைக் கேட்டுணர்ந்த மக்கள், இயற்கையில் தோன்றும் அவ்வின்னோசைகளையொத்த ஓசைகளைத் தம்முள்ளிலிருந்து எழுப்பக் கற்றுக் கொண்டதுடன் படிப்படியாக மேன்மேலும் உயர்ந்து செல்லும் அவ்வோசையினை வகையாகப் பகுத்துக் கொண்டார்கள்.

**கலை**

தமிழக மக்களின் வாழ்க்கை முறைகளையும் சமயக் கோட்பாடுகளையும் மற்றும் அரசியல், சமூக நிலைகளையும் பார்க்கும் போது, அவர்கள் பல்லாற்றானும் சிறந்து மேம்பட்டு விளங்கிய ஓர் இனத்தார் என்பது புலப்படும். ஒரு நாட்டின் அமைதியே வளம்பல

பெருகவும் கல்வியும் கலையும் செழிக்கவும் காரணமாகும். தமிழகத்தே முடிமன்னர் மூவரும் மற்றும் அவர்களின் ஆணைக்குட்பட்ட குறுமன்னர்களும், பெருநிலக்கிழாரும் குடிகளின் நலத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். அரசர்கள் பகைவராலும் பிறவற்றாலும் நேரும் அச்சங்களையும் அவலங்களையும் போக்கி, குடிகளைக் குழந்தைகளைப் போலப் பேணினர். புலவர் பெரு மக்களையும் இசை, கூத்து முதலிய கலைகளில் வல்லாரையும் ஆதரித்துப் போற்றினர். மக்களும் நன்கு உழைத்து உண்டு உடுத்து விழாக் கொண்டாடி மகிழ்ந்தனர். ஆகவே அந்நாளில் இசை, கூத்து முதலிய இன்பக் கலைகளும் பொருள்களை அழகுற அமைக்கும் தொழில் திறமும் வாய்ந்து தமிழகம் புகழ் பெற்று விளங்கியது.

**இசையும் கூத்தும்**

இசையும் கூத்தும் மக்கள் வாழ்வோடு ஒன்றி அமைந்து இருந்தன. இயற்கையின் எழுச்சிகள் அவர்களுக்கு இன்ப உணர்ச்சிகளை ஊட்டின. முழை பெய்யும் யாழிசைக் கொப்ப இன்பம் செய்தலைக் கண்டனர். தும்பி, வண்டு, மியிறு இவற்றின் ஒலி யாழிசையோடு குழலிசையையும் நினைப்பூட்டுகிறது. வாத்தியங்களின் இசையைப் போல அமைந்தது புறாவின் குரல் தூம்பு என்னும் இசை யானையின் மூச்சு ஒலியை யொத்து அமைந்தது. தட்டையின் ஒலி தவளைக் குரலை நினைவு ஊட்டியது. இனிய சொல்லை யாழிசைக்கு ஒப்பிட்டனர். குழல் இணைவது போல் அழுதனள் என்பதனால் இது உணரப்படும்.

கல்மனத்தையும் கரையச் செய்து அன்பு கொள்ளச் செய்யும் ஆற்றலைப் படைத்து இருந்தது இந்த இசைக்கலை. ஆறலை கள்வரது சினத்தைத் தணித்து, அவர்களிடத்திலே உள்ள மறத்தைப் போக்கி, அவர் கொண்ட படைக்கலங்களையும் கைவிடும்படி செய்ய வல்லது யாழிசை என்று கூறப்பட்டுள்ளது. குத்துக்கோல்காரர்களின்

அடக்குமுறைகளுக்கும் கட்டுப்படாது மதங்கொள்ளும் யானைகள் கூட யாழிசைக்கு கட்டுப்பட்டு நிற்கும் என்பதும் , உடன் தானே அதனைக் கொல்ல பற்றைய முடிக்க அதன் வல்லோசையைப் பெறாது, உயிர் விட்டு விடும் என்பதும்,

**" மறையின்தன் யாழ் கேட்ட மானை அருளாது,**
**அறைகொன்று, மற்று அதன் ஆர் உயிர் எஞ்ச,**
**பறை அறைந்தாங்கு ஒருவன் நீத்தான்"[9]**

**" அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்**
**இன்பமும் துன்பமும் உடைத்தே**
**தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே"[10]**

என வருவனவற்றால் தெரியவரும்.

**இசைக்கருவிகள்**

இசைக்கருவிகள் பல அந்நாளில் வழக்கத்திலிருந்தன. அவை யாழ், முழா, முழவு, தண்ணுமை, முரசு, ஆகுளி, மலைபடு, பதலை, கிணை, தடாரி, துடி, மத்தரி, எல்லரி, வயிர், கோடு, தூம்பு, சங்கு முதலியனவாம்.

**ஊதுகொம்பு**

இவற்றுள் வயிர் என்பது ஊதுவதற்குரிய நீண்ட குழல் போன்ற ஒரு வாத்தியம். இதனைக் கோடு தூம்பு என்றும் அழைப்பர். இது மூங்கிலினது கண்ணைத் திறந்து அமைக்கப்படுவது, யானையின் கையைப் போன்ற உருவத்தை உடையது. இதனைப் பெருவாத்தியம் என்று உரைக்கிறார் பழைய உரைகாரர். தினைப்புனங்காவலர் பறவை, விலங்கு முதலியவற்றை ஓட்டுவதற்கும் இதனை ஊதுவது உண்டு.

குழல் ஏழு துளைகளையோ அல்லது ஐந்து துளைகளையோ கொண்ட ஓர் இசைக்கருவி. ஆயர்கள் ஆநிரையைத் திரட்டுவதற்கு இதனை ஊதுவது இயல்பாக இருந்தது, ஆயர்தம் குழல் இசையும் ஊர்களில் கேட்கும்.

### யாழ்

யாழ், சீறியாழ் என்றும் பேரியாழ் என்றும் இருவகையினவாம். யாழின் உறுப்புக்களாகிய, மருப்பு, பத்தல், வாய், போர்வை, திவவு என்னும் வார்க்கட்டு, கடை, ஆணி முதலியன பொருநராற்றுப்படையில் விளக்கி உரைக்கப்பட்டுள்ளன. பொன்னை வடித்து அமைத்தாற் போன்று முக்கிய நரம்புகளை யாழில் பிணைத்து இருப்பர். விரலினால் நரம்புகளைத் தடவியும், உருவியும், வடித்தும், தெறித்தும், ஒன்றைவிட்டு ஒன்றைத் தெறித்தும் இசையை எழுப்புவர்.

**“ வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்**
**சீருடை நன்மொழி நீரோடு சிதறி”**[11]

என்பது யாழ் மீட்டிய தன்மையை விளக்குவதாகும். யாழை மீட்டும் காலத்து அதனை இடப்பக்கமாகத் தழுவிக் கொண்டு வாசிப்பர்.

**“தெய்வப் பிரமம் செய்கு வோரும்”**[12]

என்பதற்குத் “தெய்வத் தன்மையையுடைய பிரம வீணைய எழுப்புவோரும்” என்று கருத்துரைப்பர்.

### தோற்கருவிகள்

தோலால் போர்த்தப்பட்டவை பறை, முரசு, தண்ணுமை என்பனவாம். முரசு மிகப்பெரிய வாத்தியம் அரசு சின்னங்களில் இ∴தொன்று அரசர்க்கு வீரமுரசு, நியாய முரசு, தியாக முரசு என மூவகை முரசுகள் உள. இதனால் அரசரை “முரசு மூன்று ஆள்பவர்” என்று குறிப்பிடுவர்.

பறை இதற்கடுத்தபடியாகக் கூறத்தகும். தொண்டகச் சிறு பறைகள் தொண்டகம் முதலிய வேறு பெயர்களாலும் வழங்கப்படும் என்பதும் தெரிய வருகிறது. ‘ஆகுளி’ என்பதைச் சிறுபறை யென்றே பழைய உரைகாரர் குறிப்பிடுகின்றார். பதலை என்பது ஒரு கண்ணை உடைய பறையாகும். இதனைக் கிணை எனவும் அழைப்பர். இது யானையினது பாதம் போன்றது தடாரி என வழங்குதலும் இப்பறையேயாம். “மதியத் தன்ன என் அரிக்குரல் தடாரி” என்பதனால் நிறைமதி போன்ற வடிவமும் வண்ணமும் கொண்டதாய் இது இருக்கும் என்பது பெறப்படும்.

முரசு, பறை முதலியன எல்லாம் கோலால் அடித்து இயக்கப்படுவதாகும். முழவு என்பதும் பறையே இதனுடைய அடிக்கும் பகுதியில் மண் எனப்படும் மார்ச்சனை தடவப்பட்டிருக்கும். துடி எனப்படும் சிறு பறையும் கையால் இயக்கப்பெறும் ஒரு வாத்தியமேயாகும். தட்டை என்னும் இயத்தைத் ‘தட்டைப்பறை’ என்பர். அமை அறுத்து இயற்றிய மூங்கிலைக் கணுவுக்குக் கண் உள்ளாக நறுக்கி பலவாகப் பிளந்து, கட்டப்படுவதோர் கருவி என்பர். இதனை பின்வரும் பல்வேறு சங்க இலக்கியப் பாடல்களின் அடிகளான,

**“ பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஓப்பி”**[13]

**“ சிறுதினைப்படு கிளி கடீஇயர், பல்மாண்**
**குளிர் கொள் தட்டை மதன்இல புடையா”**[14]

**“ஒலிகழைத் தட்டைபுடையுநர்”**[15]

**“தடையும் புதைத்தனை”**[16]

போன்றவற்றால் இதன் இயல்பு உணரப்படுகிறது.

**பாடலும் ஆடலும்**

தாளத்திற்கும் இசைக்கும் ஏற்ப மிடற்றால் பாடலும் இவற்றிற் கேற்ப ஆடலும் உண்டு. "பருக்கோட்டு யாழ் பக்கம் பாடலொடு ஆடல்" என்பது இயங்களால் எழுப்பப்படும் இசையும் பாடலும் ஒத்து அமைவதைப் புலப்படுத்தும் தாளத்தின் தன்மையை முன் கையால் ஒற்றி அறிவதும் உண்டு.

**" ஒத்த குழலின் ஒலி எழ முழவு இமிழ்**
**மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி,**
**ஒத்து அளந்து, சீர்தூக்கி, ஒருவர் பிற்படார்**
**நித்தம் திகழும் நேர் இறை முன்கையால்**
**அத்தக அரிவையார் அளத்தல் காண்மின்"**[17]

என வரும் பாடற்பகுதிகள் மேற்கூறிய செய்தியின் உண்மையைப் புலப்படுத்துகின்றன.

**இசைநூல்**

இசை அமைதிகளை வரையறுத்து உணர்த்திய கலை நூலும் வழக்கத்தில் இருந்தது.

**" நல்இசை நிறுத்த நயம் வரு பனுவல்**
**தொல்இசை நிறீஇய உரைசால் பாண்மகன்**
**எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும்"**[18]

என்னும் அடிகளில் பாண்மகன் இசைநூலைக் கற்று பண்ணை இயக்கிய தன்மையை அறியலாம்.

**ஆடற்கலை**

ஆடற்கலையில் ஆடவரும் பெண்டிரும் ஈடுபட்டனர் எனினும், பெண்பாலர் ஆடுதலை பெரிதும் செய்தனர். பெரும்பான்மை கூத்தாடுவதற்குரிய இடம் அரங்கு என்றும் கூறப்படும், இந்த

ஆடுகளத்தில் வந்து கூத்தாடுவோரை நாடக மகளிர் என்றும் விறலியர் என்றும் அழைப்பர். இவர் ஆடும் கூத்தை மக்கள் திரளாகக் கூடிப்பார்த்தல் உண்டு. இரவின் முற்பகுதியில் இக்கூத்து நடைபெறுவது வழக்கம்.

**கலை நூல்கள்**

இது போன்றே மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஏனைய பொருள்களையும் அழகுறச் செய்து கலையுணர்ச்சியை ஒவ்வொரு துறையிலும் காட்டினர். அவ்வத்துறைகளை விளக்கும் நூல்களும் அக்காலத்தில் இருந்தன. பீமசேனன் செய்த பாகமுறைகளை விளக்கும் சமையற்கலை நூலைச் சிறுபாணாற்றுப் படை சுட்டுகிறது.

மனை வகுப்பதற்கு உரிய நூலும் அதை அறிந்த பொறியியல் வல்லுநர்களும் வாழ்ந்தனர். அவரவர் தகுதிக்கேற்ற வண்ணம் பல்வேறு வகையில் மனைகளை அமைக்கும் பாங்கினை அறிந்திருந்தனர். சித்திர வேலைப்பாடுகளுடன் அமைந்த இல்லமே ஓர் அழகிய சித்திரம் போல் கவர்ச்சிகரமாய் விளங்கியது. 'ஓவத்தன்ன வினை புனைநல்இ' எனப் புலவர் ஒருவர் இதனைக் குறிப்பிடுகின்றார்.

களவுத்தொழில் புரிவார்களுக்கும் அவரை கண்டுபிடிப்பதற்கும் தக்க வழிமுறைகளைக் காட்டும் நூலும் இருந்ததாம். இதனைக் 'காவடநூல்' என்பர்.

அரசியல் நெறிமுறைகளை மன்னர்க்கும் மற்றைய பணியாளர்களுக்கும் வகுத்துரைத்த நாளும் இருந்தது. தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தான் வென்ற பகைவர்களுக்கு அரசு இரலக்கணத்தை நூல் முறைப்படி காட்டி பெரியோர் சென்ற நெறியில் நடக்குமாறு அறிவுறுத்தினானாம்.

பொதுவான தருமங்களை விளக்கும் அறநூலும் வழங்கி வந்தது. அறநூல் விதித்தவற்றையும் விலக்கியவற்றையும் எடுத்துக்காட்டி மக்களுக்கு அறிவுரை கூறினர்.

**ஐம்பூதங்கள்**

மக்கள் தாங்கள் வாழும் நாட்டளவில் நில்லாது உலகத்தைப் பற்றிய செய்திகளையும் அறிந்து இருந்தனர். மிகப் பெரிய அளவினதாய் விரிந்து பரந்த ஓர் பெரும் பரப்பாகவும் கடல் சூழ்ந்ததாகவும் அவர்தம் காட்சி உலகம் விளங்கிற்று. அதில் விளங்கிய பல பெரிய மலைகளும் அவர்தம் அறிவுக்கு எட்டியிருந்தன.

**" ஓங்குதிரை வியன் பரப்பின்**
**ஒலி முந்நீர் வரம்பு ஆக**
**தேன் தூங்கும் உயர்சிமைய**
**மலை நாறிய வியல் ஞாலத்து"**[19]

மலைகளோடு விளங்கும் இப்பெரிய உலகம் அளந்து காண்பதற்கு மிக அருமையானது நிலம் மட்டுமன்று நீர், தீ, வளி, விசும்பு ஏனையவும் இங்ஙனமே அளக்க இயலாதனவாம்.

**இல் அமைப்பு**

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐவகை நிலங்களிலும், சிற்றூர்களிலும், பேரூர்களிலும் பாணர்கள் மற்றும் மன்னர்கள் அவர்களது பொருளாதார சூழலுக்கு ஏற்ப இல்லங்களை அழகாக அமைத்திருந்தனர். தங்கள் வசதிக்கு ஏற்றார்போல் அணிகலன்களையும் அணிந்திருந்தனர்.

**குறிஞ்சி நில இல்லங்கள்**

மலையும் மலை சார்ந்த இடமாகிய குறிஞ்சி நிலத்தின் தினை முதலிய பயிர்களைத் தின்னவரும் யானை, பன்றி முதலிய

விலங்குகளையும் கிளி முதலிய பறவைகளையும் விரட்டுவதற்காகக் கானவர் உயர்ந்த மரக்கிளைகளில் பரண் கட்டினர் என்பதை,

**“ வேழம் காவலர் குரம்பை ஏய்ப்பக்**

**கோழி சேக்கும் கூடுடைப் புதவின்”[20]**

என்ற பாடல் அடிகளால் அறியலாம்.

**பாலை நில இல்லங்கள்**

உணவுப் பொருள்களைப் பயிர் செய்ய இயலாத நீர் வளமற்ற நிலம் பாலையாகும். அதலால் பாலை நிலம் பெரும்பாலும் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் இடையில் அமைந்திருக்கும். அங்கு வெப்பம் மிகுதி, நல்ல நீர் கிடைத்தல் அரிது. அங்கு விளைச்சல் இல்லாமையால் பாலை நில மக்களுள் சிலர் பாலை நில விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடுவர். சிலர் ஆறலைக் கள்வராகிப் பிழைப்பர். அவர்தம் இல்லங்கள் சிறுகுடில்களேயாகும். கோடை காலங்களில் அவ்வில்லங்களில் இருப்போர் வெயிலால் துன்புறுவர் என்பதை,

**“உறுவெயிற்கு உலைஇய உருப்புஅவிர் குரம்பை”[21]**

என்ற அடியால் அறியலாம்.

அக்குடில்கள் வேலின் முனைய ஒத்த கூர்மையினையுடைய முனை கொண்ட ஈந்தினுடைய இலையால் வேயபட்டவை.அக்குடில்களில் மான் தோலையே படுக்கையாகக் கொண்டு பிள்ளையைப் பெற்ற எயின மகள் முடங்கி கிடந்தாள் என்று பெரும்பாணாற்றுப்படை பேசுகிறது.

**“ யாற்று அறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்**

**வேற்றலை அன்ன வைந்நுதி நெடுந்நகர்,**

**ஈத்து இலை வேய்ந்த எய்ப்புறக’ குரம்பை**

**மான் தோல் பள்ளி மகவொடு முடங்கி**

ஈன்பிணவு ஒழியப்போகி, நோன்காழ்''[22]

என்ற அடிகளால் அறிய முடிகிறது. பெருவழிகளைக் காவல் புரிந்த எயினர் வாழ்ந்த இல்லங்களும் குடில்களேயாகும்.

**முல்லை நில இல்லங்கள்**

காடும் காடு சார்ந்த இடமும் முல்லையாகும் இந்நிலத்தில் ஆடுமாடுகளை மேய்த்த ஆயர் வாழ்ந்தனர். அவர்கள் வாழ்ந்த குடில்கள் வரகுத்தட்டையால் வேயப்பட்டவை அவற்றின் கால்களில் ஆட்டுமறிகள் நின்று தின்னத்தக்க தழைகள் கட்டப்பட்டிருந்தன. குடிலின் கதவு கழிகளால் கட்டப்பட்டது குடிலின் வாயிற்கதவு சிறியதாக இருந்துள்ளது. அக்குடிலில் வரகுக் கற்றைகளால் வேய்ந்த சேக்கை இருந்தது ஆட்டுக் கிடாயின் தோல்களே பாயாகப் பயன்பட்டன. குடிலின் முற்றத்தில் சிறிய முளைகள் பதிக்கப்பட்டிருந்தன. அவற்றில் நெடிய தாம்புகள் கட்டப்பட்டிருந்தன. அவை ஆடுமாடுகளைக் கட்டப் பயன்பட்டன. இங்ஙனம் ஆயர் வாழ்ந்த இல்லங்களைக் கொண்ட சிற்றூர், காட்டு முள் வேலியினை உடையதாயிருந்தது என்பதை,

"முரண்தலை கழிந்த பின்னை மறிய
குளகு அரை யாத்த குறுங்கால் குரம்பை
செற்றை வாயில், செறிகழிக் கதவின்
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்
அதளோன் துஞ்சும் காப்பின் உதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்
இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்''[23]

என்ற பாடலில் அறிய முடிகிறது சவ்வாது மலையில் வாழ்ந்த ஆயர் ஆட்டுத் தோல்களை ஒன்றாகத் தைத்துப் படுக்கையாகப் பயன்படுத்தினர். இரவில் கொடிய விலங்குகள் தம் குடில்களிடம் வாராதபடி நெருப்பை எரித்தனர் என்பதை,

**“ மெய் உரித்து இயற்றிய மிதி அதட்பள்ளி**

**தீத் துணையாகச் சேந்தனர் கழிமின்”[24]**

என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

**மருத நில இல்லங்கள்**

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதமாகும். மருதம் நீரும் பசுமையான வயல்களும் தோட்டங்களும் தோப்புகளும் சோலைகளும் நிறைந்துள்ள இடமாகும். உழவர் வயல்வரப்பில் தங்கிப் பயிர்களைக் காவல்காக்கப் புதிய வைக்கோலால் வேய்ந்த கவிந்த குடிலை அமைத்துக் கொண்டனர். அதன் முற்றத்தில் உழத்தியர் அவல் இடித்தனர் என்பதை,

**“ பழஞ்சோற்று அமலை முனைஇ வரம்பில்**

**புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்**

**அவல்எறி உலக்கைப் பாடுவிறந்து அயல்”[25]**

என்று பெரும்பாணாற்றுப்படை உரைக்கிறது.

வளமுடைய ஊர்களில் உழவர் வீடுகளின் முற்றத்தில் கன்றுகளைக் கட்ட நெடிய தாம்புகளைக் கொண்ட முளைகள் நடப்பட்டிருந்தன. நீண்ட ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினையுடைய குதிர்கள் இருந்தன. பிள்ளைகள் அந்த முற்றத்தில் சிறுதேர் உருட்டி விளையாடினார்கள் என்பதை,

**“ பகட்டு ஆ ஈன்ற கொடுநடைக் குழவிக்**

**கவைத் தாம்பு தொடுத்த காழ்ஊன்று அல்குல்**

**..................................................................**

**தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த**

**ஊரா நல்தேர் உருட்டிய புதல்வர்”[26]**

என்ற பாடல் வழி அறியமுடிகிறது.

**நெய்தல் நில இல்லங்கள்**

தொண்டைநாட்டுத் துறைமுகப்பட்டினம் பிற்காலத்தில் மாமல்லபுரம் எனப் பெயர் கொண்டதாகும். அது வாணிகத் தலமாய் இருந்தமையின், செல்வச் செழிப்போடு இருந்தது. எனவே, அதில் பல தெருக்கள் இருந்தன. அவற்றில் இருந்த வீடுகள் மாடங்களைப் பெற்று உயர்ந்திருந்தன. 'தேவர் உலகத்தைத் தீண்டும் மாடங்கள்' என்று பெரும்பாணாற்றுப்படை அவ்வில்லங்களைக் குறிப்பிடுகிறது. அம்மாடங்களில் பந்து விளையாடினர். அம்மாளிகைகளின் முன் இருந்த மணலில் அம்மாடங்களுக்குரிய செல்வ மகளிர் அமர்ந்து கழங்காடினர் என்பதை,

**" நெல்உழு பகட்டொடு கறவை துன்னா**
**ஏழகத் தகரோடு எகினம் கொட்கும்**
**.......................**
**கைபுனை குறுந்தொடி தத்த பையய**
**முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்"[27]**

என்ற பாடல் வரிகள் விளக்குகிறது.

**தலைக்கோலம்**

முருகப் பெருமான் எழுந்திருளியுள்ள திருப்பரங்குன்றத்துச் சோலையில் விளையாடிக் கொண்டிருந்த சூரர மகளிர் சீதேவி என்னும் தலைக் கோலத்துடனே வலம்புரி வடிவாகச் செய்த தலைக் கோலத்தையும் தலையில் வைத்து, நெற்றியின் கண் சுறாவினது வாயாகப் பண்ணின தலைக்கோலம் தங்கப் பண்ணினர் என்பதை,

**" தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின் வைத்துத்**
**திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்**
**மகரப் பகுவாய் தாழமண் ணுறத்து"[28]**

என்ற பாடலால் அறியலாம். விறலி தன் ஒப்பனை மிகுந்த கூந்தல் அழகு பெறத்தக்க முறையில் பொன்மாலை அணிந்திருந்தாள். என்பதை,

**" புனைஇருங் கதுப்பகம் பொலிய பொன்னின்**

**தொடைஅமை மாலை விறலியர் மலைய"[29]**

என்ற பாடல் கூறுகிறது. இதன் மூலம் அக்காலப் பெண்கள் தலைக்கோலம் அணிந்தனர் என்பதை அறிய முடிகிறது.

**காதணிகள்**

முருகப் பெருமான் பொலங்குழையை அணிந்திருந்தான். விறலியர் பூங்குழை அணிந்திருந்தனர். ஆயர் மகள் காதுகளில் சிறுகுழை அசைந்தது மருதநிலத்து மக்களின் காதுகளில் பொலங்குழை பொலிந்தது என்பதை,

**" வண்டல் ஆயமொடு உண்துறைத் தலைஇ**

**புனல்ஆடு மகளிர் இட்ட பொலங்குழை"[30]**

என்ற அடிகளால் அக்காலத்தில் காதுகளில் குழை என்ற ஒரு வகையான அணியை அணிந்திருந்தனர் என்பதை அறியலாம்.

**உணவு**

மனிதன் உயிர் வாழ இன்றியமையாத பொருள் உணவாகும் பழங்கால மனிதனது முதல் தொழிலே உணவுத் தேடலாக இருந்தது. அவன் இயற்கையாகக் கிடைத்த காய்களையும் விதைகளையும் கிழங்குகளையும் உண்டான். பின்னர் விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடி அவற்றின் இறைச்சியைப் பதப்படுத்தாமலே உண்டு வாழ்ந்தான். அறிவும் ஆராய்ச்சியும் பெருகப் பெருகத் தீயை உண்டாக்க அறிந்தான். அதன் பின்னரே தான் பச்சையாய் உண்டு வந்த பொருள்களைப் பக்குவப்படுத்தி உண்ணத் தொடங்கினான்.

குறிஞ்சி நிலத்தார் உணவு

சோழநாட்டுக் குறிஞ்சிநில மக்கள் தேனையும், கிழங்கையும் உண்டார்கள். பிற நிலத்தார்கள் விற்ற மீன், நெய் பறவைகளை வாங்கிச் சென்றார்கள் என்பதை,

**" தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறுவு மறுகவும்"**[31]

என்ற பாடலால் அறியலாம்.

நன்னனுக்குரிய சவ்வாது மலையின் அடிவாரத்தில் இருந்த சிற்றூர்களில் வாழ்ந்த மக்கள் தினைச்சோறும் நெய்யில் வெந்த இறைச்சியும் உண்டார்கள் என்பதை,

**" பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேலையொடு**
**குரூஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவீர்"**[32]

என்ற அடிகளால் அறியலாம்.

நன்னனுடைய மலைகளைச் சேர்ந்த குறிஞ்சி நிலத்தார் பெண் நாய் கடித்த உடும்பின் இறைச்சியையும் கடமான் இறைச்சியையும் உண்டனர். நெல்லாற் சமைத்த கள்ளையும் தேனால் செய்த மூங்கில் குழையுள் முற்றிய கள்ளையும் பருகினர். பலாக்கொட்டை, மா, புளிநீர், மோர் ஆகிய இவற்றைக் கொண்டு தயாரித்த குழம்பையும் மூங்கில் அரிசிச் சோற்றையும் உண்டனர் என்பதை,

**" வேய்பெயல் விளையுள் தேக்கட் தேறல்**
**குறைவு இன்று பருகி, நறவு மகிழ்ந்து, வைகறை**
**.......................................**
**நறுமலர் அணிந்த நாறு இரு முச்சிக்**
**குறமகள் ஆக்கிய வால் அவிழ் வல்சி"**[33]

என்று மலைபடுகடாம் பாடல் விளக்குகிறது.

### பாலை நிலத்தார் உணவு

ஓய்மாநாட்டுப் பாலை நில மக்களான வேட்டுவர், இனிய புளியிட்டுச் சமைத்த சோற்றையும் ஆமாவின் சூட்டிறைச்சியையும் உண்டனர் என்பதை,

> **" எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு**
> **தேமா மேனிச் சில்வளை ஆயமொடு**
> **ஆமான் சூட்டின அமைவரப் பெறுகுவிர்"[34]**

என்ற பாடல் வரிகள் கூறுகின்றன.

தொண்டை நாட்டுப் பாலைநில மக்கள் புல்லரிசியைச் சேர்த்து நிலவு வெளிச்சத்தில் உரலில் போட்டு குற்றிச் சமைத்த உணவை உப்புக்கண்டத்தோடு உண்டார்கள். விருந்தினர்க்குத் தேக்கிலையில் உணவு படைத்தார்கள். மேட்டு நிலத்தில் விளைந்த ஈச்சங் கொட்டை போன்ற நெல்லசிரிசிச் சோற்றையும் உடும்பின் பொரியலையும் உண்டார்கள் என்பதை,

> **" களர்வளர் ஈந்தின் காழ்கண் டன்ன**
> **சுவல்விளை நெல்லின் செவ்அவிழ்ச் சொன்றி**
> **குமலி தந்த மனவுச்சூல் உடும்பின்**
> **வறைகால் யாத்தது, வயின்தொறும் பெறுகுவிர்"[35]**

என்று சிறுபாணாற்றுப்படை தெரிவிக்கிறது.

### முல்லை நிலத்தார் உணவு

தொண்டை நாட்டு முல்லை நிலத்தார் பாலையும் தினையரிசிச் சோற்றையும் உண்டனர். முல்லை நிலச் சிற்றூர்களில் இருந்தவர் வரகரிசிச் சோறும் அவரைப் பருப்பும் கலந்து செய்த 'கும்மாயம்' எனப் பெயர் பெற்ற உணவை உண்டனர் என்பதை,

“ நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன
குறுந்தாள் வரகின் குறள் அவிழ்ச் சொன்றி,
புகர் இணர் வேங்கை வீகண் டன்ன,
அவரை வான்புழுக்கு அட்டி, பயில்வுற்று
இன்சுவை மூரல் பெருகுவீர்”[36]

என்ற பெரும்பாணாற்றுப்படை பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

நன்னனது மலைநாட்டு முல்லை நிலத்தார் சிவந்த அவரை விதைகளையும் மூங்கில் அரிசியையும் மேட்டு நிலத்தில் விளைந்த நெல்லின் அரிசியையும் புளிக் கரைக்கப்பட்ட உலையில் போட்டு குழைந்த புளியங் கூழாக்கி உட்கொண்டனர் என்பதை,

“ தொய்யா வெறுக்கையோடு துவன்றுபு குழீஇ
செவ்வி பார்க்கும் செழுநகர் முற்றத்து,
பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்கும்.”[37]

என்ற பாடல் விளக்குகிறது.

பொன்னை நக்கினாற் போன்ற நுண்ணிய ஒரே அளவுடைய அரிசியை வெள்ளாட்டு இறைச்சியுடன் கூட்டி ஆக்கிய சோற்றையும் தினை மாவையும் முல்லை நிலமக்கள் உணவாக உட்கொண்டனர் என்பதும் சங்கப்பாடல்கள் வழி புலனாகிறது.

### மருத நில மக்கள் உணவு

உயிர் வாழ உணவு மிக முக்கியமான ஒன்று. உடலுக்குத் தேவையான சத்துக்களைத் தரக்கூடிய உணவு வகைகளை சங்க கால மக்கள் சமைத்து உண்டு மகிழ்ந்தனர். சங்ககால மக்களின் உணவு முறைகள் நற்றிணையில் கூறப்பட்டுள்ளன. அவர்களின் உணவு

வகையானது பருவச் சூழ்நிலை, வாழும் பொருளாதார நிலை ஆகியவற்றைப் பொறுத்தே அமைகிறது.

பெரும்பாலும் அக்காலத்தில் உணவினை நீரிட்டு அவித்தல், வறுத்தல், சுடுதல், வற்றலாக்குதல், எண்ணெயிலிட்டுப் பொரித்தல், ஊற வைத்தல் போன்ற முறைகளைப் பின்பற்றியதை அறிய முடிகிறது. சங்க கால மக்கள் அசைவ உணவையே பெரிதும் விரும்பி உண்டனர்.

மருத நிலத்தில் வாழ்ந்த வேளாண்குடி மக்கள் வெண்சோற்றையும், நண்டும், பீர்க்கங்காயும் கலந்த கூட்டையும், பழைய சோற்றையும் உண்டனர் எனச் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன இவர்கள் அவலைக் கூட உண்டனர்.

நீர் வளமும் நில வளமும் நிறைந்த மருத நிலத்து மக்கள் கரும்பினையும் அவலையும் குறிஞ்சி நிலத்தார்க்குக் கொடுத்து அவர்களிடமிருந்து மான் தசையையும் கள்ளினையும் பெற்று உண்டனர். தொண்டை நாட்டு மருத நில மக்கள் நெற் சோற்றுடன் பெட்டைக் கோழிப் பொரியல் உண்டதுடன் பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, வள்ளிக்கிழங்கு ஆகியவற்றையும் உண்டனர்.

**நெய்தல் நிலத்தார் உணவு**

நெய்தல் நில மக்களான பரதவர் அடிப்படைத் தொழில்களாக மீன் வேட்டை, மீனை உலர வைத்தல், உப்பை விளைவித்தல் போன்றவற்றைச் செய்தனர். கடலில் மீன் பிடித் தொழில் செய்யும் பரதவர்களின் மீன் வேட்டைத் தொழில் பல பாடல்களில் பதிவாகியுள்ளது.

**"மீன் வேட்டை வாய்க்க மழை பொய்யக்காமல் பெய்யும்"**[38]

என்று அறிஞர் கூறுவர். மழை பெய்யும்போது மீன்கள் கடலின் மேற்பரப்பிற்கு வருவதும் கடலில் கலக்கும் நீரோடைகளில் எதிர் நீச்சிலிட்டு வருவதும் இயல்பு. இச்சூழலை மீன்பிடித் தொழில் செய்பவர்கள் நல்வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்வர்.

நெய்தல் நில மக்கள் தங்கள் உணவாக இறால், மீன் வயல் ஆமை ஆகியவற்றைப் பக்குவம் செய்து உண்டனர். பனங்கள் நெல்லரிசி போன்றவற்றையும் உண்டனர். கள் விற்கப்படும் இடங்களில் மீன் இறைச்சி விலங்கிறைச்சி ஆகியனவும் விற்கப்பட்டன.

ஓய்மா நாட்டு நெய்தல் நிலத்தார் உலர்ந்த குழல் மீனின் சூடான இறைச்சியுடன் கள் உண்டதாக அறியப்படுகிறது. தொண்டை நாட்டுப் பட்டினத்தில் கொதிக்க வைத்த கருப்பஞ்சாறு பருகினர்.

**சான்றெண் விளக்கம்**

1. தொல்.அகம் நூ.எ.5
2. மேலது அகம்., நூ.எ.5
3. மேலது., அகம்., நூ.எ.23
4. மேலது., அகம்., நூ.எ.24
5. மேலது., பொருள்., நூ.எ.19
6. குறள் 392
7. புறம்., பா.எ.30 பா.வ.ள். 1-7
8. பட்டினப்பாலை பா.வ.ள். 169-171
9. கலித்தொகை பா.எ. 143 பா.வ.ள்.10-12
10. நற்றிணை பா.எ. 304 பா.வ.ள். 8-10
11. பொருநராற்றுப்படை வரி 23-24
12. பரிபாடல் பா.எ. 19 பா.வ.ள்.40-42
13. அகம்., பா.எ. 388 பா.வரி 6
14. மேலது., பா.எ. 32 பா.வரி 6
15. மலைபடுகடாம் பா.வரி 328
16. பரிபாடல் பா.எ. 8 பா.வரி 14
17. மேலது பா.எ.12, பா.வ.ள்.40-44
18. அகம்., பா.எ.352 பா.வ.ள். 14-16
19. மதுரைக்காஞ்சி பா.வ.ள். 1-4
20. பெரும்பாணாற்றுப்படை பா.வ.ள். 51-52
21. சிறுபாணாற்றுப்படை, பா.வரி 174
22. பெரும்பாணாற்றுப்படை பா.வ.ள். 86-90
23. மேலது., பா.வ.ள். 147-154
24. மேலது., பா.வ.ள். 161-162
25. மேலது., பா.வ.ள். 224-226
26. மேலது, பா.வ.ள். 243-249
27. மேலது., பா.வ.ள். 325-335

28. திருமுருகாற்றுப்படை, பா.வ.ள். 23-25

29. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள். 485-486

30. மேலது., பா.வ.ள். 311-312

31. பொருநராற்றுப்படை, பா.வ.ள். 214-215

32. மலைபடுகடாம், பா.வ.ள். 168-169

33. மேலது., பா.வ.ள். 171-183

34. சிறுபாணாற்றுப்படை, பா.வ.ள். 175-177

35. பெரும்பாணாற்றுப்படை, பா.வ.ள். 130-133

36. மேலது., பா.வ.ள். 192-195

37. மேலது., பா.வ.ள். 434-436

38. ஞா.ஸ்டீபன், நெய்தல் நில வாழ்வியல், ப.215

# முடிவுரை

பண்டைத் தமிழ் மக்களின் பொற்காலமாகக் கருதப்பட்ட சங்க காலத்தில் எழுந்த மேல்கணக்கு நூல்களான சங்க இலக்கியங்கள், நமது முன்னோர்களின் அக, புற வாழ்க்கைகளைச் சிறப்பாகப் பதிவுசெய்துள்ளன. அம்மக்களின் வாழ்க்கைத்தரவுகளை ஆராய்ந்து வருங்கால சந்ததியினர் பயன்பெறும் நோக்கில் இவ்வாய்வு அமைக்கப்பட்டுள்ளது.

அவ்வகையில் தமிழ் மக்களின் பண்பாட்டு நிலைக்களன்களாக அமைந்த சமூக அமைப்பு, மனித உறவுகள், மக்கள் மேற்கொண்ட தொழில்கள், தெய்வ நம்பிக்கைகள், வழிபாட்டு முறைகள், பண்பாடு சார்ந்த பழக்கவழக்கங்கள் முதலானவை பகுத்து சான்றுகளுடன் ஆராயப்பட்டுள்ளன.

முதல் இயலான "சங்க இலக்கியங்கள் சுட்டும் சமூகம்" என்னும் பொருண்மையில் அமைந்த இயலில் முச்சங்கங்கள் பற்றிய வரலாறு எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு நூல்கள் எழுந்த காலங்கள் பற்றிய வரலாறு கூறப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்கள் கூறும் ஐவகைத் திணை வகைப்பாடு குறித்தும், அந்நிலங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கைச் சூழல், செய்த தொழில், உணவு வகைகள், ஆடை ஆபரணங்கள், தெய்வ நம்பிக்கை மற்றும் வழிபாட்டு முறைகள் முதலானவை விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. சங்க கால மக்கள் வாழ்ந்த ஊர் அமைப்பு, நகரமைப்பு, வாழ்க்கைமுறை போன்றவையும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன. அகத்திணை மாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பரத்தையர் முதலானவர்களின் வாழ்க்கை படிநிலைகளும், புறத்திணை

மாந்தர்களான அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் போன்றவர்களின் சமூகப் பங்களிப்பும், மன்னர்கள் புலவர்களோடு கொண்டிருந்த அரசியல் சார்ந்த பதிவுகளும் இவ்வியலில் ஆராயப்பட்டு முடிவுகளாகக் கூறப்பட்டுள்ளன.

"சங்க இலக்கியங்களில் மனித உறவுகள்" என்னும் இரண்டாவது இயலில் ஐவகை நில மக்கள், ஆண் பெண் உறவு, தலைவன், தலைவி உறவு, தலைவன் பரத்தை உறவு, தனிமனிதனும் சமூகமும், அரசர் புலவர் உறவு, அரசர் கலைஞர் உறவு நிலை, சங்கப் பாடல்கள் உணர்த்தும் மனித நேய மாண்புகள், உறவு வழி மணம் முதலானவை விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

"சங்க இலக்கியங்களில் தொழில்கள்" என்னும் தலைப்பில் அமைந்துள்ள மூன்றாவது இயலில் நானில மக்களின் நிலம் சார்ந்த தொழில்கள் விளக்கப்பட்டுள்ளன. அவ்வகையில் வேட்டையாடுதல், ஆநிரைகள் மேய்த்தல், வேளாண் தொழில், மீன்பிடித்தல் மற்றும் உப்பு வணிகம் முதலான தொழில்கள் பற்றியும் மக்கள் பண்டமாற்று முறையை மேற்கொண்டது பற்றியும் சான்றுகளுடன் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

"சங்க இலக்கியங்களில் சடங்குகளும் நம்பிக்கைகளும்" என்னும் நான்காவது இயலில் ஐவகை நிலமக்கள் தாங்கள் வாழ்ந்த சூழ்நிலைகளுக்கேற்ப வேறுபட்ட வழங்கங்களைக் கொண்டிருந்ததையும். அச்சத்தின் காரணமாகவும், வருத்தத்தின் காரணமாகவும் தெய்வவழிபாடுகளை மேற்கொண்டதையும், அந்தந்த நிலங்களுக்கேற்ப பெருந்தெய்வ, சிறுதெய்வ வழிபாடுகள், விழா சடங்குகள், தொழில் சார்ந்த சடங்குகள், நம்பிக்கைகள் குறித்த பழக்கவழக்கங்கள் முதலானவையும் இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

“சங்க இலக்கியங்களில் பண்பாட்டு நிலைகளன்கள்” என்னும் ஐந்தாம் இயலில் சங்க கால மக்களின் கல்வி, ஆடற்பாடற் கலை, இசைக்கலை, இசைக்கருவிகள், இசைநூல் பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. மேலும் ஆற்றுப்படை நூல்கள் கூறும் இசைக் கலைஞர்களின் கலை மரபுகளும் அதனால் அவர்கள் பயன்பெற்ற பரிசில் வாழ்க்கையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

# முன்னுரை

இலக்கியங்கள் சங்கத் தமிழர்களின் வாழ்க்கை முறைகளையும், அக்காலச் சமுதாய அமைப்பினையும், பண்பாடு, வரலாறு, நாகரிகம், பழக்கவழக்கம் முதலான கூறுகளையும் எடுத்துக்காட்டுவனவாக அமைந்துள்ளன. மேலும், சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழ் மக்களின் அகவாழ்வினையும், புறவாழ்வினையும் விளக்கிக் கூறும் காலக் கண்ணாடிகளாகவும் விளங்குகின்றன.

அக வாழ்க்கைக்கும் மற்றும் புற வாழ்க்கைக்குமான இலக்கியக் கொள்கையினைத் தொல்காப்பியர் படைத்துள்ளார். சங்க இலக்கியங்கள் குறித்த ஆய்வுகள் நீண்ட நெடுங்காலமாகவே நிகழ்த்தப்பட்டு வருகின்றன என்பது தெளிவு. இவை குறித்த ஆய்வுகள் இன்னும் பெரும்பான்மையாக நிகழ்த்தப்பட வேண்டிய அவசியம் உள்ளது. தமிழிலக்கியங்கள் எண்ணிறந்த அளவில் பல்கிப் பெருகி, ஒவ்வொரு காலகட்டத்திற்கும் ஏற்ப பல்வேறு வடிவங்களில் வளர்ச்சியடைந்து வந்துள்ளன. மனித வாழ்வியலின் சாரமாக இலக்கியங்கள் திகழ்கின்றன.

தமிழ்மொழியின் தொன்மைச் சிறப்புக்கும், பழமைக்கும் பெருமைக்கும், செவ்வியல் தன்மைக்கும் சான்று பகர்வனவாக இவ்விலக்கியங்கள் விளங்குகின்றன. பல்வேறு காலங்களில் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த புலவர் பெருமக்கள், தாங்கள் கண்டும், கேட்டும் உணர்ந்த செய்திகளையும், தங்கள் வாழ்க்கை அனுபவங்களையும் பாடல்களாகப் பதிவு செய்துள்ளனர். தமிழ் இலக்கியங்கள் காலத்தால் அழியாத சிறப்பையும், உலக இலக்கியங்களோடு ஒப்பிடத்தக்க பெருமையையும் கொண்டுள்ளது எனலாம்.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்த தமிழ் மக்களின் காதலையும், வீரத்தையும், பண்பாட்டையும் பறைச்சாற்றுவனவாகவும், தமிழர்கள் சாதி சமயப் பூசலின்றி வாழ்ந்த பெருவாழ்வினையும், அறிவும் திறனும் மிக்கவர்களாகத் திகழ்ந்தமையையும் எடுத்துக் காட்டும் சான்றுகளாகச் சங்கத் தமிழிலக்கியங்கள் அமைந்துள்ளன.

சங்க இலக்கியங்களில் காணப்படும் சமூக அமைப்பும், அவ்வமைப்பில் காணப்படும் பழந்தமிழர்களின் பண்பாடும் பல்வேறு நிலைகளில் ஆராயத்தக்கதாகும். அவ்வகையில் அகம் மற்றும் புற இலக்கியங்களில் இருக்கும் பண்பாட்டு நிலைக்களன் அடிப்படையிலான நோக்கில் மக்களின் குடும்பம் மற்றும் சமுதாய நிலைகளில் காணப்பெறுகின்ற அக, புற ஒழுக்கங்கள், பழக்கவழக்கங்கள் மற்றும் சான்றுகள் போன்றவற்றை எடுத்துக் கூற முனைவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

### ஆய்வுத் தலைப்பு

சங்க காலமானது பழந்தமிழர் வாழ்வின் பொற்காலமாகத் கருதப்படுகிறது. அதற்குக் காரணம் பண்டைய காலத் தமிழர்களின் பண்பட்ட அகவாழ்க்கையும் தனித்துவமிக்க மன்னர் பெருமக்களின் புறவாழ்க்கையும் ஆகும். எனவே அதனை அடிப்படையாகக் கொண்டு **"சங்க இலக்கியங்களில் சமூக பண்பாட்டு நிலைக்களன்கள்"** என்னும் பொருண்மையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

### ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை நூல்களும், பத்துப்பாட்டு நூல்களும் முழுமையாக இவ்வாய்விற்கு எல்லையாக வரையறுக்கப்பட்டுள்ளது.

## ஆய்வு நோக்கம்

பழமையும் பெருமையும் வாய்ந்த சங்கத்தமிழ் இலக்கியங்களின் படைப்பின் சிறப்பினையும், சங்க காலத்தில் அவை பதிவு செய்துள்ள தமிழர்களின் அகம் மற்றும் புற வாழ்க்கையினையும், சமூக அமைப்பினையும் ஆய்வது இவ்வாய்வின் தலையாய நோக்கமாகும். பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் உயரிய பண்பாட்டினையும், அறச்செயல்களையும், இக்கால இளைய தலைமுறையினர் அறிந்து பண்பட வேண்டும் என்ற சீரிய நோக்கத்திலும் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு விளக்கமுறைத் திறனாய்வு, பகுப்புமுறைத் திறனாய்வு, எடுத்துரைப்புத் திறனாய்வு மற்றும் வரலாற்று முறைத் திறனாய்வு ஆகிய ஆய்வு அணுகுமுறைகளில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## கருதுகோள்

சங்ககாலத்தில் வாழ்ந்த பலதரப்பட்ட மக்கள் தனிமனித வாழ்க்கையிலும் பொது வாழ்க்கையிலும் மிகச் சிறந்த ஒழுக்கத்தினைக் கடைபிடித்தனர். அத்தகைய பண்பாட்டின் அடிப்படை நிலைக்களன்களை வருங்காலத் தலைமுறைகளுக்கு எடுத்துரைக்கும் நோக்கில் இவ்வாய்வின் கருதுகோள் அமைந்துள்ளது.

## ஆய்வுப் பகுப்பு

**"சங்க இலக்கியங்களில் சமூக பண்பாட்டு நிலைக்களன்கள்"** என்ற தலைப்பில் அமைந்த இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை,

முன்னுரை

இயல் - 1: சங்க இலக்கியங்கள் சுட்டும் சமூகம்

இயல் - 2: சங்க இலக்கியங்களில் மனித உறவுகள்

இயல் - 3: சங்க இலக்கியங்களில் தொழில்கள்

இயல் - 4: சங்க இலக்கியங்களில் சடங்குகளும் நம்பிக்கைகளும்

இயல் - 5: சங்க இலக்கியங்களில் பண்பாட்டு நிலைக்களன்கள்

முடிவுரை

துணை நூற்பட்டியல்

பின்னிணைப்புகள்

இயல் -1: **"சங்க இலக்கியங்கள் சுட்டும் சமூகம்"** எனும் முதல் இயலில் சங்கம் தோன்றிய வரலாறு, சங்ககாலத் தாய்வழிச் சமூகம், ஐவகை நில வரையறை போன்றவை விளக்கப்பட்டுள்ளன. ஐவகை நில மாந்தர்களின் ஒழுக்கங்கள், தொழில்கள், உறவுமுறைகள் மற்றும் பழக்கவழக்கங்கள் போன்றவை எடுத்துக் கூறப்பட்டுள்ளன. மேலும் அகத்திணை, புறத்திணை சார்ந்த ஒழுக்கங்களான காதலும், வீரமும் சங்கத் தமிழர்களின் இரு கண்களாகப் போற்றப்பட்டதைச் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது. அவ்வகையில் அகத்திணை மாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பரத்தை முதலானவர்களின் சமூகப் பங்கினை இவ்வியல் எடுத்துரைத்துள்ளது. அவ்வாறே புறத்திணை மாந்தர்களான அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் முதலானவர்களின் சமூகப் பங்களிப்பும் விவரிக்கப்பட்டுள்ளது. சங்க கால மன்னர்களின் வீரம், போர்ச்சிறப்பு, கொடைச்சிறப்பு ஆகியவற்றோடு பாணர், விறலியர் முதலான கலைஞர்களின் வாழ்வியல் நெறிகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க கால சமூகத்தில் புலவர் பெருமக்கள் பெற்றிருந்த சிறப்பையும், மன்னர்களும் புலவர்களும் கொண்டிருந்த நட்பின் மேன்மையும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

இயல் -2: **“சங்க இலக்கியங்களில் மனித உறவுகள்”** என்னும் இரண்டாவது இயலில் ஐவகை நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறை, குடும்ப உறவுகள், ஆண், பெண் உறவுகளில் பல்வேறு நிலைகள், தலைவன் தலைவி உறவு, தலைவி தோழி உறவு, தலைவி நற்றாய் உறவு, தலைவி செவிலி உறவு, தலைவன் பரத்தை உறவு, உறவு வழி மணம், ஏறுதழுவுதல், உடன்போக்கு, தனிமனிதன் சமூக உறவு மற்றும் சங்கப் பாடல்களில் மனித மாண்புகள் முதலானவை விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

இயல் -3: **“சங்க இலக்கியங்களில் தொழில்கள்”** என்னும் இவ்வியலில் சங்ககாலத் தமிழ் மக்கள் தங்கள் நுண்ணறிவின் திறத்தால் சமூக, பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாத பல்வேறு தொழில்களையும் மேற்கொண்டு வளர்த்து வந்தமை கூறப்பட்டுள்ளது. நானிலத்தைச் சார்ந்த மக்களின் அடிப்படைத் தொழில்களான வேட்டையாடுதல், ஆநிரை மேய்த்தல், வேளாண்மை, மீன்பிடித்தல் மற்றும் உப்பு விளைவித்தல் முதலானவை விளக்கப்பட்டுள்ளன. ஒரு நிலத்தில் உற்பத்தி செய்த பொருட்களை மற்ற நிலத்தில் வாழும் மக்களிடம் பண்டமாற்று முறையில் விற்பனை செய்து கொண்டதும் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

இயல்-4: **“சங்க இலக்கியங்களில் சடங்குகளும் நம்பிக்கைகளும்”** என்னும் நான்காவது இயலில் பண்டைய தமிழ் மக்கள் தாங்கள் வாழ்ந்த இடத்தாலும், சூழ்நிலைகளாலும் வேறு பல காரணிகளாலும் சிற்சில வேறுபட்ட பழக்கவழக்கங்களைக் கொண்டிருந்ததையும், அவற்றுள் ஒரு சில பழக்கங்கள் பரம்பரை வழக்கமாக வழிவழி தொடர்ந்து வந்து சடங்குகளாக மாறிவிட்டதையும்

ஆராயப்பட்டுள்ளது. இவ்வாறு மாறிவிட்ட சடங்குகள் போன்றனவெல்லாம் மக்கள் மனதில் வேரூன்றி விட்ட சிற்சில நம்பிக்கைகளின் விளைவே என்பது சங்க இலக்கியங்களின் வழி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அவ்வகையில் இயற்கை வழிபாடு, ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்களின் தெய்வ வழிபாடு, நடுகல் வழிபாடு, வேளாண் சடங்குகள், மழை பெய்யவும், நிற்கவும் வேண்டி செய்யப்பட்ட சடங்குகள், அருவ உருவ வழிபாடு, உயிர்பலி வழிபாடு மற்றும் பிற வழிபாடுகள் முதலானவை தக்க சான்றுகளுடன் விரிவாக ஆராயப்பட்டடுள்ளன.

இயல் -5: **"சங்க இலக்கியங்களில் பண்பாட்டு நிலைக்களன்கள்"** என்னும் ஐந்தாவது இயலில் பண்பாட்டு நிலைக்களன் என்பதன் விளக்கம், பண்பாட்டு நிலைக்களனின் நிலவியல் அமைப்பு வகைகள், ஐந்திணை வரிசை, பண்டைத் தமிழர் வாழ்வியல், அகவொழுக்க வகைகள், புறத்திணை, தமிழ் வேந்தர்களின் சிறப்பு, கல்வி வளர்ச்சி நிலை, முத்தமிழின் சிறப்புகள், எண் எழுத்து வகைகள், முப்பொருள் பகுப்பு, பண்டையத் தமிழர்களின் அறிவியல் அறிவுத்திறன், கலைத்திறன், இசைக் கலை ஆற்றல், இசைக்கருவிகள், இசை நூல்கள், பாடல் ஆடற் கலை, ஆற்றுப்படை இலக்கியங்கள் கூறும் பண்பாட்டு மரபுகள், உணவுமுறை முதலான சிறந்த பண்பாட்டுக்கு அடிப்படையான நிலைக்களன்கள் குறித்து இவ்வியல் விரிவாக ஆராய்ந்துள்ளது.

**முடிவுரை**

இறுதியாக முடிவுரையில் இவ்வாய்வின் ஒவ்வொரு இயலின் முடிவுகளும் தொகுக்கப்பட்டு முடிவுரையாக அமைக்கப்பட்டுள்ளது.

**துணைநூற்பட்டியல்**

இவ்வாய்வுக்கு பயன்படுத்தப்பட்ட முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், அகராதிகள், கலைக்களஞ்சியம் போன்றவை அகர வரிசைப்படுத்தப்பட்டு துணை நூற்பட்டியலாகத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்புகள்**

இதழில் வெளிவந்த கட்டுரைகள் பின்னிணைப்பாக இணைக்கப்பட்டுள்ளன.

# பொருளடக்கம்

# துணைநூற்பட்டியல்

## முதன்மை சான்றாதாரங்கள்

### எட்டுத்தொகை நூல்கள்

| | |
|---|---|
| நற்றிணை | குறுந்தொகை |
| ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து |
| பரிபாடல் | கலித்தொகை |
| அகநானூறு | புறநானூறு |

### பத்துப்பாட்டு நூல்கள்

| | |
|---|---|
| திருமுருகாற்றுப்படை | பொருநராற்றுப்படை |
| சிறுபாணாற்றுப்படை | பெரும்பாணாற்றுப்படை |
| முல்லைப்பாட்டு | மதுரைக்காஞ்சி |
| நெடுநல்வாடை | குறிஞ்சிப்பாட்டு |
| பட்டினப்பாலை | மலைபடுகடாம் |

## துணைமைச் சான்றாதாரங்கள்


1. அகத்தியலிங்கம் — **சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1997

2. அழகம்மை. கே.பி — சமூக நோக்கில் சங்க மகளிர்,
ஸ்டெபாஸ்ட் பிரஸ்,
சென்னை – 600013.
முதற்பதிப்பு – ஆகஸ்ட் - 2001

3. அழகம்மை. கே.பி — அகநானூற்றில் வாழ்வியல் நீதி நெறிகள்,
அழகு புவனேஸ்வரி வெளியீடு,
காரைக்குடி.
முதற்பதிப்பு – 2003

4. அனார்கலி. சு — குறுந்தொகையில் உளவியல் கருத்துக்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -2001

5. அனுராதா., இரா — சங்க இலக்கியத்தில் அறக்கருத்துக்கள்,
தமிழாய்வு மன்றம் பதிப்பகம்,
கொட்டிவாக்கம்,
சென்னை – 600096.
முதற்பதிப்பு -2007

6. அன்புச்செல்வி. மு
சங்க இலக்கியப் பெண்களின் மனித நேயம்,
பிரிண்ட் டெக் இந்தியா,
சென்னை -5.
முதற்பதிப்பு – செப்டம்பர் 2005

7. இளம்பூராணர். (உரை)
தொல்காப்பியம் (பொருளதிகாரம்),
கழக வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு – 1969

8. இராசமாணிக்கம். மா
பத்துப்பாட்டு ஆராய்ச்சி,
சென்னை பல்கலைக்கழகம்.
முதற்பதிப்பு -1970

9. கம்பராமாயணம்
(யுத்தகாண்டம்).
வர்த்தமானர் பதிப்பு,
சென்னை.
எட்டாம்பதிப்பு -1976

10. கருணாநிதி. மு
சங்கத்தமிழ்,
ராக்போர்ட் பப்ளிகேஷன்ஸ்(பி) லிட்., சென்னை.
முதற்பதிப்பு – ஆகஸ்ட் 1987

11. கலைஅரசி .தி. இலக்கணம் சுட்டும் அகவாழ்வு,
காவ்யா பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -2012

12. கார்த்திகேசு சிவத்தம்பி பண்டைத் தமிழ்ச் சமூகம்,
பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,
சென்னை -14.
முதற்பதிப்பு – ஜீன் 2010

13. குருநாதன்.இராம புறநானூறு புதிய பார்வை,
வானதி பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -1997

14. சக்தி தரும நடராசன் புலவர் சங்ககால இறைநெறியும் வாழ்வியல் நெறியும்,
ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம்,
சென்னை.
முதற்பதிப்பு -

15. சண்முகம்பிள்ளை .மு சங்கத்தமிழர் வாழ்வியல்
உலக தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை.
முதற்பதிப்பு -1997

16. சண்முகம். இரா. — வரவு கடாதலும் அறத்தொடு நிற்றலும்,
சரவணா பதிப்பகம்,
மதுரை -1
முதற்பதிப்பு - நவம்பர் -1992

17. சாலினி இளந்திரையன் — சங்கத்தமிழரின் மனிதநேய மணிநெறிகள்,
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை.
முதற்பதிப்பு - பிப்ரவரி- 1995

18. சிதம்பரம் பிள்ளை. த — சங்க இலக்கியத்தில் பரத்தமை,
மதுரை பதிப்பகம், மதுரை.
முதற்பதிப்பு -1980

19. சுப்பிரமணியன். சு.வே — சங்ககால மகளிர்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -2014

20. சுப்பிரமணியன். சு.வே — சங்க இலக்கியத்தில் அறத்தொடு நிற்றல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -2014.

21. சுப்ரமணியன். ந — **சங்ககால வாழ்வியல்,**
நியூ செஞ்சரி புக் ஹவுஸ்,
சென்னை.

22. சுப்புரெட்டியார். ந — **அகத்திணைக் கொள்கைகள்,**
பாரி நிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு -1981

23. செல்வராசு சிலம்பு. ரா — **சமூகவியல் நோக்கில் தமிழ் மரபுகள்,**
பாரி நிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு -1980

24. சேதுராமன். பி — **ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல்,**
பாவை பிரிண்டர்ஸ்,
சென்னை -14.
முதற்பதிப்பு – டிசம்பர் 2011.

25. சொக்கலிங்கம். சு.ந. — **வாழ்க்கைக்கு அறம்,**
பத்மா பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – டிசம்பர் 2001

26. சோமசுந்தரனார்.பொ.வே | **பத்துப்பாட்டு மூலமும் உரையும்,** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. முதற்பதிப்பு -1971.

27. ஞானசம்பந்தன். ஆ.ச. | **அகமும் புறமும்,** தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம், சென்னை. முதற்பதிப்பு -1991

28. தட்சிணாமூர்த்தி. அ | **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. முதற்பதிப்பு - ஜீலை -2016

29. தட்சிணாமூர்த்தி. அ | **தமிழர் நாகரிகமும் பண்பாடும்,** யாழ் வெளியீடு, சென்னை. முதற்பதிப்பு

30. நச்சினார்க்கினியர் (உரை) | **அகப்பொருள் விளக்கம்,** கழக வெளியீடு, சென்னை. ஏப்ரல் -1969.

31. நாற்விராசர் நம்பி அகப்பொருள் விளக்கம்,
கழக வெளியீடு, சென்னை.
ஏப்ரல் - 1969.

32. துரைசாமிப்பிள்ளை. ஔவை.சு புறநானூறு விளக்கவுரை,
தென்னிந்திய சைவ சித்தாந்த
நூற்பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -1007

33. பழனிச்சாமி.செ புறநானூற்றில் தமிழப்பண்பாடு,
சென்னை.
முதற்பதிப்பு -1981

34. பழனிச்சாமி.இரா சங்கப் பண்பாட்டியல்,
இயல் பிரிண்டஸ், தஞ்சாவூர்.
முதற்பதிப்பு – ஆகஸ்ட் - 2012.

35. பிள்ளை. கே.கே தமிழ்நாட்டு பாட நூல் நிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1981

36. மணிமேகலை. இரா. சங்கத் தமிழ்க் காதல்,
சிந்து காரைக்கால் பதிப்பு,
முதற்பதிப்பு – டிசம்பர் 2006

| | |
|---|---|
| 37. மணிமேகலை (உரை) | உ.வே.சாமிநாதயர் பதிப்பு,<br>சென்னை.<br>நான்காம்பதிப்பு -1949. |
| 38. மணி. பே.சு | சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்,<br>நியூ செஞ்சரி புக் ஹவுஸ்,<br>சென்னை. புதிப்பு -1986. |
| 39. மாணிக்கனார். ஆ | பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும்,<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>சென்னை.<br>பதிப்பு 1991. |
| 40. மாணிக்கம். வ.சுப | தமிழ்க்காதல்<br>நதிரகம் பதிப்பகம்,<br>காரைக்குடி பதிப்பு – 1962. |
| 41. மாணிக்கம். வ.சுப | சங்கநெறி<br>மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.<br>பதிப்பு -1962. |
| 42. மீனாட்சி சுந்தரம். த.பொ | தமிழ்நாட்டு வரலாறு<br>மணிவாசகர் நூலகம், சிதம்பரம்<br>பதிப்பு -1987. |

43. மீனாட்சி சுந்தரம். தே.பொ — **நற்றிணை சொற்பொழிவுகள்**
மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.
பதிப்பு -1980

44. முத்துலக்குமி.வே — **பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்,**
அனிதா பதிப்பகம், திருச்சி.
முதற்பதிப்பு -1999

45. வரதாசன்.மு — **நெடுந்தொகை விருந்து**
பாரிநிலையம்,
சென்னை -1996

46. வரதராசன்.மு — **திருக்குறள் (உரை)**
தென்னியந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை – பதிப்பு - 1991

47. வெள்ளைவாரணன். பி — **சங்ககாலத் தமிழ் மக்கள்,**
பாரத் பதிப்பகம், சென்னை,
முதற்பதிப்பு -2013

48. வேலாம்மாள்.இரா. — **தமிழ்இலக்கியத்தில் அணிகலன்கள்**
கேரளப் பல்கலைக்கழக ஆய்வுக்கட்டுரை
பதிப்பு - 1968

49. இராமநாதன்.பொ இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, இன்ஸ்டிடியூட் ஆப் ஸவுத் இந்தியன் ஸ்டடீஸ், சென்னை, பதிப்பு -1991

<u>அகராதிகள்</u>

50. ஸ்டீபன்.ஞா நெய்தல் நில வாழ்வியல், அனன்யா பதிப்பகம், தஞ்சாவூர். முதற்பதிப்பு -2015

51. சிங்காரவேலு முதலியார் அபிதான சிந்தாமணி, ஏசியன் எஜீகேஷனல் சர்வீஸ், புதுடெல்லி, பதிப்பு.

52. திவாகர முனிவர் சேர்த்தன் திவாகரம், கழக வெளியீடு, சென்னை. முதற்பதிப்பு -1958.

53. வாழ்வியற்களஞ்சியம், தொகுதி - இரண்டு தமிழ்ப்பல்கலைக்கழகம், தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர். முதற்பதிப்பு -1986.

54. வாழ்வியற் களஞ்சியம், **தொகுதி – ஐந்து,**
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தமிழ்பல்கலைக்கழக வெளியீடு,
முதற்பதிப்பு -1987.

# “சங்க இலக்கியங்களில் சமூகப் பண்பாட்டு நிலைக்களன்கள்”

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில்
முனைவர் **(Ph.D)** பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

முனைவர்பட்ட ஆய்வாளர்
**அ.ஜரீனாபேகம்**
சுழல்எண்: 1825120002

நெறியாளர்
**முனைவர் கோ. பிலவேந்திரன்**
பேராசிரியர், தமிழியல்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

தமிழியல் துறை




**அண்ணாமலைப் பல்கலைக்கழகம்**

அண்ணாமலைநகர் -608002

மார்ச் – 2022